# கலைமகள் உரைநூல்

(அரசியலார் தமிழ்ப்பாட நூலுக்கு உரியது)

## ஏழாம் வகுப்பு





ஆசிரியர்கள்

த்துவான், கோ. இரத்தினம் பிள்ளை

&

த்துவான், வே, பசுபதி

ப்பன் & கோ., கும்பகோணம்.



விலை ரூ. 1-60 பைசா

# கலைமகள் உரை நூல்

( அரசியலார் தமிழ் பாட நூலுக்கு உரியது )

## ஏழாம் வகுப்பு



வித்துவான் கோ. இரத்தினம் பிள்ளை
தலைமைத் தமிழாசிரியர்
பொன்னையா உயர்நிலைப் பள்ளி,
திருச்சிராப்பள்ளி.

&

புலவர் ம. வே. பசுபதி
விரிவுரையாளர்,
செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.



ஸ்ரீ குருவாயூரப்பன் & கோ.,
ஸ்ரீ வேத விநாயகர் தெரு :: கும்பகோணம்.

 [ விலை ரூ. 1—60

முதற் பதிப்பு—அக்டோபர் 1967



## இந்த உரை நூலில்

---

**செய்யுட் பகுதிகளுக்கு**

நூல், நூலாசிரியர் வரலாறு, பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விளக்கம், வினா-விடை ஆகிய பகுதிகளும்.

**உரைநடைப் பாடங்களுக்கு**

பாட வரலாறு, அருஞ்சொற்பொருள், வினா-விடை, மொழிப்பயிற்சி, இலக்கணம் ஆகிய பகுதிகளும் அடங்கியுள்ளன.

---



ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ், கும்பகோணம்.

# பொருளடக்கம்

## செய்யுட் பகுதி

## உரைநடைப் பகுதி



## மனப்பாடம் செய்யவேண்டிய செய்யுட்கள்

# கலைமகள் உரைநூல்

[அரசியலார் தமிழ்ப்பாட நூலுக்கு உரியது]

— ஏழாம் வகுப்பு —

## செய்யுட் பாடம்

## 1. வாழ்த்துப் பகுதி

### கடவுள் வாழ்த்து

கடவுளை வாழ்த்துவது கடவுள் வாழ்த்து. நற்செயலைச் செய்யத் தொடங்கும் பொழுது, அந் நற்செயல் இனிது முடிவதற்காக எல்லாம் வல்ல இறைவனை வாழ்த்தி வணங்குவது மரபு.

### (அ) தேவாரம்

சைவ அடியவர்களுள் 'சைவ சமய ஆசாரியர்கள்' என்ற சிறப்புப் பெற்றவர்கள் நால்வர் ஆவார். அவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் எனப்படுவர். அந் நால்வருள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் பாடிய பக்திப் பாடல்களே தேவாரம் எனப்படும். இம் மூவரைத் 'தேவார மூவர்' என்பர்.

தேவாரம்—தே+வாரம்; தே—இறைவன்; வாரம்—இசைப்பாடல். இறைவன் (சிவபெருமான்) புகழைப் பாடும் இசைப் பாடல் என்பது பொருள்.

தே+ஆரம் எனப் பிரிப்பதும் உண்டு. தே—இறைவன்; ஆரம்—மாலை. இறைவனுக்குச் சூட்டப்படும் பக்திப் பாமாலை என்பது இதற்குப் பொருள்.

இங்குப் பாடமாக வந்துள்ள 'வென்றானை' எனத் தொடங்கும் தேவாரம் திருநாவுக்கரசர் பாடியதாகும்.

### ஆசிரியர் வரலாறு

ஆசிரியர் — திருநாவுக்கரசர்
இயற்பெயர்—மருள் நீக்கியார்
வேறுபெயர்கள் — அப்பர்; வாகீசர்
பிறந்த ஊர்—திருவாமூர் (தென்னார்க்காடு மாவட்டம்)
தந்தை— புகழனார் தாய்—மாதினியார்
உடன்பிறந்தோர்— (தமக்கை) திலகவதியார்
குலம்—சைவ வேளாளர்
காலம்—கி. பி. ஏழாம் நூற்றாண்டு
சமகாலத்தவர்— திருஞானசம்பந்தர்

### சொற்பொருள்

புலன் ஐந்தும்-(சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும்) ஐந்து உணர்ச்சிகளையும்

வென்றானை-வென்றவனை

என்-என்னுடைய

தீவினை-பாவத்தை

கொன்றானை-அழித்தவனை

குணத்தாலே-நல்ல குணங்களுடன்

வணங்கிட-வணக்கம் செய்ய

நன்று ஆம்-நன்மை உண்டாகும்

நன்மனம்-(மேலும் அவ்வாறு வணங்கச்) சிறந்த உள்ளத்தை

வைத்திடும்-(அவன் நமக்கு) உண்டாக்குவான்

ஞானம் ஆம்-அறிவு ஒளியும் உண்டாகும்

ஒன்றானை-(இவ்வாறெல்லாம் நன்மைதரும்) ஒரு வடிவாய் விளங்கும் இறைவனை

என் உள்ளம்-என் மனம்

கண்டுகொண்டது-கண்டு கொண்டுள்ளது.

## பொழிப்புரை

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து உணர்ச்சிகளையும் வென்றவனும், என்னுடைய பாவத்தை அழித்தவனும் ஆகிய இறைவனை நல்ல குணங்களுடன் நாம் வணக்கம் செய்ய நன்மை உண்டாகும். மேலும் அவ்வாறு வணக்கம் செய்யச் சிறந்த உள்ளத்தை நமக்கு அவன் உண்டாக்குவான். அறிவு ஒளியும் உண்டாகும். இவ்வாறெல்லாம் நன்மைதரும் ஒருவடிவாய் விளங்கும் இறைவனை என் மனம் கண்டுகொண்டுள்ளது.

## விளக்கவுரை

இறைவன் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து உணர்ச்சிகளையும் வென்றவன்; பாவங்களை அழிப்பவன்; நல்ல உள்ளத்தில் அறிவு ஒளியை ஊட்டுபவன்; ஒருவடிவானவன்.

## இலக்கணம்

ஐந்தும் + என் = ஐந்துமென்

நன்மை + மனம் = நன்மனம்

வென்றான் + ஐ; கொன்றான் + ஐ, இவற்றில் உள்ள 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு

வென்றான், கொன்றான்—வினையாலணையும் பெயர்கள்.

நன்று + ஆம் = நன்றாம்

வணங்கிட—இறந்த கால வினையெச்சம்

உள்ளம்—எழுவாய்; கண்டுகொண்டது-பயனிலை.

## (ஆ) திருவாசகம்

சைவ சமய ஆசாரியர்கள் நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகர் சிவபெருமானைப் போற்றிப் பாடிய பாடல்களே திருவாசகம் எனப்படுவது.

'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பது பழமொழி. திருவாசகத்தை ஜி. யு. போப் என்ற ஆங்கிலேயரும், திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் என்னும் தமிழறிஞரும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளனர்.

திருவாசகத்தில் 51 பகுதிகள் உள்ளன. மொத்தம் 658 பாடல்கள் உள்ளன. இங்குப் பாடமாக உள்ள 'காணும் கரணங்கள்' என்று தொடங்கும் திருவாசகப் பாடல் திருப்பெருந்துறை என்னும் ஊரில் பாடிய, திருவாசகத்தின் 48 ஆவது பகுதியாகிய 'பண்டாய நான்மறை' என்ற பகுதியில் உள்ளது.

### ஆசிரியர் வரலாறு

ஆசிரியர்—மாணிக்கவாசகர்.

பெயர்க்காரணம்—அவர் பாடிய பாடல்கள் மாணிக்கம் போன்றவை; எனவே மாணிக்கவாசகர் எனப்பட்டார்.

இயற்பெயர்—திருவாதவூரர்.

பிறந்த ஊர்—திருவாதவூர் (மதுரை மாவட்டம்)

தந்தை-சம்புபாவிருதயர்; தாய்-சிவஞானவதியார்.

குலம்—அந்தணர்.

குடி-ஆமாத்தியர் (அமைச்சுத்தொழில் புரியும் குடி)

பட்டம்—தென்னவன் பிரமராயன்.

தொழில்—அரிமர்த்தன பாண்டியரின் அமைச்சர்.

இயற்றிய நூல்கள்-திருவாசகம், திருக்கோவையார்.

காலம்-தேவார மூவருக்கு முந்தியவர் (கி.பி. ஆறும் நூற்றாண்டுக்கு முன்) என்று சிலரும், தேவார மூவருக்குப் பிற்பட்டவர் (அஃதாவது வரகுண பாண்டியன் காலமாகிய கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு) என்று சிலரும் கூறுவர்.

## சொற் பொருள்

நெஞ்சே-மனமே!

காணும்-இறைவனை அறிய உதவும்

கரணங்கள்-கருவிகளாகிய

எல்லாம்-யாவையும்

பேரின்பம் என-பெரிய இன்பமயமானவை என்று அறிய

பேணும் - அக்கருவிகளைக் காக்கும்

அடியார்-அடியவர்களுடைய

பிறப்பு அகல-பிறவித் துன்பம் நீங்குமாறு

காணும்-அருள்விழி பார்க்கும்

பெரியானை - யாவற்றினும் பெரிய(அவ்) இறைவனை

பெருந்துறையில் - திருப்பெருந்துறை என்னும் ஊரிலிருந்து

என்றும்-எந்நாளும்

பிரியானை-நீங்காதவனை

வாயார-வாய் நிறைய

பேசு-நீ புகழ்ந்து பேசுவாயாக.

## பொழிப்புரை

மனமே! இறைவனை அறிய உதவும் கருவிகளாகிய யாவையும் பெரிய இன்பமயமானவை என்று அறிந்து அக்கருவிகளைக் காக்கும் அடியவர்களுடைய பிறவித் துன்பம் நீங்குமாறு அருள் விழிபார்க்கும் இறைவனும் பெருந்துறை என்னும் ஊரிலிருந்து எந்நாளும் நீங்காதவனும் ஆகிய பெருமானை நீ வாய் நிறையப் புகழ்ந்து பேசுவாயாக.

### விளக்கவுரை

கண் இறைவனைக் காண; காது அவன் புகழைக் கேட்க; வாய் அவனைப் பாட; மனம் அவனையே நினைக்க-என்பதையெல்லாம் உணர்ந்து அக்கருவிகளை எவன் காக்கிறானோ அவ்வடியவனின் பிறவித் துன்பத்தை இறைவன் நீக்குவான்.

### இலக்கணம்

காணும், பேணும்—பெயரெச்சங்கள்

பிறப்பு+அகல=பிறப்பகல

பெருமை+இன்பம்=பேரின்பம்

நெஞ்சே!—விளி

பிரியான்+ஐ—இதில் உள்ள 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு

பிரியான்—வினையாலணையும் பெயர்

பேசு—முன்னிலை ஏவல் வினைமுற்று

## (இ) திவ்வியப் பிரபந்தம்

திருமால் அடியவர்கள் ஆழ்வார்கள் எனப்படுவர். திருமால் பக்தியில் ஆழ்ந்திருப்பவர்கள் எனவே, அவர்கள் ஆழ்வார்கள் எனப்பெயர் பெற்றனர். ஆழ்வார்கள் பன்னிருவர். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், மதுரகவியாழ்வார், ஆண்டாள் என்பவர்

அப்பன்னிருவர் ஆவர். அவர்கள் திருமாலைப் புகழ்ந்து பாடிய பாடல்களின் தொகுதியே நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் எனப்படும்.

நூலின் பெயர்க்காரணம்: நான்கு + ஆயிரம் + திவ் வியம் + பிரபந்தம் எனப் பிரிக்கலாம். இத்தொகுதி நாலாயிரம் பாடல்களைக் கொண்டது. திவ்வியம்—சுவை யானது (அல்லது) உயர்வானது. பிரபந்தம்—இலக்கி யம். நாலாயிரம் பாடல்களைக் கொண்ட சுவையான இலக்கியம் என்பது இத்தொடரின் பொருள். பகுப்பு - முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி எனத் திவ்வியபிரபந்தத்தை நான்கு பிரிவாக்கியுள்ளனர். இங்குப் பாடமாக வந்துள்ள 'உயர்வற உயர்நலம்' எனத் தொடங்கும் பாடல் நம்மாழ்வாரால் இயற்றப்பட்டது; திருவாய்மொழி என்னும் பகுதியில் உள்ளது.

### ஆசிரியர் வரலாறு

ஆசிரியர்—நம்மாழ்வார்

சிறப்புப் பெயர்கள்—மாறன், சடகோபன்

ஊர்—ஆழ்வார் திருநகரி எனப்படும் திருக்குருகூர் (திருநெல்வேலி மாவட்டம்)

தந்தை—காரியார்; தாய்—உடைய நங்கை

காலம்—கி. பி. எட்டாம் நூற்றாண்டு

சிறப்பு — பன்னிரண்டு ஆழ்வார்களில் மிகச் சிறந்தவர்

## சொற் பொருள்

என்மனனே - என்னுடைய மனமே!

உயர்வு அற - மற்றவர்கள் உயர்வு அற்றுபோகும் படி

உயர்நலன் உடையவன் - உயர்ந்த நற்குணங்களை உடையவர்

யவன் - யாரோ

மயர்வு அற - அறியாமை ஒழிய

மதி நலம் - ஞானமும் பக்தியும்

அருளினன் - (நமக்கு) உண்டாக அருள் செய்தவர்

யவன் - யாரோ

அயர்வுஅறும் - அறியாமை நீங்கிய

அமரர்கள்அதிபதி - தேவர்களுக்குத் தலைவர்

யவன் - யாரோ

அவன் - அந்தக்கடவுளின்

துயர் அறு - (அனைத்து உயிர்களின்) துன்பத்தையும் நீக்குகின்ற

சுடர் அடி - ஒளிமயமான திருவடிகளை

தொழுது - வணங்கி

எழு - உயர்ச்சி பெறுவாயாக.

### பொழிப்புரை

என்னுடைய மனமே! மற்றவர்கள் உயர்வு அற்றுப் போகும்படி உயர்ந்த நற்குணங்களை உடையவர் யாரோ, அறியாமை ஒழிய நமக்கு ஞானமும், பக்தியும் உண்டாக அருள் செய்பவர் யாரோ, அறியாமை நீங்கிய தேவர்களுக்குத் தலைவர் யாரோ அந்தக் கடவுளின், அனைத்து உயிர்களின் துன்பத்தையும் நீக்குகின்ற ஒளிமயமான திருவடிகளை வணங்கி உயர்ச்சி பெறுவாயாக.

### விளக்கவுரை

எல்லாரினும் உயர்ந்தவன் கடவுளே. அவன் நம்முடைய அறியாமையைப் போக்குவான். நமக்கு

அறிவையும், பத்தியையும் அருளுவான். அவன் தேவர்களுக்கும் தலைவன். அக்கடவுளின் திருவடிகளை வணங்கினால் உயர்ச்சி பெறலாம்.

### இலக்கணம்

உயர்வு + அற = உயர்வற
மயர்வு + அற = மயர்வற
உயர்வு, மயர்வு—முற்றியலுகரம்
தொழுது + எழு + என் = தொழுதெழென்
எழு—முன்னிலை ஏவல் வினைமுற்று
மனனே—விளி

## (ஈ) இரட்சணிய யாத்திரிகம்

இந்நூல் கிறித்தவசமய இலக்கியம் ஆகும். ஆங்கிலத்தில் ஜான் பனியன் என்பவர் எழுதிய பரதேசியின் மோட்சப் பயணம் (Pilgrim's Progress) என்னும் நூலைத் தழுவி எழுதப்பட்டதே இரட்சணிய யாத்திரிகம். இந்நூல் ஐந்து பருவங்களைக்கொண்டது; சுமார் 4,000 பாடல்களைக்கொண்டது. இந்நூலை இயற்றியவர் ஹெச். ஏ. கிருஷ்ண பிள்ளை.

### நூலின் பெயர்க்காரணம்

இரட்சணியம் + யாத்திரிகம் எனப் பிரிக்கலாம். இரட்சணியம்-காத்தல்; யாத்திரிகம்-பயணம். காக்கும் சக்தி வாய்ந்த கர்த்தனை நோக்கிச் சென்ற பயணம் என்பது பொருள்.

### ஆசிரியர் வரலாறு

ஆசிரியர்—ஹெச். ஏ. கிருஷ்ண பிள்ளை
தந்தை—சங்கரநாராயண பிள்ளை

### விளக்கவுரை

உலகங்கள் மகிழவும், அறிவும் நன்மைகளும் சிறக்கவும், குறையும் பாவமும் ஒழியவும், எளியவர்கள் காப்பாற்றப் படவுமே ஆண்டவன் உலகில் தோன்றினன். தீனர்—எளியவர்கள்; ரட்சகன்—காப்பவன்.

### இலக்கணம்

வானமும்—என்பதில் உள்ள 'உம்' இடைச்சொல்
நனி—உரிச்சொல்
ஒழிய—வினையெச்சம்
தோன்றிய—பெயரெச்சம்
சிந்தித்து + ஏத்துவாம்=சிந்தித்தேத்துவாம்
ஏத்துவாம்—தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று

## (உ) சீறுப்புராணம்

இந்நூல் முஸ்லிம் சமய இலக்கியம் ஆகும். இது முகமது நபிநாயகத்தின் வரலாற்றைக் கூறுவது. உமறுப் புலவர் என்பவரால் எழுதப்பட்டது.

பெயர்க் காரணம் :

சீறு+புராணம் எனப் பிரிக்கலாம். சீறு என்பதற்கு அரபு மொழியில் பெரியோர் புகழ் என்பது பொருள். எனவே, சீறுப் புராணம் என்பதற்குச் செயற்கு அரிய செயல்கள் செய்த பெரியோரின் புகழ்பாடும் வரலாற்று இலக்கியம் என்பது பொருள்.

### ஆசிரியர் வரலாறு

ஆசிரியர்—உமறுப் புலவர்
ஊர்—கீழக்கரை ( இராமநாதபுர மாவட்டம் )
தந்தை—சேகு முதலியார்
மதம்— இஸ்லாமியம்
குலம்—குறைஷி (மதகுரு)

இவர் ஆசிரியர்—கடிகை முத்துப் புலவர்

இவரை ஆதரித்தவர்—அப்துல் காசிம் (சீதக்காதியின் ஆசிரியர்)

சிறப்பு—எட்டையபுரம் அவைக்களப் புலவராக இருந்தமை

காலம்—கி. பி. 17ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி

## சொற் பொருள்

ஆதிநாயகனே- முதன்மையான தலைவனே!

பேதியா-மாறுபடாத

சோதி-ஒளிமயமான

மாமுதலே-பெரிய பொருள்கள் யாவற்றிற்கும்முதலானவனே!

இருவிழி சிவந்து-இரண்டு கண்களும் செந்நிறம் அடைந்து

கனல்பொறி தெறிப்ப-நெருப்புப் பொறிகள் சிதற

எடுத்த கை-கைகளில் தாங்கிய

கதையினுல்-தண்டாயுதத்தினுல்

உருக்கி வரும்-அதட்டிக் கொண்டுவரும்

அவர் – ( முன்கர், நக்கீர் என்கின்ற ) அவர்கள்

எதிர் நின்று – எனக்கு முன்னுல் நின்று

ஒருமொழி கேட்ப- ஒரு சொல்லை வினவ

மறுமொழி-( நான் ) அதற்கு விடையை

கொடுத்திட-சொல்ல

அறியேன் – உணராதவனுக இருக்கிறேன்

தருமமும் -புண்ணியத்தையும்

பொறையும்-பொறுமையையும்

அறிவும்-ஞானத்தையும்

மற்று அறிந்து - தெரிந்து கொண்டு

உன் தன்னையும்-உன்னைப் பற்றியும்

என்னையும்-என்னைப் பற்றியும்

அறிய – அறிந்து கொள்வதற்கு

பெருவரம் தருவாய்- பெரிய வரத்தை எனக்குத் தந்து அருள்வாயாக.

பொழிப்புரை

முதன்மையான தலைவனே! மாறுபடாத ஒளி மயமான பெரும் பொருள்கள் யாவற்றிற்கும் முதலான வனே! இரண்டு கண்களும் சிவந்து, நெருப்புப் பொறிகள் சிதற, கைகளில் தாங்கிய தண்டாயுதத் தினல் அதட்டிக்கொண்டு வரும் முன்கர், நக்கீர் என்கின்ற அவர்கள் எனக்கு முன்னல் நின்று ஒரு சொல்லை வினவ, நான் அதற்கு விடையைச்சொல்ல அறியாதவனுக இருக்கிறேன். புண்ணியத்தையும், பொறுமையையும், ஞானத்தையும் தெரிந்துகொண்டு, உன்னைப் பற்றியும், என்னைப்பற்றியும் அறிந்து கொள் வதற்குப் பெரிய வரத்தை எனக்குத் தந்து அருள்வாயாக.

விளக்கவுரை

முன்கர், நக்கீர், என்ற இருவரும் தேவர்கள். அவர்கள் இருவரும் கடவுளின் ஆணைப்படி உடலை விட்டுப் பிரிந்த உயிர்களை விசாரித்துத் தீர்ப்பு வழங்கு வார்கள். அவர்கள் பார்க்க அஞ்சும்படியாக இருப்பர்.

இலக்கணம்

இரண்டு + விழி = இருவிழி
சிவந்து, தெறிப்ப, உருக்கி, கேட்ப–வினையெச்சங்கள்
கனல் + பொறி = கனற்பொறி
எடுத்த – பெயரெச்சம்
அறியேன் – எதிர்மறை வினைமுற்று
மற்று + அறிந்து + உன் + தன்னையும் = மற்றறிந்துன் றன்னையும்
தருவாய் – முன்னிலை எதிர்கால வினைமுற்று
நாயகனே, முதலே – விளிகள்
பேதியாத–எதிர் மறைப் பெயரெச்சம்

## வினுவிடை

1. திருநாவுக்கரசரின் உள்ளம் எத்தகைய இறைவனைக் கண்டு கொண்டது?

திருநாவுக்கரசரின் உள்ளம், சுவை, ஒளி, ஊறு ஓசை, நாற்றம் என்னும் ஐந்து உணர்ச்சிகளையும், வென்றவனும், பாவத்தை அழிப்பவனும், தன்னை நல்ல குணங்களுடன் வணங்குகின்றவர்களுக்கு நன்மையை உண்டாக்குபவனும், அவ்வாறு வணங்குவதற்குச் சிறந்த உள்ளத்தை உண்டாக்குபவனும், அறிவு ஒளியைத் தருபவனும், ஒருவடிவாய் விளங்குபவனும் ஆகிய இறைவனைக் கண்டு கொண்டது.

2. மாணிக்கவாசகர் நெஞ்சை அழைத்து யாது கூறுகிறார்?

மாணிக்கவாசகர் நெஞ்சை அழைத்து 'மனமே! இறைவனை அறிய உதவும் கருவிகளாகிய யாவையும் பெரிய இன்ப மயமானவை என்று அறிந்து, அக் கருவிகளைக் காக்கும் அடியவர்களுடைய பிறவித் துன்பம் நீங்குமாறு அருள்விழியால் பார்க்கும், இறைவனும், திருப்பெருந்துறை என்னும் ஊரிலிருந்து எந்நாளும் நீங்காதவனும் ஆகிய பெருமானை நீ வாய் நிறையப் புகழ்ந்து பேசுவாயாக' என்று கூறுகிறார்.

3. யாருடைய சுடரடியைத் தொழவேண்டும் என நம்மாழ்வார் கூறுகிறார்?

'மற்றவர்கள் உயர்வு அற்றுப்போகும்படி உயர்ந்த நற்குணங்களை உடையவர் யாரோ, அறியாமை ஒழிய, நமக்கு ஞானமும் பக்தியும் உண்டாக அருள்செய்பவர் யாரோ, அறியாமை நீங்கிய தேவர்களின் தலைவர் யாரோ அனைத்து உயிர்களின் துன்பத்தையும் நீக்கு

கின்ற அந்தக் கடவுளின் ஒளிமயமான திருவடிகளைத் தொழவேண்டும்' என்று நம்மாழ்வார் கூறுகிறார்.

4. தீனரட்சகன் எதற்காகத் தோன்றினன்?

தேவர் உலகமும் மண்ணுலகமும் மகிழ்ச்சிகொண்டு உயர்வதற்காகவும், யாவர்க்கும் அறிவும் நன்மைகளும் மிகவும் சிறப்பதற்காகவும், உடலுக்கு உள்ள குறைவும் உயிர் செய்த பாவமும் ஒழிந்து போவதற்காகவும் தீனரட்சகன் தோன்றினன்.

5. ஆதி நாயகனை நோக்கி உமறுப் புலவர் வேண்டுவன ?

'முதன்மையான தலைவனே! மாறுபடாத ஒளிமயமான பெரும் பொருள்கள் யாவற்றிற்கும் முதலானவனே! இரண்டு கண்களும் சிவந்து நெருப்புப் பொறிகள் சிதற, கைகளில் தாங்கிய தண்டாயுதத்தினல் அதட்டிக்கொண்டு வரும் முன்கர், நகீரர் என்கின்ற அவர்கள் எனக்கு முன்னல் நின்று ஒரு சொல்லை வினவ, நான் அதற்கு விடையாகச் சொல்ல எதுவும் அறியாதவனுக இருக்கிறேன். புண்ணியத்தையும், பொறுமையையும், ஞானத்தையும் தெரிந்து கொண்டு உன்னைப்பற்றியும் என்னைப் பற்றியும் அறிந்து கொள்வதற்குப் பெரிய வரத்தை எனக்குத் தந்தருள்வாயாக' என்று ஆதிநாயகனை உமறுப்புலவர் வேண்டுகிறார்.

6. நும் பாடப்பகுதியில் வந்துள்ள சீறாப்புராணப் பாடலை அடிமாருமால் எழுதுக.

---

# 2. நீதிப் பகுதி

## திருக்குறள்

இற்றைக்கு 1,800 ஆண்டுகளுக்கு முன் உள்ள காலத்தைச் சங்க காலம் என்பர். அக்காலத்தில் எழுதப்பட்ட தமிழ் நூல்கள் சிலவற்றைப் பதினெண் கீழ்க்கணக்கு என்று தொகுத்தார்கள். அவையாவன : நாலடியார், நான்மணிக்கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, களவழி நாற்பது, கார் நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, முப்பால், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி, கைந்நிலை என்பன. இப்பதினெண் கீழ்க்கணக்கில் முப்பால் எனக் குறிக்கப்பட்டிருக்கும் நூல் திருக்குறள்.

திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பால்களாக ஆக்கப்பட்டது. 133 அதிகாரங்களைக் கொண்டது. ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்துக் குறள்கள் உள்ளன. அறத்துப் பாலில் 38 அதிகாரங்களும், பொருட்பாலில் 70 அதிகாரங்களும், இன்பத்துப்பாலில் 25 அதிகாரங்களும் இருக்கின்றன. மொத்தம் 1,330 குறட்பாக்கள். திருக்குறளை இயற்றியவர் தெய்வப்புலவர் திருவள்ளுவர்.

திருக்குறளுக்குத் தமிழ்மறை, பொதுமறை, உத்தர வேதம், பொய்யா மொழி முதலிய வேறு பெயர்களும் உள்ளன.

### பெயர்க் காரணம்

திரு+குறள் எனப் பிரிக்கலாம். திரு - உயர்ந்த; குறள் - இரண்டடிகளைக் கொண்ட ஒருவகைச் செய்யுள். குறள் எனப்படும் ஒருவகைச் செய்யுளால் ஆக்கப்பட்ட உயர்ந்த நூல் என்பது பொருள்.

### ஆசிரியர் வரலாறு

பெயர் - திருவள்ளுவர்

சிறப்புப் பெயர்கள் - தெய்வப் புலவர், பொய்யில் புலவர், பெருநாவலர், செந்நாப்போதார், மாதானுபங்கி முதலியன.

ஊர்-மைலாப்பூர் என்றும் மதுரை என்றும் கூறுவர். இவர் வரலாறு திட்டமாக அறிதற்கில்லை.

காலம்-இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் என்பர்.

தொழில்-அரசனுக்கு உள்படு கருமத் தலைவராக இருந்திருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது.

குறிப்பு : நம் பாடப் பகுதியில் உள்ள குறட்பாக்களில் 1 முதல் 14 முடிய உள்ள குறட்பாக்கள் அறத்துப்பாலில் உள்ளவை. 15 முதல் 30 முடிய உள்ள குறட்பாக்கள் பொருட்பாலில் உள்ளவை.

## வான் சிறப்பு

(கடவுள் ஆணையால் உலகை வாழவைக்கும் மழையினது சிறப்பைக் கூறுவது.)

# 1. வான் அமிர்தம்

## சொற்பொருள்

வான்–மழையானது

நின்று – இடையருது பொழிந்து

உலகம்–உலகத்தினை

வழங்கி வருதலால்– வாழவைத்து வருவதனல்

தான்–அம் மழைதான்

அமிதலம் என்று– (நிலையாக வாழவைக்கும்) அமிர்தம் என்று

உணரற்பாற்று–(நாம்) உணரும் தன்மையை உடையது.

## பொழிப்புரை

மழையானது இடையருது பொழிந்து உலகத்தினை வாழவைத்து வருவதனல் அம் மழைதான் நிலையாக வாழவைக்கும் அமிர்தம் என்று நாம் உணரும் தன்மையை உடையது.

## விளக்கவுரை

அமிர்தம் உண்டவர்கள் இறக்காமல் நிலையாக வாழ்வர். அவ்வமிர்தத்தைப் போல உலகை வாழவைக்கும் தன்மை மழைக்கே உண்டு. எனவே, மழையை அமிர்தம் என்று வள்ளுவர் கூறுகிருர்.

## இலக்கணம்

வான் + நின்று + உலகம் = வானின்றுலகம்

## 2. உழவரும் மழையும்

### சொற்பொருள்

புயல் என்னும் வாரி - மேகம் என்று சொல்லப் படும் மழை
வளம் குன்றிக்கால்-(தன்) பயனைக் குறைக்குமே யானல்
உழவர் - உழவர்கள்
ஏரின் உழாஅர்-கலப்பை கொண்டு (நிலத்தை) உழமாட்டார்கள்,

### பொழிப்புரை

மேகம் என்று சொல்லப்படும் மழை, தன்பயனைக் குறைக்குமேயானல் உழவர்கள் கலப்பை கொண்டு நிலத்தை உழமாட்டார்கள்.

### விளக்கவுரை

மழை இல்லையேல் நிலத்தை உழுது பயனில்லை; எனவே உழவர்கள் நிலத்தை உழமாட்டார்கள்.

### இலக்கணம்

உழார் என்பது உழாஅர் என்று அளபெடுத்தது.
உழாஅர் – எதிர்மறை வினைமுற்று; இதற்கு உழவர் எழுவாய்

## அறன் வலியுறுத்தல்

(தருமத்தின் வலிமையைச் சிறப்பித்துக் கூறுவது.)

## 3. அறன் வலியுறுத்தல்

### சொற்பொருள்

அறவினை- நல்ல செயல்களை
ஒல்லும்வகையான்- இயலும் வகைகளில்
செல்லும் வாய் எல்லாம்- முடியும் இடங்களில் எல்லாம்
ஓவாதே-இடைவிடாமல்
செயல்-(நீ)செய்வாயாக.

### பொழிப்புரை

நல்ல செயல்களை, இயலும் வகைகளில், முடியும் இடங்களில் எல்லாம் இடைவிடாமல் நீ செய்வாயாக.

### விளக்கவுரை

வாய்ப்பு உள்ள பொழுதெல்லாம் முடிந்த அளவு இடைவிடாமல் அறம் செய்யவேண்டும்.

### இலக்கணம்

ஒல்லும்—பெயரெச்சம்
செயல்—வியங்கோள் வினைமுற்று

## 4. அறமும் ஆரவாரமும்

### சொற்பொருள்

மனத்துக்கண் - (ஒருவன்) தன் மனத்தில்

மாசு இலன் ஆதல் - குற்றம் இல்லாதவன் ஆகுக

அறன் அனைத்து - அறம் என்பது அவ்வளவே

பிற - (அவ்வறம் அல்லாத) சொல்லும் செயலும்

ஆகுலம் நீர - (பயனற்ற) ஆரவாரத் தன்மை உடையன

### பொழிப்புரை

அறம் செய்பவன் தன் மனத்திலே குற்றம் இல்லாதவனாக விளங்க வேண்டும். அறம் என்பது அவ்வளவே உடையது. அதுவல்லாத சொல்லும் செயலும் பயனற்ற ஆரவாரத்தன்மை உடையனவாகும்.

### விளக்கவுரை

தன்னலம் கருதுதல், பொறாமை முதலிய குற்றங்கள் உடைய மனத்துடன் செய்யப்படும் அறம் பயனற்றது. குற்றம் அற்ற மனத்துடன் செய்யப்படும் அறமே

இப்பிறப்புக்கும் மறுபிறப்புக்கும் பயன் அளிக்கவல்லது. மனமாசுடன் செய்யப்படும் அறங்கள் பயனைக் கருதாமல் புகழை விரும்பியதாகவே அமையும். அவையே ஆரவாரம் உடையன. 'ஆகுலம் நீர' எனக் குறிக்கப்படுவது அவ்வகை அறங்களையே.

இலக்கணம்

மனம்+அத்து+கண் = மனத்துக்கண்; அத்து - சாரியை; கண் - ஏழாம் வேற்றுமை உருபு.

மாசு+இலன் = மாசிலன்

ஆதல் - வியங்கோள் வினைமுற்று

அனைத்து+அறன் = அனைத்தறன்

நீர - பலவின்பால் வினைமுற்று; இதற்குப் 'பிற' என்பது எழுவாய்.

## இல்வாழ்க்கை

(இல்லாளோடு கூடி வாழும் சிறப்பைக் கூறுவது.)

## 5. இயல்பினான் இல்வாழ்வான்

சொற் பொருள்

இல்வாழ்க்கை - இல்லற வாழ்க்கையை

வாழ்பவன் என்பான் - (நடத்தி) வாழ்பவன் என்று சொல்லப்படுபவன்

இயல்பினான் - உரியமுறையுடன்

முயல்வாருள் எல்லாம் - இன்பங்களை விடுவதற்கு முயல்பவராகிய எல்லாருள்ளும்

தலை - மிக்கவன் ஆவான்.

பொழிப்புரை

இல்லற வாழ்க்கையை முறையுடன் நடத்தி வாழ்பவன் என்று சொல்லப்படுபவன் இன்பங்களை விடுவதற்கு முயல்பவராகிய எல்லாருள்ளும் மிக்கவன் ஆவான்.

### விளக்கவுரை

இன்பங்களை வெறுத்து விட்டுவிட முயல்பவர்கள் அம்முயற்சியில் வெற்றிபெறுவார்கள் என்று உறுதியாகச் சொல்லமுடியாது. எனவே அவர்களைக் காட்டிலும் இன்பங்களை முறையுடன் ஏற்கும் இல்லறத்தவனே உயர்ந்தவன்.

### இலக்கணம்

வாழ்பவன் + என்பான் = வாழ்பவனென்பான்
எல்லாம் + தலை = எல்லாந்தலை

## 6. வாழ்வாங்கு வாழ்பவன்

### சொற்பொருள்

வையத்துள் - உலகில்

வாழ்வாங்கு - வாழத் தகுந்த முறைப்படி

வாழ்பவன் - வாழ்க்கையை நடத்துபவன்

வான் உறையும் - மேல் உலகத்தில் நிலைத்து வாழும்படியான

தெய்வத்துள் - தேவருள் ஒருவனாக

வைக்கப்படும் - வைத்து மதிக்கப்படுவான்.

### பொழிப்புரை

உலகில் வாழத்தகுந்த முறைப்படி வாழ்க்கையை நடத்துபவன், மேல் உலகத்தில் நிலைத்து வாழும்படியான தேவருள் ஒருவனாக வைத்து மதிக்கப்படுவான்.

### விளக்கவுரை

உலகில், வாழும் முறையோடு வாழ்ந்தால் இப்பிறப்பிலே புகழ் கிடைக்கும்; மறு பிறப்பிலே தேவர் உலகில் இருக்கலாம். வாழும் முறையோடு வாழ்தல் என்பது அறத்திற்கு மாறுபடாமல் வாழ்தல் ஆகும்.

### இலக்கணம்

வையம்+அத்து+உள்=வையத்துள்; அத்து-சாரியை

வான்+உறையும் – வானுறையும்

உறையும் – பெயரெச்சம

## இனியவை கூறல்

(மனத்தின் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் இனிய சொற்களைக் கூறுதலின் சிறப்பு.)

## 7. கனியும் காயும்

### சொற்பொருள்

இனிய– (புண்ணியம் தரக்கூடிய) இனிய சொற்களும்

உள ஆக– உள்ளனவாய் இருக்க

இன்னாத– (கேட்பவருக்கு) வருத்தம்தரும் சொற்களை

கூறல்–(ஒருவன்) சொல்லுவது

கனி இருப்ப– (இனிமையான உண்ணத் தக்க) பழங்கள் இருக்கவும்

காய்–(இனிமை இல்லாத, உண்ணத்தகாத) காயை

கவர்ந்தற்று - பறித்து உண்பது போன்றது.

### பொழிப்புரை

உலகில் புண்ணியம் தரக்கூடிய இனிய சொற்கள் இருக்கவும், கேட்பவருக்கு வருத்தம்தரும் சொற்களை ஒருவன் சொல்லுவது, இனிமையான உண்ணத்தக்க பழங்கள் இருக்கவும் இனிமை இல்லாத உண்ணத் தகாத காயைப் பறித்து உண்பது போன்றது.

### விளக்கவுரை

இனியகனி என்றது அதியமான் ஔவைக்கு அளித்த நெல்லிக்கனி போன்றவற்றை. இன்னாத காய் என்றது எட்டிக்காய், (காஞ்சிரங்காய்) போன்றவற்றை.

இனிய கனிகள் இனிமையும், உடலுக்கு நன்மையும் தருவதுபோல இனிய சொற்கள், பேசுபவர்க்கும் கேட்பவர்க்கும் இனிமையையும் நன்மையையும் தரும். இன்னாத காய் கசப்பும் உடலுக்குக் கேடும் தருவதைப் போலக் கடும் சொற்கள், பேசுபவர்க்கும் கேட்பவர்க்கும் வெறுப்பையும் தீமையையும் கொடுக்கும்.

இலக்கணம்

இனிய × இன்னாத – எதிர்ச்சொற்கள்

கூறல் – தொழிற் பெயர்

கனி + இருப்ப = கனியிருப்ப

இருப்ப – வினையெச்சம்

## 8. இன்சொல்லினால் விளையும் நன்மை

சொற் பொருள்

| | |
|---|---|
| நல்லவை - நல்லசொற்களை | அல்லவை – (அவனுடைய) பாவம் |
| நாடி – மனத்துள் ஆராய்ந்து | தேய – அழிய |
| இனிய - மகிழ்ச்சி தரும் சொற்களையே | அறம் – புண்ணியம் |
| சொலின் – (ஒருவன்) சொன்னால் | பெருகும் - வளரும் |

பொழிப்புரை

நல்ல சொற்களை மனத்துள் ஆராய்ந்து மகிழ்ச்சி தரும் சொற்களையே ஒருவன் சொல்வானானால் அவனுடைய பாவம் அழியப் புண்ணியம் வளரும்.

விளக்கவுரை

இனிய சொற்களைப் பேசுதலால் புண்ணியம் வளரும்; கடுஞ்சொற்களைப் பேசுதலால் பாவமே பெருகும். அறியாமல் செய்த பாவங்களையும், இன்சொல் பேசும் நற்பழக்கத்தால் தீர்த்துக் கொள்ளலாம். இக்கருத்துக்களை மனத்துள் நன்கு ஆராய்ந்து இன்சொற்களையே பேசவேண்டும். அல்லவை—அறம் அல்லாதவை; அதாவது பாவம்.

இலக்கணம்

தேய, நாடி, சொலின்—வினையெச்சங்கள்
பெருகும்— எதிர்கால வினைமுற்று.

ஈகை

(ஏழைகள் யாசித்தால் மறுக்காமல் கொடுப்பது.)

## 9. எது ஈகை?

சொற் பொருள்

வறியார்க்கு-தன்னிடம் ஒருபொருளும் இல்லாத ஏழைக்கு

ஒன்று-அவர்கேட்கும் ஒரு பொருளை

ஈவதே-(மனம் உவந்து) கொடுப்பதே

ஈகை-தருமம் ஆகும்

மற்று எல்லாம்- ஏனையதருமங்கள் எல்லாம்

குறி எதிர்ப்பை- கைம்மாறு கருதிக் கொடுப்பதாகிய

நீரது உடைத்து- தன்மையை உடையது.

பொழிப்புரை

தன்னிடம் ஒரு பொருளும் இல்லாத ஏழைக்கு, அவர்கேட்கும் ஒருபொருளை மனம் உவந்து கொடுப்பதே ஈகை ஆகும். பிறதருமங்கள் எல்லாம் கைம்மாறு கருதிக் கொடுப்பதாகிய தன்மை உடையது.

### விளக்கவுரை

குறித்த அளவு கொடுத்துக் குறித்த அளவு வாங்குவது குறி எதிர்ப்பை எனப்படும். நாணயமாற்று இல்லாத காலங்களில் இம்முறை பெரிதும் வழக்கத்தில் இருந்தது.

ஏழை அல்லாதவருக்குச் செய்யும் தருமம் வேறு ஒரு காலத்தில் அவரால் திரும்பச் செய்யப்படும். எனவே, அவ்வகைத் தருமங்கள் பெரும்பாலும் கடன் கொடுப்பது போன்றவையே ஆகும்.

### இலக்கணம்

வறியார்க்கு + ஒன்று + ஈவதே = வறியார்க்
கொன்றீவதே

வறியார்க்கு என்பதில் உள்ள 'கு' நான்காம்
வேற்றுமை உருபு

மற்று – இடைச்சொல்

நீரது + உடைத்து = நீரதுடைத்து.

## 10. பொருள் சேர்க்கும் இடம்

### சொற்பொருள்

அற்ருர் – வறுமை கொண்டவரது

அழி பசி – மிக்க பசியை

தீர்த்தல் – (தருமம் கருதி) நீக்குக.

பொருள் பெற்ருன் ஒருவன் – செல்வம் படைத்தவன் ஒருவன்

அஃது – அந்தச்செல்வத்தை

வைப்புழி – சேர்த்து வைக்கத் தகுந்த இடம் அதுவேயாகும்.

### பொழிப்புரை

பொருள் அற்ற வறியவர்களது மிக்க பசியைத் தருமம் கருதி நீக்க வேண்டும். அச்செயல் தான் செல்வம் படைத்த ஒருவன் அந்தச் செல்வத்தைச் சேர்த்து வைக்கும் இடமாகும்.

### விளக்கவுரை

இப் பிறப்பின் செல்வம் மறு பிறப்பில் உதவாது. ஆனால் இப்பிறப்பில் செய்யும் புண்ணியம் மறுபிறப்பில் உதவும். இப்பிறப்பில் நம்மிடம் உள்ள செல்வத்தால் வறியவரின் பசியைத் தீர்த்துப் புண்ணியம் தேடிக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் செல்வத்தைப் புண்ணியமாக மாற்றிச் சேமித்தவர்கள் ஆவோம்.

### இலக்கணம்

அஃது + ஒருவன் = அஃதொருவன்
பெற்றான் - பெறு, பகுதி

## வெகுளாமை

சினம் கொள்ள வேண்டிய காரணம் ஏற்படும் போதும் சினம் கொள்ளாமை.

## 11. சினமே பகை

### சொற்பொருள்

நகையும்–(முகத்தின்) சிரிப்பினையும்
உவகையும்–(மனத்தின்) மகிழ்ச்சியினையும்
கொல்லும்- அழிக்கும்படியான
சினத்தின் -கோபத்தினும்
பிறபகையும்- (ஒருவருக்கு) வேறு (கொடிய) பகைகளும்
உளவோ- இருக்கின்றனவா? (இல்லை.)

### பொழிப்புரை

முகத்தின் சிரிப்பினையும், மனத்தின் மகிழ்ச்சியையும் அழிக்கும்படியான கோபத்தினும், ஒருவருக்கு வேறு கொடிய பகைகளும் இருக்கின்றனவா? (இல்லை).

விளக்கவுரை

சினமே நமக்குப் பகை, அது நம் சிரிப்பையும் மகிழ்ச்சியையும் அழிக்கும்; துன்பத்தில் ஆழ்த்தும்.

இலக்கணம்

நகையும்—என்பதில் உள்ள 'உம்' இடைச்சொல்

கொல்லும்—பெயரெச்சம்

சினத்தின்—என்பதில் 'இன்' ஐந்தாம்வேற்றுமை உருபு

உளவோ—என்பதில் உள்ள 'ஓ' இடைச்சொல் வினப்பொருளில் வந்தது.

## 12. சினத்தை நினைக்காவிட்டால்

சொற் பொருள்

உள்ளத்தால்-(ஒருவன்) மனத்தாலும்

வெகுளி-சினத்தை

உள்ளான் எனின்- நினைக்க மாட்டான் என்ருல்

உள்ளிய எல்லாம்- (அவன் தான்பெற) நினைத்தவற்றை எல்லாம்

உடன் எய்தும்-ஒருங்கே அடைவான்.

பொழிப்புரை

ஒருவன் சினத்தை மனத்தாலும் நினைக்க மாட்டான் என்ருல் அவன் தான்பெற நினைத்த வற்றையெல்லாம் ஒருங்கே அடைவான்.

விளக்கவுரை

நமக்கு வரவேண்டிய நன்மைகளை எல்லாம் சினமே கெடுத்துவிடுகிறது. சினம் இல்லாமல் இருந்தால் வருவது தானே வரும்.

இலக்கணம்

உடன்+எய்தும்=உடனெய்தும்

எய்தும்—எதிர்மறைவினை

உள்ளான்—எதிர்மறை வினை.

## இன்னா செய்யாமை

எக்காரணத்தை முன்னிட்டும் பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாமல் இருத்தல்.

## 13. துன்பம் செய்தவருக்குத் தண்டனை

சொற்பொருள்

இன்னா செய்தாரை – (நமக்குத்) துன்பம் செய்தவர்களை

ஒறுத்தல்–தண்டிக்கும் வழியாவது

அவர்–(அவ்வாறு துன்பம் செய்த)அவர்

நாண – வெட்கப்படும் படியாக

நல் நயம் செய்து – (நாம்) நல்ல உதவிகளைச் செய்து

விடல்–(அவற்றை)மறந்து விடுதலே ஆகும்.

பொழிப்புரை

நமக்குத் துன்பம் செய்தவர்களைத் தண்டிக்கும் வழியாவது, துன்பம் செய்தவர்கள் வெட்கப்படும்படியாக நாம் நல்லுதவிகளைச் செய்து அவற்றை மறந்து விடுதலே ஆகும்.

விளக்கவுரை

நமக்கு ஒருவர் துன்பம் செய்தால் அவருக்குத் தண்டனை கொடுக்கவேண்டும் என நாம் விரும்புவது இயற்கை. அவர் செய்தபடியே நாமும் அவருக்குத் துன்பம் செய்தோமேயானால் மீண்டும் பகை வளருமேயொழியக் குறையாது. பதிலாக அவருக்கு நன்மை செய்தோமேயானால் அவர் வெட்கப்பட்டுத் திருந்துவார்.

நல்லுதவிகளைச் செய்தவரும், தான் செய்த நன்மை பற்றியும் அவன் செய்த கொடுமைகள் பற்றியும் பேசாமல் மறந்து விடவேண்டும். அதுவே பெருந் தன்மை.

இலக்கணம்

செய்தாரை என்பதில் உள்ள 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு.

ஒறுத்தல் – தொழிற் பெயர்.

நாண, செய்து – வினையெச்சங்கள்

விடல் – வியங்கோள் வினைமுற்று.

## 14. இன்னா செய்தலின் தீங்கு

சொற் பொருள்

பிறர்க்கு – (ஒருவர்) மற்றவருக்கு

முற்பகல் – நாளின் முன் பகுதியிலே

இன்னா – துன்பம்

செய்யின் – செய்தால்

பிற்பகல் – நாளின் பிற் பகுதியிலே

தமக்கு – அவர் தமக்கு

இன்னா–துன்பங்கள்

தாமே வரும் – (மற்றொரு வன் செய்யாமலேயே) தாமாகவே வரும்.

பொழிப்புரை

ஒருவர் மற்றொருவருக்கு நாளின் முற்பகுதியிலே துன்பம் செய்தாராயின், நாளின் பிற்பகுதியிலே அவருக்குத் துன்பங்கள் மற்றொருவன் செய்யாமல் தாமாகவே வரும்.

விளக்கவுரை

பிறருக்குத் துன்பம் செய்தால் உடன் நமக்குத் துன்பம் வரும் என்பது கருத்து. 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்ற முதுமொழியும் இக்குறளின் கருத்தைக் கொண்டதே.

### இலக்கணம்

பிறர்க்கு + இன்னா = பிறர்க்கின்னா

பிறர்க்கு என்பதில் உள்ள 'கு' நான்காம் வேற்றுமை உருபு

செய்யின்—வினையெச்சம்
தமக்கு + இன்னா = தமக்கின்னா
முன் + பகல் = முற்பகல்
பின் + பகல் = பிற்பகல்.

## கல்வி

## 15. கற்றலும் நிற்றலும்

### சொற் பொருள்

கற்பவை-கற்பதற்கு உரிய நூல்களை

கசடு அற-குற்றம் நீங்க

கற்க-(ஒருவன்) கற்க வேண்டும்

கற்றபின்-அப்படிக்கற்ற பிறகு

அதற்குத்தக-(தாம் கற்ற) அக்கல்விக்கு ஏற்ற நல் ஒழுக்க வழிகளிலே

நிற்க-நெறியாக ஒழுக வேண்டும்.

### பொழிப்புரை

ஒருவன் கற்கத் தகுந்த நூல்களைக் குற்றம் நீங்கக் கற்க வேண்டும். அப்படிக் கற்ற பிறகு அக் கல்விக்கு ஏற்ற நல்லொழுக்க வழிகளிலே நெறியாக ஒழுக வேண்டும்.

### விளக்கவுரை

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்களை உணர்த்தும் நூல்களைப் படிக்கவேண்டும். அப்படிப் படிக்கும் பொழுது ஐயம், மாறுபட உணர்தல் முதலிய குற்றங்கள் இல்லாதபடி படிக்க

வேண்டும். அவ்வாறெல்லாம் படித்தாலும் அந்நூல்களில் கூறிய நல்வழிகளில் நடக்காவிட்டால் படித்ததினுல் யாதொரு பயனும் இல்லை.

### இலக்கணம்

கற்க, நிற்க—வியங்கோள்கள்

கற்பவை—வினையாலணையும் பெயர்

அதற்கு—என்பதில் உள்ள 'கு' நான்காம் வேற்றுமை உருபு.

### சொற்பொருள்

| | |
|---|---|
| மணல் கேணி - மணலில் தோண்டிய கிணறு | மாந்தர்க்கு - மக்களுக்கு |
| தொட்ட அனைத்து - தோண்டிய அளவு | கற்ற அனைத்து - கற்கும் அளவுக்கு |
| ஊறும் - நீர் சுரக்கும் (அதைப்போல) | அறிவு ஊறும் - அறிவு பெருகும். |

### பொழிப்புரை

மணலில் தோண்டிய கிணறு தோண்டிய அளவு நீர் சுரக்கும். அதைப் போலக் கற்கக் கற்க மக்களுக்கு அறிவு பெருகும்.

### விளக்கவுரை

எவ்வளவுக்கெவ்வளவு முயன்று கற்கிறேமோ அவ்வளவுக் கவ்வளவு அறிவு பெருகும். கேணி மேலும் மேலும் நீர் சுரப்பது போல, நாம் மேலும் மேலும் கற்றல் வேண்டும்.

### இலக்கணம்

தொட்ட + அனைத்து = தொட்டனைத்து

கற்ற + அனைத்து = கற்றனைத்து

ஊறும்—வினைமுற்று.

## கல்லாமை

நூல்களைக் கற்காமல் வாழ்வை வீணாக்குவதை இழித்துக் கூறுவது.

## 17. கல்லாதவன் அறிவு அறிவாகாது

### சொற் பொருள்

**கல்லாதான்** - படிக்காதவனுடைய
**ஒட்பம்** – அறிவு உடைமை
**கழிய** – (சில நேரங்களில்) மிகவும்
**நன்று ஆயினும்** - சிறப்பாகக் காணப்பட்டாலும்
**அறிவு உடையார்** – கற்று அறிவு பெற்றவர்கள்
**கொள்ளார்** - (அதனை) ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்.

### பொழிப்புரை

படிக்காதவனுடைய அறிவு சில நேரங்களில் சிறப்பாகக் காணப்பட்டாலும், கற்று அறிவு பெற்றவர்கள் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

### விளக்கவுரை

நத்தை மணலில் செல்கிறது. அதன் சுவடு மணலில் பதிகிறது. அச்சுவடு பார்ப்பதற்கு ஏதோ ஓர் எழுத்தைப் போல இருக்கிறது. அதனால் நத்தை எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டது என்று சொல்லிவிட முடியாதல்லவா? அதைப் போலத்தான் கல்லாதவர்களும் சில சமயங்களில் அறிவு உள்ளவர்கள் போலக் காட்சி தருவார்கள். அதை நிலையானது என்று கொள்ளக் கூடாது.

### இலக்கணம்

கல்லாதான் × கற்றவன் – எதிர்ச்சொற்கள்
கழிய – இதில் 'கழி' என்பது உரிச்சொல்
நன்று + ஆயினும் = நன்றாயினும்

அறிவு + உடையார் = அறிவுடையார்
கொள்ளார் × கொள்வர்—எதிர்ச்சொற்கள்
கொள்ளார்—எதிர்மறை வினைமுற்று.

## 18. கல்லாதவர் பெற்ற செல்வம் செல்வம் அன்று

### சொற்பொருள்

கல்லார் கண்-கல்லாதவரிடம்
பட்ட திரு- உண்டான செல்வம்
நல்லார் கண்-(கற்ற) நல்லவரிடம்
பட்ட-உண்டான
வறுமையின்-வறுமையைக் காட்டிலும்
இன்னுது - துன்பம் தருவது ஆகும்.

### பொழிப்புரை

கல்லாதவரிடம் உண்டான செல்வம், கற்ற நல்லவரிடம் உண்டான வறுமையைக் காட்டிலும் துன்பம் தருவது ஆகும்.

### விளக்கவுரை

கல்லாதவன் செல்வம் பெற்றுல் தன் முனைப்பால் கெடுவான்; கற்றவருக்கு வரும் வறுமை அவரைக் கெடுக்காது; மேலும், மேலும் செம்மைப் படுத்தும்.

### இலக்கணம்

கல்லார்கண், நல்லார்கண்—என்பவற்றில் உள்ள 'கண்' ஏழாம் வேற்றுமை உருபு
பட்ட—இறந்த காலப் பெயரெச்சம்; படு-பகுதி
வறுமையின் என்பதில் உள்ள 'இன்' ஐந்தாம் வேற்றுமை உருபு
இன்னுது—எதிர்மறை வினைமுற்று; இதற்கு எழுவாய் 'திரு'
இன்னுது × இனியது—எதிர்ச் சொற்கள்

## கேள்வி

கேட்கத் தகுந்தவற்றைக் கற்றவர்கள் கூறக் கேட்டல்.

### 19. கேட்பினும் கேளாத செவி

சொற் பொருள்

கேள்வியால் – (நல்லவற்றைக்) கேட்பதால்

தோட்கப் படாத - துளைக்கப்படாத

செவி-காதுகள்

கேட்பினும் – (பிற ஓசை ஒலிகளைக்) கேட்டாலும்

கேளாத் தகையவே– கேட்காத தன்மை உடையனவே (செவிடாகவே கருதப்படும்.)

பொழிப்புரை

நல்லவற்றைக் கேட்பதால் துளைக்கப்படாத காதுகள் பிற ஓசை ஒலிகளைக் கேட்டாலும், கேட்காத தன்மை உடையனவே (செவிடேயாகும்.)

விளக்கவுரை

விலங்குகளின் காதுகள் கூட, ஓசை ஒலிகளைக் கேட்கின்றன. மனிதனுகப் பிறந்தவன் நல்லவற்றைக் கேட்டு உணர்ந்து மேன்மை பெறவேண்டும்; விலங்குகளோடு ஒத்தவனுகக் கூடாது.

இலக்கணம்

தோட்கப் படாத—எதிர்மறைப் பெயரெச்சம்

கேட்பினும் என்பதில் உள்ள 'உம்' இடைச்சொல்

கேளா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

தகைய—வினைமுற்று

தகையவே—என்பதில் உள்ள 'ஏ' இடைச்சொல்

## 20. கேள்வி இன்பம் அறியாதவர் இருந்தும் பயனில்லை

### சொற் பொருள்

செவியின் சுவை–கேள்வியால் அடையும் இன்பத்தினை

உணரா–அறியாத

வாய் உணர்வின் - வாய்ச் சுவையை மட்டும் உணரும்

மாக்கள் – அறிவு குறைந்த மக்கள்

அவியினும்–இறந்தாலும்

வாழினும்-வாழ்ந்தாலும்

என்–( அதனால் உலகத்துக்கு உண்டாகும் பயன்) என்ன? ( ஒரு பயனும் இல்லை. )

### பொழிப்புரை

கேள்வியால் அடையும் இன்பத்தினை அறியாத, வாய்ச் சுவையை மட்டும் உணரும் அறிவு குறைந்த மக்கள், இறந்தாலும் வாழ்ந்தாலும் அதனால் உலகத்துக்கு உண்டாகும் பயன் ஒன்றும் இல்லை.

### விளக்கவுரை

செவியால் உணரப்படும் சுவைகள் சொற்சுவை பொருட்சுவை; வாயால் நுகரப்படும் சுவைகள் கைப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, புளிப்பு, தித்திப்பு என்ற ஆறு.

### இலக்கணம்

செவியின் + சுவை + உணரா = செவியிற் சுவையுணரா

உணரா—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

என்—வினா

## அறிவு உடைமை

கல்வி கேள்விகளினுல் பெற்ற அறிவுடன் இயற்கை அறிவும் கொண்டு இருத்தலின் சிறப்பைக் கூறுவது.

## 21. உண்மையான அறிவு

### சொற் பொருள்

| | |
|---|---|
| எப்பொருள் – எந்தப் பொருளை | மெய்ப்பொருள் – உண்மையான பயனை |
| யார் யார் வாய்-எவர் எவர் வாயினுல் | காண்பது–காணும் திறமை உடையது |
| கேட்பினும் – சொல்லக் கேட்டாலும் | அறிவு-உண்மை அறிவு (எனப்படும்.) |
| அப்பொருள் - அந்தப் பொருளின் | |

### பொழிப்புரை

எந்தப்பொருளை எவர் எவர் வாயினுல் சொல்லக் கேட்டாலும், அந்தப் பொருளின் உண்மையான பயனைக் காணும் திறமை உடையதே உண்மையான அறிவு எனப்படும்.

### விளக்கவுரை

சொன்னவர் யார் என்று பார்க்காமல் சொல்லப் பட்டது என்ன, அதன் பயன் என்ன என்று அறிய வேண்டும். அவ்வாறு காணும் வல்லமையே இயற்கை அறிவு ஆகும்.

### இலக்கணம்

எ + பொருள் = எப்பொருள்; புறவினு

அ + பொருள் = அப்பொருள்; புறச் சுட்டு

காண்பது + அறிவு = காண்பதறிவு

# 22. எல்லாம் உடையவர்

## சொற்பொருள்

அறிவு உடையார்–அறிவு பெற்றிருப்பவர்கள்

எல்லாம் உடையார்– (ஒன்றும் இல்லாதவர் ஆயினும்) எல்லாம் பெற்றவர்களே ஆவர்

அறிவு இலார்–அறிவு இல்லாதவர்கள்

என் உடையரேனும்– பிற யாவும் பெற்றிருப்பவர் ஆயினும்

இலர்–ஒன்றும் இல்லாதவரே ஆவர்.

## பொழிப்புரை

அறிவு பெற்றிருப்பவர்கள் யாதொன்றும் இல்லாதவர் ஆயினும் எல்லாம் பெற்றவர்களே ஆவர்; அறிவு இல்லாதவர்கள் பிற யாவும் பெற்றிருப்பவர் ஆயினும் ஒன்றும் இல்லாதவரே ஆவர்.

## விளக்கவுரை

அறிவு உள்ளவர்கள் தம் அறிவால் பிற செல்வங்களை எளிதில் பெறலாம். அறிவு அற்றவர்கள் அவ்வாறு பெற இயலாது. இருக்கும் பொருள்களை அழியாமல் காக்கும் திறமையும், அழிந்தால் மீண்டும் ஈட்டும் திறமையும் அறிவு அற்றவர்களுக்கு இல்லாமையினாலே அவர்கள் என்ன பெற்றிருந்தாலும் பயனில்லை என்பதாம்.

## இலக்கணம்

அறிவு + உடையார் = அறிவுடையார்
அறிவு + இலார் = அறிவிலார்
என் + உடையர் = என்னுடையர்
இலர்—எதிர்மறை வினைமுற்று
இலர் × உளர் = எதிர்ச்சொற்கள்

## குற்றம் கடிதல்

மனத்தில் உண்டாகும் சினம் முதலிய குற்றங்கள் தோன்ருதவாறு அவற்றை வெறுத்து நீக்குதல்.

# 23. உயர்ந்த செல்வம்

### சொற் பொருள்

| | |
|---|---|
| **செருக்கும்**–கர்வமும் | இல்லார் – இல்லாதவர்களுடைய |
| **சினமும்**–கோபமும் | பெருக்கம் – செல்வமானது |
| **சிறுமையும்**– இழிந்த ஒழுக்கங்களும் | பெருமித நீர்த்து – மேம்பாட்டுத் தன்மை உடையது ஆகும். |

### பொழிப்புரை

கர்வமும், கோபமும், இழிந்த ஒழுக்கங்களும் இல்லாதவர்களுடைய செல்வமானது மேம்பாட்டுத் தன்மை உடையது ஆகும்.

### விளக்கவுரை

செல்வம், கர்வத்தை உண்டாக்கும்; சினத்தை உண்டாக்கும்; இழிந்த ஒழுக்கங்களை உண்டாக்கும். செல்வம் உடையவர்கள் இந்த மூன்று தீமைகளும் தம்மிடம் வராமல் காக்கவேண்டும்.

### இலக்கணம்

செருக்கும், சினமும், சிறுமையும் என்பவற்றில் உள்ள 'உம்', இடைச்சொற்கள்.

இல்லார் × உள்ளார்—எதிர்ச்சொற்கள்
நீர்த்து—வினைமுற்று.

# 24. வருமுன்னர்க் காத்தல் வேண்டும்

### சொற் பொருள்

| | |
|---|---|
| வருமுன்னர் - குற்றம் வருவதற்கு முன்னர் | எரி முன்னர்–தீயின் முன்பு |
| காவாதான்–(அதை வாராமல்) தடுத்துக் கொள்ளாதவனுடைய | வைத்தூறுபோல– வைக்கோல்போர் (அழிவது) போல |
| வாழ்க்கை - வாழ்வானது | கெடும் – அழிந்துவிடும். |

### பொழிப்புரை

குற்றம் வருவதற்கு முன்னர் அதை வாராமல் தடுத்துக் கொள்ளாதவன் வாழ்வானது, தீயின் முன்பு வைக்கோல் போர் அழிவது போல அழிந்துவிடும்.

### விளக்கவுரை

பழியும் குற்றமும் வந்த பிறகு வருந்திப் பயனில்லை. வரும் முன்பே, அவை வாராமல் காக்கவேண்டும். அப்படிக் காக்காவிட்டால் அவனது பெருவாழ்வும் அழிந்து ஒழியும்.

### இலக்கணம்

வரு என்பதில் 'வா' பகுதி
காவாதான் × காப்பான்–எதிர்ச்சொற்கள்
வாழ்க்கை–தொழிற்பெயர்
போல–உவமை உருபு; இடைச்சொல்
கெடும்–எதிர்கால வினைமுற்று
(வைத்தூறு–எழுவாய்)

## சிற்றினம் சேராமை

அற்பர் கூட்டத்துடன் எவ்வகையிலும் எப்பொழுதும் தொடர்பு கொள்ளாமை.

# 25. நல்லினத்தால் நற்பெயர் உண்டாகும்

## சொற்பொருள்

மாந்தர்க்கு-மக்களுக்கு

உணர்ச்சி - பொது உணர்வு

மனத்தான் ஆம் - மனம் கருவியாக உண்டாகும்

இன்னான்-இவன் இப்படிப் பட்டவன்

எனப்படும் சொல்-என்று உலகத்தவரால் சொல்லப்படும் சொற்கள்

இனத்தான் ஆம்-(அவன்) சேர்ந்து பழகும் இனத்தினால் உண்டாகும்.

## பொழிப்புரை

மக்களுக்குப் பொது உணர்வு மனம் கருவியாக உண்டாகும்; 'இவன் இப்படிப்பட்டவன்' என்று உலக மக்களால் சொல்லப்படும் சொற்கள், அவன் சேர்ந்து பழகும் இனத்தினால் உண்டாகும்.

## விளக்கவுரை

மனம் நல்லதாக இருந்தால் உணர்வு நல்லதாக இருக்கும்; இனம் நல்லதாக இருந்தால் நல்லவன் எனப்படுவான்.

## இலக்கணம்

மனத்தான் + ஆம் = மனத்தனாம்; 'ஆம்' வினைமுற்று

மாந்தர்க்கு என்பதில் உள்ள 'கு' நான்காம் வேற்றுமை உருபு.

மாந்தர்க்கு + உணர்ச்சி = மாந்தர்க் குணர்ச்சி

உணர்ச்சி—தொழிற் பெயர்

## 26. நல்லினத்தால் உண்டாவன

### சொற்பொருள்

மனம் தூய்மை - சிறப்பான அறிவை வெளிப்படுத்துதற்கு இடமான) மனத்தினது தூய்மைத் தன்மையும்

செய்வினை தூய்மை - செய்யும் தொழிலின் தூய்மைத் தன்மையும்

இரண்டும் - ஆகிய இரண்டும்

இனம் தூய்மை-பழகும் இனத்தின்) துய்மையை

தூ ஆ(க)-பற்றுக்கோடா கக்கொண்டு.

வரும்-ஒருவனுக்கு உண்டாகும்.

### பொழிப்புரை

சிறப்பான அறிவை வெளிப்படுத்துவதற்கு இடமான மனத்தினது தூய்மைத் தன்மையும், செய்யும் தொழிலினது தூய்மைத் தன்மையும் ஆகிய இரண்டும் பழகும் இனத்தின் தூய்மையைப் பற்றுக்கோடாகக் கொண்டு ஒருவனுக்கு உண்டாகும்,

### விளக்கவுரை

நல்லவர்களின் தொடர்பு இருந்தால் மனம் தூயது ஆகும்; செய்யும் செயலும் தூயதாக அமையும். தூ = பற்றுக்கோடு.

### இலக்கணம்

மனம் + தூய்மை = மனந்தூய்மை
இனம் + தூய்மை = இனந்தூய்மை
இரண்டு + உம் இரண்டும்; உம் இடைச்சொல்
தூ + ஆ = தூவா

## வலி அறிதல்

எடுத்த செயலை வெற்றிபெற முடிக்கப் பல வகைகளிலும் வலிமையை ஆராய்ந்து அறிதல்.

## 27. வலியறிதலின் பயன்

### சொற்பொருள்

**தம் உடை** - தம்முடைய

**வலி அறியார்** - வலிமையை ஆராய்ந்து அறியாமல்

**ஊக்கத்தின்** - மன எழுச்சியால்

**ஊக்கி** -(தம்மைவிடவலிமை மிக்கவரோடு) போர் செய்யத் தொடங்கி

**இடைக்கண்** - (அப்போர்) முடிவதற்கு முன்பே

**முரிந்தார்** - கெட்டவர்

**பலர்** -(உலகில்) பலராவர்.

### பொழிப்புரை

தம்முடைய வலிமையை ஆராய்ந்து அறியாமல், மன எழுச்சியால் உந்தப்பட்டுத் தம்மைவிட வலிமை மிக்கவரோடு போர் செய்யத் தொடங்கி, அப்போர் முடிவதற்கு முன்பே கெட்டவர் இவ்வுலகில் பலராவர்.

### விளக்கவுரை

அரசர் தம் வலிமையை ஆராய வேண்டும்: மாற்ருன் வலிமையையும் ஆராய வேண்டும்: மன எழுச்சிக்கு அடிமையாகக் கூடாது. தம் வலிமை மிகுந்திருந்தால் வினை தொடங்க வேண்டும்.

### இலக்கணம்

வலி + அறியார் = வலியறியார்

இடைக்கண் — என்பதில் உள்ள 'கண்' ஏழாம் வேற்றுமை உருபு

முரிந்தார் - பலர்பால் இறந்தகால வினைமுற்று

## சுற்றம் தழால்

உறவினர் தன்னைவிட்டு நீங்காதவாறு தழுவிப் பாதுகாத்தல். தழால் = தழுவுதல்.

# 28. சுற்றத்தாரைச் சூழ்ந்திருத்தல் வேண்டும்

## சொற்பொருள்

காக்கை-காகங்கள்

கரவா- (தமக்குக் கிடைத்த இரையை) மறைக்காமல்

கரைந்து உண்ணும்-தம் இனத்தையும் அழைத்துக் கூடி உண்ணும்

ஆக்கமும் – செல்வங்களும்

அன்ன-(காகத்தைப்) போன்ற

நீரார்க்கே-தன்மை உடையவருக்கே

உள-உள்ளன ஆகும்.

## பொழிப்புரை

காக்கைகள் தமக்குக் கிடைத்த இரையை மறைக்காமல் தம் இனத்தையும் அழைத்துக் கூடி உண்ணும்; காகத்தைப்போன்று சுற்றம் தழுவும் தன்மை உடையவருக்கே செல்வங்களும் உள்ளன ஆகும்.

## விளக்கவுரை

காகத்தைப் போன்று சுற்றம் தழுவும் குணம் வேண்டும். அப்படிப்பட்ட குணம் உள்ளவருக்கே செல்வம் சேரும் என்பதை அறிய வேண்டும்.

## இலக்கணம்

கரைந்து + உண்ணும் = கரைந்துண்ணும்
கரைந்து—வினையெச்சம்
உண்ணும்—எதிர்கால வினைமுற்று
ஆக்கமும் என்பதில் உள்ள ‘உம்’ இடைச்சொல்
நீரார்க்கு + ஏ = நீரார்க்கே; ‘கு’ 4ஆம் வேற்றுமை உருபு; ‘ஏ’ இடைச்சொல்
உள—பலவின் பால் வினைமுற்று

## செங்கோன்மை

செம்மையான நீதிகாக்கும் ஆட்சியின் சிறப்பைக் கூறுவது. ஒருபக்கமும் வளையாத கோல் போல, நீதி ஒருபக்கமும் சாயாது. ஆகையினால் செங்கோல் எனப் படுகிறது. செம்மை + கோல் = செங்கோல்.

## 29. கொடியவரைத் தண்டித்தல் குற்றமன்று

### சொற் பொருள்

வேந்து – அரசன்

கொடியாரை – கொடியவர்களை

கொலையின் – கொலையால்

ஒறுத்தல் – தண்டித்தல்

பைங்கூழ் - (உழவன் விளை விக்கும்) பசிய பயிரை

களைகட்டதனொடு–(செழிக்கச் செய்யக்) களைகளை நீக்குவதற்கு

நேர் – ஒப்பாகும்.

### பொழிப்புரை

அரசன் கொடியவர்களைக் கொலையால் தண்டித்தல் உழவன், தான் விளைவிக்கும் பயிரைச் செழிக்கச் செய்யக் களைகளை நீக்குவதற்கு ஒப்பாகும்.

### விளக்கவுரை

தீயவர்களைக் கொல்வது அரசனது கடமை. களையெடுத்தால் பயிர் செழித்து வளர்வதைப் போலத் தீயவர்களை ஒழித்தால் சமுதாயம் செழிக்கும்.

களைகட்டல் = களை எடுத்தல்.

### இலக்கணம்

கொடியார் + ஐ = கொடியாரை; இதில் உள்ள 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு

வேந்து + ஒறுத்தல் = வேந்தொறுத்தல்

ஒறுத்தல் — தொழிற்பெயர்

பசுமை + கூழ் = பைங்கூழ்

### கண்ணோட்டம்

பழகியவர்கள் கூறியவற்றை மறுக்காமல் உடன்படுதல். கண்பார்வை ஓடுதலால் கண்ணோட்டம் எனப் பட்டது. இதனையே 'தாட்சண்யம்' என்பர்.

## 30. கண்ணின் அணிகலம்

### சொற் பொருள்

கண்ணிற்கு – (ஒருவன்) கண்ணுக்கு
அணிகலன் – (அணியத் தக்க) அணியாவது
கண்ணோட்டம் – இரக்கம் கொண்ட பார்வை ஆகும்.
அஃது இன்றேல் – அக் கண்ணோட்டம் இல்லை யானல்
புண் என்று – (அவன் கண்கள் புண்கள் என்று உணரப்படும்(அறிஞரால்) கருதப்படும்.

### பொழிப்புரை

ஒருவன் கண்ணுக்கு அணியத்தக்க அணியாவது, இரக்கம் கொண்ட பார்வையே ஆகும். அவ்விரக்கம் கொண்ட பார்வை ஒருவன் கண்களில் இல்லையானல் (அவன் கண்கள் கண்களாக மதிக்கப்பட மாட்டா;) புண்களாகவே அறிஞர்களால் கருதப்படும்.

### விளக்கவுரை

புண் தன்னைக் கொண்டவனைத் துன்புறுத்துவதைப் போல, இரக்கப் பார்வை அற்ற கண்ணும் மற்றவர்களால் அவமதிக்கப் பட்டுத் தன்னைக்கொண்டவனை வருத்தும். எனவேதான் அருட்பார்வை, அற்ற கண்கள், புண்கள் எனப்பட்டன.

கண்ணிற்கு என்பதில் உள்ள 'கு' நான்காம் வேற்றுமை உருபு

கண்ணிற்கு + அணிகலம் = கண்ணிற் கணிகலம்

கண் + ஓட்டம் = கண்ணோட்டம்

அஃது + இன்றேல் = அஃதின்றேல்

இன்றேல்—எதிர்மறை வினையெச்சம்

புண் + என்று = புண்ணென்று

என்று + உணரப்படும் = என்றுணரப்படும்

## (ஆ) நாலடியார்

இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று 'ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி; நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி' என்ற பழமொழியில் நாலும் என்று குறிப்பிட்டது இந் நூலையே. இந் நூலைக் கற்றால் நல்ல வாக்குவன்மை ஏற்படும் என்பது தமிழர் நம்பிக்கை. இந்நூல் சற்றேறக் குறைய 1,800 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பர்.

பெயர்களும் காரணங்களும் :

இந்நூல் நாலடி, நாலடியார், நாலடி நானூறு என்ற பெயர்களால் வழங்கப்படும்.

நான்கு அடிகளை உடைய வெண்பாக்களால் ஆன நூல் என்பது 'நாலடி' என்பதற்குப் பொருள்.

'நாலடியார்' என்பதை நான்கு + அடி + ஆர் எனப் பிரிக்கலாம். ஆர் என்பது சிறப்புக்காக இடப்

பட்ட விகுதி. நான்கு அடிகளைக்கொண்ட பாடல்களை உடைய சிறப்புப் பொருந்திய நூல் என்பது பொருள்.

நான்கு அடிகளைக் கொண்ட வெண்பாப் பாடல்கள் நானூறு கொண்ட நூல் என்பதால் 'நாலடி நானூறு' என்றும் பெயர் பெற்றது.

### ஆசிரியர் வரலாறு

இந்நூல் சமண முனிவர்கள் பலரால் பாடப்பட்ட பாடல்களைக் கொண்டது என்றும், பாண்டியன் அவையில் பாடப்பட்டது என்றும் கூறுவர்.

இந்நூலைத் தொகுத்துப் பால் அதிகாரங்களாகப் பகுத்து உரை எழுதியவர் 'பதுமனார்' என்று கூறுவர்.

**நூலைப்பற்றி வழங்கும் வரலாறு :**

"சமண முனிவர்கள் எண்ணாயிரவர் தத்தம் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டதனால் பாண்டியனிடம் வந்தடைந்தனர். பாண்டியன் அவர்களை வரவேற்றுக் காத்தான். சில ஆண்டுகளில், முனிவர்கள் தத்தம் நாடுகளில் பஞ்சம் நீங்கிவிட்டது என்று அறிந்து தத்தம் ஊருக்குச் செல்ல விடை கொடுக்குமாறு பாண்டியனை வேண்டினர். புலமை மிக்க அத்துறவிகளைப் பிரியப் பாண்டியனுக்கு மனம் வரவில்லை. எனவே, அவர்களுக்கு விடை கொடுக்கக் காலம் தாழ்த்தினான். பாண்டியனின் மனநிலையை உணர்ந்த முனிவர்கள் தலைக்கொரு வெண்பாவாக எழுதிவைத்து விட்டுத் தத்தம்மூர்களுக்குச் சென்றனர். இதையறிந்த பாண்டியனின் துயர், சினமாக மாறியது. அப்பாடல்களை வையையாற்றிலே எறிந்தான். அவற்றுள் 400 பாடல்கள் நீரை எதிர்த்து வந்தன. அவையே நாலடியார் என்ற நூலாக அமைக்கப்பட்டது."

# 1. உலகத்தார் இயல்பு

## சொற்பொருள்

ஈர் குன்றம் நாட – (அருவி விழுதலினுல்) குளிர்ந்த மலைகளை உடைய நாட்டுக்குத் தலைவனே!

கால் ஆடு போழ்தில் – (ஒருவன்) செல்வனுய் வாழும் காலத்தில்

கழிகிளைஞர் – மிகுந்த சுற்றத்தார்கள்

வானத்து–ஆகாயத்தில்

மேல் ஆடு மீனின் – ஒளி வீசும் நட்சத்திரங்களை விட

பலர் ஆவர்–அதிக எண்ணிக்கையில் வந்து சூழ்ந்து கொள்வர்

ஏலா–பொறுக்க இயலாத

இடர்–வறுமை ஆகிய துன்பம்

ஒருவர் உற்றக்கால்– ஒருவர் அடையும் பொழுது

தொடர்பு உடையேம் என்பார்–நாங்கள் அவருடைய உறவினர் என்று சொல்லக்கூடியவர்கள்

சிலர்–சிலரே ஆவர்.

## பொழிப்புரை

அருவி விழுதலினுல் குளிர்ந்த மலைகளை உடைய நாட்டுக்குத் தலைவனே! ஒருவன் செல்வனுய் வாழும் காலத்தில் மிகுந்த சுற்றத்தார்கள் ஆகாயத்தில் ஒளி வீசும் நட்சத்திரங்களை விட அதிக எண்ணிக்கையில் வந்து சூழ்ந்து கொள்வார்கள்; பொறுக்க இயலாத வறுமையை அடையும் பொழுது 'நாங்கள் அவருடைய உறவினர்' என்று சொல்லக் கூடியவர்கள் ஒரு சிலரே ஆவார்கள்.

## கருத்துரை

மிக்க செல்வம் நம்மிடம் உள்ள பொழுது உறவினர் அல்லாதவர்களும் நமக்கு உறவினர் என்று கூறிச் சேருவர். செல்வம் அற்றபொழுது சிலரே நம் உறவினர் என்று கூறிக்கொள்வர்.

## விளக்கவுரை

வானத்தில் மின்னுவதால் நட்சத்திரத்திற்கு 'மீன்' என்று பெயர்.

செல்வம் உள்ள பொழுது கால் ஓரிடத்தில் தங்காது; நினைத்த இடத்திற்கெல்லாம் செல்லும். எனவே செல்வம் உள்ள காலம் என்பதைக் குறிக்கக் 'கால் ஆடு போழ்து' எனக் குறித்தார்.

## இலக்கணம்

போழ்து + இல் = போழ்தில்; 'இல்' 5 ஆம் வேற்றுமை உருபு

கழி—உரிச்சொல்

மீனில் என்பதில் உள்ள 'இல்' ஐந்தாம் வேற்றுமை உருபு

ஏலா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

நாட—விளி; ஆடுஉ முன்னிலை; இதற்கு நாடன் என்பது முதல் வேற்றுமை

தொடர்பு + உடையேம் = தொடர்புடையேம்

உடையேம்—தன்மைப் பன்மை வினைமுற்று.

# 2. கல்விச் சிறப்பு

## சொற் பொருள்

வைப்பு உழி - (கல்வியானது) கற்றுவைக்கும் மனமாகிய இடத்திலிருந்து

கோள்படா – (பிறரால்) எடுத்துக்கொள்ளப் படாது

வாய்த்து – (அக்கல்வி) மிக உண்டாகி

ஈயின் - மற்றவருக்குக் கற்பித்தால்

கேடு இல்லை – குறைவு இல்லை

மிக்க சிறப்பின் அரசர் - மிகவும் பெருமை பொருந்திய அரசர்

செறின் – கோபித்தால்

வவ்வார்-(அக் கல்வியைக்) கவரமாட்டார், எனவே

எச்சம் என – சேர்த்து வைக்கும் பொருள் என்று

ஒருவன் மக்கட்கு-ஒருவன் தன் பிள்ளைகளுக்கு

செய்வன - செய்ய வேண்டுவன

விச்சை – பலவகைக் கல்வி களே ஆகும்.

பிற அல்ல - மற்றைய (வீடு மாடு முதலிய) பொருள்கள் அல்ல.

## பொழிப்புரை

கல்வியானது கற்றுவைக்கும் இடமாகிய மனத்திலிருந்து பிறரால் எடுத்துக்கொள்ளப்படமாட்டாது. அக்கல்வி மிக உண்டாகி மற்றவருக்குக் கற்பித்தால் குறைவுபடாது. மிகவும் சிறப்புப் பொருந்திய அரசர் கோபித்தாலும் அக்கல்வியைக் கவரமாட்டார். எனவே, ஒரு மனிதன் தன் பிள்ளைகளுக்குச் சேர்த்து வைக்கும் பொருள் என்று செய்யவேண்டுவன பலவகைக் கல்விகளே ஆகும்; மற்றைய வீடு மாடு முதலிய பொருள்கள் அல்ல.

# 3. மைந்தரது கடமை

## சொற் பொருள்

சிதலை -(செல் எனப்படும்) கறையானல்
தினப்பட்ட - (அரித்துத்) தின்னப்பட்ட
ஆலமரத்தை-ஆலமரத்தை
அதன்வீழ் – அந்த மரத்தின் விழுதுகள்
மதலை ஆய்-தூண் போன்றவை ஆகி
ஊன்றி ஆங்கு-(பூமியில்) ஊன்றித் தாங்குவது போல

தந்தைகண் - தந்தையிடம்
குதலைமை-சோர்வு
தோன்றின்-ஏற்பட்டால்
தான்பெற்ற—அந்தத் தந்தை பெற்று வளர்த்த
புதல்வன்-மகன்
மறைப்ப-(முயன்று) மறைக்க
கெடும்-(தந்தைக்குத் தளர்ச்சி) கெட்டுப் போகும்

### பொழிப்புரை

கறையானல் அரித்துத் தின்னப்பட்ட ஆலமரத்தை அந்த மரத்தின் விழுதுகள் தூண் போன்றவை ஆகிப் பூமியில் ஊன்றித் தாங்குவதுபோலத் தந்தையிடம் சோர்வு ஏற்பட்டால் அந்தத் தந்தை பெற்று வளர்த்த மகன் முயன்று மறைக்கத் தந்தைக்குத் தளர்ச்சி கெட்டுப் போகும்.

### கருத்துரை

தந்தைக்கு உதவிகள் செய்து தந்தையின் தளர்ச்சியைப் போக்குவதே மைந்தரது கடமை ஆகும்.

### விளக்கவுரை

ஆலமரம் போன்றது குடும்பம். அடிமரம் மரத்தைத் தாங்குவது போலக் குடும்பத்தைத் தாங்குபவர் தந்தை. ஆலமரத்தைச் சிதல் அரிப்பது போன்றது, தந்தைக்கு வந்த தளர்ச்சி. விழுது.

மரத்தைத் தாங்குவது போன்றது, மகன் தந்தையின் தளர்ச்சியை முயன்று போக்குவது. இப்பாடலில் ஆலமரம் அடிமரம், விழுது, சிதல், அரித்தல் ஆகியவை உவமானம். குடும்பம், தந்தை, தந்தையின் தளர்ச்சி, மகன் ஆகியவை உவமேயம்.

### இலக்கணம்

மரம்+அத்து+ஐ=மரத்தை; அத்து—சாரியை, ஐ—இரண்டாம் வேற்றுமை உருபு

தினப்பட்ட—இறந்தகாலப் பெயரெச்சம்

மற்று+அதன்=மற்றதன்

மற்று—இடைச்சொல்

தந்தைகண் + தோன்றின் = தந்தைகட்டோன்றின்; கண்—ஏழாம் வேற்றுமை உருபு

பெற்ற—இறந்த காலப் பெயரெச்சம்; பெறு-பகுதி.

## 4. அறிவு உடையார் இயல்பு

### சொற்பொருள்

அள்ளிக் கொள்வு அன்ன- இருகைகளாலும் வாரிக் கொள்ளலாம் என்னும்படி

குறுமுகிழ ஆயினும்-சிறிய அரும்புகளை உடையனவாய் (அழகுடன்) இருந்தாலும்

சூடும் பூ அன்மையால் - தலையில் அணிந்து கொள்ளத் தகுந்த பூ அல்லாமையால்

கள்ளிமேல்- கள்ளிச் செடிகளின் மீது

கைநீட்டார்- (யாரும் பறிப்பதற்குக்) கையை நீட்ட மாட்டார்கள் (அதுபோல)

அறிவு உடையார்- மிக்க அறிவு படைத்தவர்கள்

கீழ்களை - தாழ்ந்த மக்களை

செல்வம் பெரிது உடையார் ஆயினும்-(அக்கீழ் மக்கள்) மிகவும் செல்வம் பெற்றிருப்பினும்

நள்ளார் - அச்செல்வத்தைப் பெற நெருங்க மாட்டார்கள்.

### பொழிப்புரை

இருகைகளாலும் வாரிக் கொள்ளலாம் என்னும் படி சிறிய அரும்புகளை உடையனவாய் அழகுடன் இருந்தாலும், தலையில் அணிந்து கொள்ளத் தகுந்த பூ அல்லாமையால் கள்ளிச் செடிகளின் மீது எவரும் கையை நீட்ட மாட்டார்கள். அதுபோல, மிக்க அறிவு படைத்தவர்கள் தாழ்ந்த மக்கள் மிகச் செல்வம் பெற்றிருப்பினும் அவர்களை நெருங்கமாட்டார்கள்.

### கருத்துரை

கள்ளிப்பூவை யாரும் பறிக்க மாட்டார்கள். அது போலத் தாழ்ந்த மக்களைப் பொருளுக்காக அறிவு படைத்தவர்கள் நெருங்கமாட்டார்கள்.

### விளக்கவுரை

கீழ் மக்களுக்கு மிகுதியான செல்வம் வந்தாலும் அறவழிகளில் செலவிடார்; இடம் அறிந்து வழங்கார். ஆகையினால், அவர்களது செல்வம் கள்ளிப் பூவாக இழிவுபடுத்தப்படுகிறது.

| உவமானம் | உவமேயம் |
|---|---|
| கள்ளிச் செடி | கீழ் மக்கள் |
| கள்ளிப் பூ | கீழோர் செல்வம் |
| கைந்நீட்டாத மக்கள் | அறிவு உடையார் |

கள்ளி நெருங்க முடியாதபடி முட்களைக் கொண்டிருக்கும். அன்றியும், அதன் மலர் சூடுவதற்கு ஏற்றதும் அன்று. அது போலச் செல்வம் மிக்க கீழோர், தம்மை யாரும் நெருங்க முடியாதபடி கொடியவராக இருப்பர். அவருடைய இழிவான செல்வமும் நல்லவர்களால் பயன்படுத்திக் கொள்ளத்தகாதது ஆகும்.

### இலக்கணம்

அன்ன—உவமை உருபு; (இடைச்சொல்)
கை + நீட்டார் = கைந் நீட்டார்
நீட்டார், நள்ளார்—எதிர்மறை வினைமுற்றுக்கள்
சூடும்—எதிர்காலப் பெயரெச்சம்

பெரிது + உடையார் = பெரிதுடையார்
அறிவு + உடையார் = அறிவுடையார்.

## 5. கீழ்மகன் இயல்பு

### சொற் பொருள்

சக்கரச் செல்வம் - அரசாளும் செல்வம்
பெறினும்-பெற்றாலும்
விழுமியோர்-மேன்மக்கள்
எக்காலும்-எப்பொழுதும்
மிகுதிச்சொல் - சொல்லத் தகாத சொற்களை
சொல்லார்-சொல்ல மாட் டார்கள். (ஆனால்)
கீழ்-தாழ்ந்தவன்
எக்காலும்-எப்பொழுதும்
முந்திரிமேல் - முந்திரி அளவு செல்வத்துக்கு மேல்
காணி-காணி அளவு செல்வம்
மிகுவதேல் - மிகுதியாகக் கிடைத்து விட்டால்
தன்னை இந்திரன் ஆ(க)- தன்னை இந்திரன் என்ற தேவர் தலைவன் ஆக
எண்ணிவிடும் - மதித்துக் கொள்வான்.

### பொழிப்புரை

அரசாளும் செல்வமே கிடைக்கப்பெற்றாலும் மேன் மக்கள் எப்பொழுதும், சொல்லத்தகாத சொற்களைச் சொல்ல மாட்டார்கள். ஆனால் தாழ்ந்தவன் எப்பொழு தும் முந்திரி அளவு செல்வத்துக்கு மேல் காணி அளவு செல்வம் மிகுதியாகக் கிடைத்துவிட்டாலும் தன்னை இந்திரன் என்ற தேவர் தலைவன் ஆக மதித்துக் கொள்வான்.

### கருத்துரை

மேன்மக்கள் எப்பொழுதும் அடக்கமாகவே பேசுவர்; தாழ்ந்தவர் சிறிது செல்வம் பெருகினாலும் தம்மை மிகவும் பெரியவராக மதித்துக்கொள்வர்.

### விளக்கவுரை

முந்திரி, காணி என்பவை எண்ணல் அளவைப் பெயர்கள். முந்திரி$=\frac{1}{320}$ என்னும் பின்ன எண். காணி $=\frac{1}{80}$ என்னும் பின்ன எண்.

### இலக்கணம்

சக்கரம் + செல்வம் = சக்கரச் செல்வம்
சொல்லார் – எதிர்மறை வினைமுற்று
சொல்லார் × சொல்வர் – எதிர்ச்சொற்கள்
சக்கரம் – ஆகுபெயராய் அரசாட்சியைக் குறித்தது
தான் + ஐ = தன்னை; 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு.

## 6. மேலோர் சினவார்

### சொற்பொருள்

நாய்-நாயானது
கூர்த்து-சினம் மிகுந்து
கௌவிக் கொள-கடித்துத் தசையைப் பிடுங்க
கண்டு-பார்த்தும்
பேர்த்து-பதிலாக
தம் வாயால்-தம் வாயினால்
நாய்-(கடித்த அந்த) நாயினை
கௌவினர் ஈங்கில்லை-கடித்தவர் இவ்வுலகில் இல்லை
நீர்த்து அன்றி-(அது போல்) இனிமையானது ஆகிய சொல்லை அன்றி

கீழ்மக்கள்-இழிந்த மக்கள்
கீழ் ஆய-இழிவாகிய சொற்களை
சொல்லியக்கால்-சொன்னால்
மீட்டு-பதிலாக
மேன்மக்கள்-மேலோர்கள்
தம் வாயால்-தம் வாயினால்
சொல்லுபவோ-(அந்த இழிவாகிய சொற்களைச்) சொல்லுவரோ? (சொல்லார்.)

### பொழிப்புரை

நாயானது சினம் மிகக் கொண்டு கடித்துத் தசையைப் பிடுங்குதலைப் பார்த்தும், பதிலாகத் தம்வாயினால் கடித்த அந்த நாயினைக் கடித்தவர் இவ்வுலகில் இல்லை. அதுபோல இனிமையானதாகிய சொல்லை அன்றி, இழிந்த மக்கள் இழிவாகிய சொற்களைச் சொன்னால் மேலோர்கள் பதிலாகத் தம்வாயினால் அந்த இழிவாகிய சொற்களைச் சொல்ல மாட்டார்கள்.

### கருத்துரை

நாய் கடித்தால் அதனைத் திரும்பக் கடிப்பாரில்லை. அதைப் போலக் கீழ்மக்கள் இழிவாகிய வார்த்தைகளைச் சொன்னால் மேலோரும் அங்ஙனமே திரும்பச் சொல்ல மாட்டார்கள்.

### விளக்கவுரை

நாய் கடித்ததைப் போலவே அதைத் திருப்பிக் கடித்தால் கடித்தவனும் நாயின் தகுதியில் வைத்து மதிக்கப் படுவான். அதைப் போலவே மேலோர் இழிந்த மக்களின் இழிந்த சொற்களையே சொன்னால் அவர்களும் இழிந்தவர்களாகவே கருதப்படுவர்.

### இலக்கணம்

கூர்த்து, கௌவி, கொள — வினையெச்சங்கள்

கூர்த்து – கூர் பகுதி; உரிச் சொல்

ஈங்கு + இல்லை = ஈங்கில்லை

நீர்த்து + அன்றி = நீர்த்தன்றி

அன்றி—வினையெச்சம்.

# 7. பொறுமையுடையார் துன்புறார்

## சொற்பொருள்

அறிவது-அறிதற்கு உரிய நூலை

அறிந்து-(குற்றம் அறக் கற்று) அறிந்து

அடங்கி-அடக்கத்தோடு ஒழுகி

அஞ்சுவது-அஞ்சத் தகுந்த தீய செயலை

அஞ்சி-(செய்யப்) பயந்து

உறுவது-(தம்மை விட்டு) நீங்காமல் இருப்பதாகிய தருமத்தை

உலகு உவப்பச் செய்து-உலகத்தார் மகிழும்படி செய்து

பெறுவதனால்-கிடைக்கும் செல்வத்தினால்

இன்பு உற்று வாழும்-(மன நிறைவுடன்) இன்பம் பொருந்தி வாழும்

இயல்பினார்-தன்மை உடையவர்கள்

எஞ்ஞான்றும்-எப்பொழுதும்

துன்புற்று வாழ்தல்-துன்பம் பொருந்தி இருத்தல்

அரிது-அரியது ஆகும் (இல்லை ஆகும்.)

## பொழிப்புரை

அறிவதற்கு உரிய நூலைக் குற்றம் அறக்கற்று அறிந்து, அடங்கி, அஞ்சத் தகுந்த தீய செயலைச் செய்யப்பயந்து, தம்மைவிட்டு நீங்காமல் இருப்பதாகிய தருமத்தை உலகத்தார் மகிழும்படி செய்து, கிடைக்கும் செல்வத்தினால் மனநிறைவுடன் இன்பம் பொருந்தி வாழும் தன்மை உடையவர்கள் எக்காலத்தும் துன்பம் பொருந்தி இருத்தல் இல்லை; இன்பமாகவே இருப்பர்.

## கருத்துரை

அறிய வேண்டியவற்றை அறிந்து அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சி, கிடைத்ததைக் கொண்டு மகிழ்வுடன் வாழ்பவர்க்கு எஞ்ஞான்றும் துன்பம் இல்லை.

### விளக்கவுரை

அஞ்ச வேண்டாதவற்றுக்கு அஞ்சலாகாது. தருமம் அல்லாதவற்றைச் செய்யலாகாது. பேராசை படக்கூடாது. 'பெறுவதனுல் இன்புற்று வாழும்' என்ற தொடரில், போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து என்ற பழமொழி பொதிந்துள்ளது.

### இலக்கணம்

அறிவது + அறிந்து + அடங்கி = அறிவதறிந்தடங்கி

அஞ்சுவது + அஞ்சி = அஞ்சுவதஞ்சி

அறிந்து, அடங்கி, அஞ்சி, செய்து–வினையெச்சங்கள்

உறுவது + உலகு + உவப்ப = உறுவதுலகுவப்ப

வாழும் – எதிர் காலப் பெயரெச்சம்

இயல்பினர் – வினையாலணையும் பெயர்.

## 8. பெரியவர் சிறியவர் நட்பு

### சொற் பொருள்

பெரியவர் கேண்மை–பெரியவருடன் கொண்ட நட்பானது

பிறைபோல–வளர் பிறையைப்போல

நாளும்–நாள் தோறும்

வரிசை வரிசையா–முறை முறையாக

நந்தும்–(தானே) வளரும்

சிறியார் தொடர்பு–சிறியவருடன் கொண்ட கூட்டுறவானது

வான் ஊர் மதியம் போல்–விண்ணில் தவழும் தேய்பிறை போல

வைகலும்–நாள்தோறும்

வரிசை யால்–முறைப்படி

தானேதேயும் – தானாகக் குறையும்.

### பொழிப்புரை

பெரியவருடன் கொண்ட நட்பானது வளர்பிறையைப்போல நாள்தோறும் முறை முறையாகத் தானே வளரும். சிறியவருடன் கொண்ட கூட்டுறவானது விண்ணில் தவழும் தேய்பிறைபோல நாள்தோறும் முறைப்படி தானாகக் குறையும்.

### கருத்துரை

வளர்பிறை போலப் பெரியவர் தொடர்பு வளரும்; தேய்பிறை போலச் சிறியவர் தொடர்பு குறையும்.

### விளக்கவுரை

வளர்பிறை பதினைந்து நாட்கள். இதனைச் சுக்கில பட்சம் என்பர். இதன் முடிவுநாளன்று சந்திரன் முழுமையாக இருக்கும். அந்நாளை முழுமதி நாள் (பௌர்ணமி) என்பர். இந்நாட்களில் சந்திரன் சிறிது சிறிதாக வளர்ந்து முழுமைபெறும். அதைப் போலப் பெரியவர்களுடன் நட்புக் கொண்டால், அந்த நட்புச் சிறிது சிறிதாக வளர்ந்து முழுமை பெறும்.

தேய்பிறை பதினைந்து நாட்கள். இதனைக் கிருஷ்ண பட்சம் என்பர். இதன் முடிவுநாள் மறைமதி நாள் (அமாவாசை) என்பர். இந்நாட்களில் சந்திரன் சிறிது சிறிதாகத் தேய்ந்து முடிவில் தெரியாமல் போகும். அதைப் போலச் சிறியாருடன் தொடர்பு கொண்டால் அத்தொடர்பு முதலில் பெரிதாகக் காட்சி தந்து, பின்னர்ச் சிறிது சிறிதாகத் தேய்ந்து முடிவில் இல்லாமற் போகும். எனவே, வளரும் தன்மைஉடைய பெரியவர்களுடன் கொள்ளும் நட்பே நமக்குத் தேவை.

### இலக்கணம்

பெரியார் × சிறியார் – எதிர்ச்சொற்கள்

போல – உவமை உருபு; (இடைச்சொல்)

நந்தும், தேயும் – எதிர்கால வினைமுற்றுக்கள்.

## (இ) பழமொழி

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இந்நூலை இயற்றியவர் முன்றுறை அரையனார் என்பவர் ஆவார்.

தொன்று தொட்டு வழங்கி வரும் பழமையான மொழிகள் பழமொழிகள் எனப்படும்.

பெயர்க் காரணம் :

ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ஒவ்வொரு பழமொழியை அமைத்துப் பாடப்பட்ட நூல் ஆகையினால் பழமொழி எனப் பெயர் பெற்றது. நானூறு பாடல்களைக் கொண்டமையால் இதற்குப் பழமொழி நானூறு என்று ஒரு பெயரும் உண்டு.

ஆசிரியர் வரலாறு

பெயர் — முன்றுறை அரையனார்.
நாடு — பாண்டிய நாடு
ஊர் — முன்றுறை
தொழில்— அரசுத்தொழில்
சமயம் — சமண சமயம்

இவரைப் பற்றிய வேறு செய்திகள் எவையும் புலப்படவில்லை.

## 1. அறிஞரை அறிஞரே அறிவர்.

சொற்பொருள்

நலம் மிக்க- நன்மைமிக்க

பூம்புனல் ஊர - அழகிய நீர்வளம் உடைய மருத நிலத் தலைவனே!

பாம்பின கால் - பாம்பினுடைய கால்களை

பாம்பு அறியும்- பாம்புதான் அறியும் (அதுபோல)

புலம் மிக்கவரை- அறிவு மிக்கவர்களை

புலமை தெரிதல்-அம்மிக்க அறிவினை ஆராய்ந்து அறிதல்

புலம் மிக்கவர்க்கே- அறிவிற் சிறந்தவர்களுக்கே

புலனும்-விளங்கும்;

பொது மக்கட்கு ஆகாது- சிறந்த அறிவில்லாத மக்களுக்குத் தெரியாது-

### பொழிப்புரை

நன்மை மிக்க அழகிய நீர்வளம் உடைய மருத நிலத் தலைவனே! பாம்பினுடைய கால்களைப் பாம்பு தான் அறியும். அதுபோல அறிவு மிக்கவர்களின் அம்மிக்க அறிவை ஆராய்ந்து அறிதல் அறிவிற் சிறந் தவர்களுக்கே ஆகும். சிறந்த அறிவில்லாத மக்களுக்குத் தெரியாது.

### கருத்துரை

பாம்பின் கால் பாம்பறியும்; அதைப்போலக் கற்ற வர் அறிவு கற்றவருக்கே தெரியும்.

### விளக்கவுரை

வயலும் வயல் சார்ந்த இடமும் மருத நிலம் எனப் படும். "பாம்பின் கால் பாம்பறியும்" என்பது இப் பாடலில் கண்ட பழமொழி. கற்றவர்களின் அறிவைக் கற்றவர்களே அறிய முடியும் என்பதை இப்பாடல் தெளிவுபடுத்துகிறது.

### இலக்கணம்

மிக்கவரை – என்பதில் உள்ள 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு

மிக்கவர் – வினையாலணையும் பெயர்; மிகு - பகுதி

தெரிதல் – தொழிற் பெயர்

ஊர – விளி; எட்டாம் வேற்றுமை; ஆடூஉ முன்னிலை

ஊரன் – முதல் வேற்றுமை; ஈறு குறைந்து ஊர என்று ஆயிற்று

மக்கட்கு + ஆகாதே = மக்கட்காகாதே

மக்கட்கு – கு: நான்காம் வேற்றுமை உருபு

ஆகாது – எதிர்மறை வினைமுற்று

பாம்பு + அறியும் = பாம்பறியும்

அறியும் – எதிர்கால வினைமுற்று

பாம்பின – என்பதில் உள்ள 'அ' ஆறும் வேற்றுமைப் பன்மை உருபு

கால் – கால் என்ற எண்ணலளவைப் பெயர் அவ்வளவை உடைய உடல் உறுப்புக்கு ஆயிற்று

கால் – ஆகு பெயர்.

## 2. கற்றூர்க்கு யாதும் ஊரே

### சொற்பொருள்

ஆற்றவும் – மிகவும்
கற்றூர் – படித்தவர்கள்
அறிவு உடையார் – அறிவு உடையவர்கள் ஆவார்
அஃதுஉடையார்அக்கல்வியறிவை உடையவர்கள்
நாற்றிசையும் – (தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு என்ற) நான்கு திசைகளிலும்
செல்லாத நாடு இல்லை – போகாத நாடுகள் இல்லை
அந்நாடு – அந்த நாடுகள்
வேற்று நாடு ஆகா – அவருக்கு அயல் நாடுகள் ஆக மாட்டா
தமவே – தம்முடைய நாடுகளே
ஆயின் – (அப்படித் தம்முடைய நாடுகள்) ஆனால்
ஆற்று உணு – வழிநடப்பவர்கள் கொண்டு செல்லும் கட்டுச்சோறு
வேண்டுவது இல் – (அவர்களுக்குத்)தேவை இல்லை

### பொழிப்புரை

மிகவும் படித்தவர்கள் அறிவு உடையர்கள் ஆவர். அக் கல்வி அறிவை உடையவர்கள் தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு என்ற நான்கு திசைகளிலும் போகாத நாடுகள் இல்லை. அந்த நாடுகள் அவருக்கு அயல் நாடுகள் ஆகமாட்டா; தம்முடைய நாடுகளே. அதனுல் வழி நடப்பவர்கள் கொண்டு செல்லும் கட்டுச்சோறு அவர்களுக்குத் தேவை இல்லை.

### கருத்துரை

கற்றவர்க்கு எந்நாடும் தம்நாடே; அவர்கள் எல்லா நாடுகளுக்கும் செல்வர்; அவர்களை எல்லோரும் உபசரிப்பர்.

### விளக்கவுரை

"கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு;" 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உயர்ந்த உண்மைகள் இப்பாடலில் உள்ளன.

கல்லாதவர்கள் தம் நாட்டை விட்டு வேற்று நாடு களுக்குச் செல்ல முடியாது. அவ்வாறு சென்றாலும் அங்கு அவர்களுக்கு மதிப்பு இருக்காது.

கற்றவர் வேற்று நாடுகளுக்குச் சென்றால் அங்கே பெரிய விருந்து உபசரிப்புக்கள் நடக்கும். எனவே அவர்களுக்குக் கட்டுச்சோறு தேவை இல்லை.

உணா-உணவு.

### இலக்கணம்

கற்றார்—வினையாலணையும் பெயர்; கல்—பகுதி.

நான்கு + திசை = நாற்றிசை.

செல்லாத—எதிர்மறைப் பெயரெச்சம்.

அ + நாடு = அந்நாடு; அ—புறச்சுட்டு.

வேறு + நாடு = வேற்று நாடு.

ஆறு + உணா = ஆற்றுணா;

தம் + அ = தம. அ—ஆறாம் வேற்றுமைப் பன்மை

# 3. அறிவின் மாட்சி

## சொற் பொருள்

பொறியின்-நெருப்புப் பொறி போன்ற
மணி-மாணிக்கங்களும்
பொன்னும்-பொன்னும்
சாந்தமும் – சந்தனமும்
மாலையும்–மலர் மாலையும்
இன்ன–(ஆகிய) இவை போன்ற
அணி எல்லாம்-அணிகலன்கள் எல்லாம்
ஆடையின் பின்–உடுக்கும் ஆடைக்குப்பின்னே தான் சிறப்பைத் தருவனவாம்;
(அதுபோல)
அறிவினுல்–அறிவினுல் உண்டாகும்
மாட்சி-பெருமை
ஒன்று-சிறிதும்
இல்லா ஒருவன்–இல்லாத ஒரு மனிதன்
பிறிதினுல்-பிற (செல்வம்) முதலியவற்ருல்
மாண்டது-சிறப்படைவது
எவன் ஆம்-எவ்வாறு இயலும்.

## பொழிப்புரை

நெருப்புப் பொறிபோன்ற மாணிக்கங்களும் பொன்னும், சந்தனமும், மலர்மாலையும் ஆகிய இவை போன்ற அணிகலன்கள் எல்லாம் உடுக்கும் ஆடைக்குப் பின்னேதான் சிறப்பைத் தருவன ஆகும். அது போல அறிவினுல் பெருமை சிறிதும் இல்லாத ஒரு மனிதன் பிற செல்வம், குலம் முதலியவற்ருல் சிறப் படைவது இயலாதது ஆகும்.

## கருத்துரை

ஆடைக்குப் பிறகே அணிகள் சிறப்பைத் தரும். அதைப்போல அறிவுக்குப் பிறகே மற்றவை சிறப்பைத் தரும்.

## விளக்கவுரை

ஆடையை அணியாமல் அழகு தரும் பிற அணி கள் அணிந்தும் பயன் இல்லை. அதைப் போலக் கல்வி

அறிவு இல்லாமல் உயர்ந்த குலம், மிச்க செல்வம், நல்ல மரபு முதலியவை இருந்தும் பயன் இல்லை.

| உவமானம் | | உவமேயம் |
|---|---|---|
| ஆடை | — | கல்வி அறிவு |
| அணி | — | குலம், செல்வம் முதலிய சிறப்புக்கள் |

### இலக்கணம்

மாட்சி + ஒன்று + இல்லா = மாட்சியொன்றில்லா
மாட்சி — மாண் — பகுதி
இல்லா — ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
மாண்டது + எவன் + ஆம் = மாண்டதெவனும்
பொன்னும் சாந்தமும் மாலையும் — என்பவற்றில் இடைச்சொல்
அணி + எல்லாம் — அணியெல்லாம் 'உம்' உள்ள

## 4. கேள்விச் சிறப்பு

### சொற்பொருள்

உணற்கு-குடிப்பதற்கு
இனிய-இனிமையான
இந்நீர்-இந்தத் தண்ணீர்
பிறிது உழி-தான் உள்ள இடம் தவிர வேறு இடத்தில்
இல் என்னும்-இல்லை என்று எண்ணும்
கிணறு அகத்து-கிணற்றில் உள்ள
தேரை போல்-தவளையைப் போல்

ஆகார்-(கற்றவர்கள்) இருக்க மாட்டார்கள் (ஏனென்றால்)
கணக்கினை-ஒரு நூலை
முற்ற-முழுவதும்
பகலும்-ஒவ்வொரு நாளும்
முனியாது-வெறுக்காமல்
இனிது-நன்றாக
ஓதி-தானே படித்து
கற்றலின்-கற்பதை விட
கேட்டலே நன்று-பலநூல் பொருள்களையும் வல்லவர் சொல்லக் கேட்டு அறிவதே நல்லது.

### பொழிப்புரை

குடிப்பதற்கு இனிமையான இந்தத் தண்ணீர் (தான் உள்ள இடம் தவிர) வேறு இடத்தில் இல்லை என்று எண்ணும் கிணற்றில் உள்ள தவளையைப் போலக் கற்றவர்கள் இருக்கமாட்டார்கள். ஏனென்றால் ஒரு நூலை முழுவதும், ஒவ்வொரு நாளும் வெறுக்காமல் நன்றாகத் தானே படித்துக் கற்பதை விடப் பல நூற் பொருள்களையும் வல்லவர் சொல்லக் கேட்டு அறிவதே நல்லது.

### கருத்துரை

கிணற்றுத் தவளையாக இருக்காமல் பல நூற் பொருள்களையும் கேட்டு அறிதல் வேண்டும்.

### விளக்கவுரை

இப் பாடலில் 'கிணற்றுத்தவளை போல' என்ற பழமொழியும் உடன் கூறப்படுகிறது. கிணற்றுத் தவளைக்குத் தான் இருக்கும் கிணற்றைத் தவிர வேறு உலகம் தெரியாது. அதைப்போல ஒரு நூலைத் தன் முயற்சியால் கற்றவன் வேறு நூல்களின் சிறப்பு அறியாமற் போவான். எனவே எல்லா நூல்களின் சிறப்புக்களையும் வல்லவர்கள் கூறக் கேட்க வேண்டும். உவமானம் — கிணற்றுத் தவளை. உவமேயம் — ஒரு நூலைத் தன்முயற்சியால் கற்றவன்.

### இலக்கணம்

உணல் + கு = உணற்கு

உணல் - தொழிற் பெயர்; கு - நான்காம் வேற்றுமை உருபு

உணற்கு + இனிய = உணற்கினிய

இ + நீர் = இந்நீர்; இ - புறச்சுட்டு

பிறிது + உழி + இல் = பிறிதுழியில்

உழி - ஏழாம் வேற்றுமை உருபு.

கிணறு + அகம் + அத்து = கிணற்றகத்து
ஆகார் – எதிர்மறைப் பன்மை வினைமுற்று
முனியாது + இனிது + ஓதி = முனியாதினிதோதி
முனியாது – எதிர்மறை வினையெச்சம்
ஓதி – எதிர்கால வினையெச்சம்
கற்றலின் – என்பதில் உள்ள 'இன்' ஐந்தாம் வேற்றுமை உருபு

## 5. அறியாமையின் இழிவு

### சொற்பொருள்

பாய்–(உலகில்) பரவியுள்ள
இருள் நீக்கும் – (இரவுக் காலத்தில்) இருட்டைப் போக்கும்
மதியம் போல்– சந்திரனைப் போல
பல்மீனும் – ஆகாயத்தில் உள்ள பல நட்சத்திரங்களும்
நிலா காய்கலா் - ஒளியைத் தர மாட்டா
(அதுபோல)
மா இரு ஞாலத்து – இந்த மிகப் பெரிய உலகில்
அறிவு இலார்– அறிவு அற்ற மூடர்
ஆயிரவர் ஆனும்–ஆயிரம் பேர்கள் ஆனாலும்
தொக்கக்கால் - கூடினாலும்
மாண்பு ஒருவன் – அறிவின் சிறப்பு உடைய ஒருவனுக்கு
போல் கலார்·ஒப்பு ஆகார்.

### பொழிப்புரை

உலகில் பரவியுள்ள இரவுக்காலத்தின் இருட்டைப் போக்கும் சந்திரனைப் போல, ஆகாயத்தில் உள்ள பல நட்சத்திரங்களும் ஒளியைத் தர மாட்டா. அது போல இந்த மிகப் பெரிய உலகில் அறிவு அற்ற மூடர் ஆயிரம் பேர்கள் கூடினாலும் அறிவின் சிறப்பு உடைய ஒருவனுக்கு ஒப்பு ஆகார்.

### கருத்துரை

நட்சத்திரங்கள் பலவாயினும் ஒரு சந்திரனுக்கு ஒப்பு ஆகா; அதுபோல மூடர் பலர் கூடினாலும் ஒரு அறிஞனுக்கு ஒப்பு ஆக மாட்டார்கள்.

### விளக்கவுரை

எண்ணற்ற நட்சத்திரங்கள் இருக்கின்றன. இருந்தும் என்ன பயன்? இருளில் நிலவே ஒளி தருகிறது. அதுபோலவே அறிவிலார் ஆயிரவர் இருந்தும் பயனில்லை; அறிஞன் ஒருவனே பயன் தருபவன்.

மதி—அறிஞன்
நட்சத்திரங்கள் —அறிவிலார்.

### இலக்கணம்

ஆயிரவர் + ஆனும் = ஆயிரவரானும்
அறிவு + இலார் = அறிவிலார்
மா + இரு = மாயிரு
ஞாலம் + அத்து = ஞாலத்து
மாண்பு + ஒருவன் = மாண்பொருவன்
போல்கலார்—எதிர்மறை வினைமுற்று
நீக்கும்—எதிர்காலப் பெயரெச்சம்
பல + மீன் = பன்மீன்.

## 6. தீயார் அணுக அஞ்சுவர்

### சொற்பொருள்

வாடி-வலிமை கெட்டு

வலித்து-நரம்புகள் இழுக்கப்பட்டு

திரங்கி-(தசை) சுருக்கம் அடைந்து

கிடந்தே விடினும்-(நடக்கவும் முடியாமல்) படுத்து விட்டாலும்

புலித்தலையை-புலியினுடைய தலையை

நாய் மோத்தல் இல்-நாயானது மோந்து பார்த்தல் இல்லை (அதுபோல)

நாடு அறியப்பட்ட-நாட்டில் உள்ள அனைவராலும் தெரிந்துகொள்ளப்பட்ட

பெருஞ்செல்வர்-பெரிய செல்வத்தை உடையவர்

நல்கூர்ந்து-வறுமை அடைந்து

வாடியகாலத்தும்-தளர்ந்த காலத்திலும்

வட்குபவோ-மற்ற ஒருவருக்குத் தாழ்வு அடைவாரோ? (அடையார்)

பொழிப்புரை

வலிமை கெட்டு, நரம்புகள் இழுக்கப் பட்டுத் தசை சுருக்கம் அடைந்து, நடக்கவும் முடியாமல் படுத்து விட்டாலும் புலியினுடைய தலையை நாயானது மோந்து பார்த்தல் இல்லை. அதுபோல நாட்டில் உள்ள அனைவராலும் தெரிந்து கொள்ளப்பட்ட பெரிய செல்வத்தை உடையவர் வறுமை அடைந்து வாடிய காலத்திலும் மற்ற ஒருவருக்குத் தாழ்வு அடையார்.

கருத்துரை

புலியானது வலிமை இழந்தாலும் அதனைக்கண்டு யாவரும் அஞ்சுவர்; அதுபோலச் செல்வர் எவ்வளவு தாழ்ந்தாலும் அவருடைய பெருமை குன்றாது.

விளக்கவுரை

உவமானம்: புலியானது வலிமை கெட்டுக் கிடந்தாலும் அதன் தலையை நாய் முகர்ந்து பார்க்காது,

இலக்கணம்

உவமேயம்: நாடு அறியப்பட்ட செல்வர் வறுமை அடைந்தாலும் பெருமை குன்ற மாட்டார்கள்.

நாடு + அறிய = நாடறிய

அறியப்பட்ட; வாடிய—இறந்த காலப் பெயரெச்சங்கள்.

வாடி, வலித்து, திரங்கி—இறந்த கால வினையெச்சங்கள்.

தலையை—என்பதில் உள்ள 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு.

மோத்தல்—தொழிற் பெயர்.

## (ஈ) திரிகடுகம்

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இந்நூலுள் கடவுள் வணக்கப் பாடலுடன் 101 செய்யுட்கள் உள்ளன. இந்நூலை இயற்றியவர் நல்லாதனார் என்னும் புலவர். இவர் வைணவர். இவரைப் பற்றிய பிற குறிப்புக்கள் கிடைக்கவில்லை.

**பெயர்க் காரணம் :**

சுக்கு, மிளகு, திப்பிலி என்ற மூன்றினால் ஆகிய கடுகம் என்னும் மருந்து உடல் நோயைப் போக்கும். அதைப்போல உள நோயாகிய அறியாமையைப்போக்க வல்ல மும்மூன்று கருத்துக்கள் அடங்கிய பாடல்களைக் கொண்டமையால் இந்நூல் திரிகடுகம் எனப்பெயர் பெற்றது. (திரிகடுகம் – உவமை ஆகு பெயர்)

## 1. இவர் நண்பர் ஆதல் இனிது

### சொற் பொருள்

**தாள் ஆளன் என்பான்**– முயற்சி உடையவன் என்றுசொல்லப்படுபவன்

**கடன்படா**- கடன் படாமல்

**வாழ்பவன்** - வாழ்ந்து வருபவன்

**வேள் ஆளன் என்பான்** – (நிலத்தை உழுதுபயிரிடும்) உபகாரி என்று சொல்லப்படுபவன்

**விருந்து இருக்க** - விருந்தினர் இருக்க

**உண்ணுதான்** – தானமட்டும் உண்ணுதவன்

**கோள் ஆளன் என்பான்** - (கற்பிப்பதைத் தன் மனத்தில் கொள்ளும்) மாணாக்கன் என்று சொல்லப்படுபவன்

**மறவாதான்** – கற்றதை மறந்து விடாதவன்

**இம்மூவர்**- இந்தமூவரையும்

**கேள் ஆக** – ஒருவன் தன் நண்பராகக் கொண்டு

**வாழ்தல்** – வாழ்வது

**இனிது** – இன்பம் தருவது ஆகும்.

### பொழிப்புரை

முயற்சி உடையவன் என்று சொல்லப்படுபவன் கடன்படாமல் வாழ்பவன். நிலத்தை உழுது பயிரிடும் உபகாரி என்று சொல்லப்படுபவன் விருந்தினர் இருக்கத் தான் மட்டும் உண்ணுதவன். கற்பிப்பதைத் தன் மனத்தில் கொள்ளும் மாணுக்கன் என்று சொல்லப் படுபவன்; கற்றதை மறந்து விடாதவன். இந்த மூவரை யும் ஒருவன் தன் நண்பராகக் கொண்டு வாழ்வது இன்பம் தருவது ஆகும்.

### கருத்துரை

முயற்சி உடையவன், உதவியாளன், நினைவாற்றல் உடையவன் ஆகிய மூவரையும் ஒருவன் தன் நண்பர் களாகக் கொள்ளவேண்டும்.

### விளக்கவுரை

கடன் இல்லாமல் வாழ்வது தான் நல்ல முயற்சி. விருந்தினரைப் பேணுபவனே சிறந்த உதவியாளன். கற்றதை மறவாதவனே நல் மாணுக்கன் ஆவான். இந்த மூவரையும் நண்பராகக் கொண்டால் அவர் களின் நற்பண்புகள் நமக்கும் வரும்.

### இலக்கணம்

தாள் + ஆளன் = தாளாளன்
கோள் + ஆளன் = கோளாளன்
படா, இருக்க, ஆக—வினையெச்சங்கள்
வாழ்தல்—எழுவாய்; இனிது—பயனிலை
இ + மூவர் இம்மூவர்=‘இ’ புறச்சுட்டு; மூவர்—தொகைப்பெயர்.
விருந்து + இருக்க = விருந்திருக்க

## 2. செல்வத்தை அழிக்கும் ஆயுதங்கள்

### சொற்பொருள்

தன்னை வியந்து-தன்னைத் தானே புகழ்ந்து கொண்டு
தருக்கலும்-செருக்கு அடைதலும்
தாழ்வு இன்றி-பணிவு இல்லாமல்
கொன்னே-வீணாக
வெகுளி பெருக்கலும்-கோபத்தை மிகுத்தலும்
முன்னிய-தான், (பெறக்) கருதிய
பல்பொருள்-(பிறர்க்குரிய) பல பொருள்களையும்
வெஃகும்-(தான் அடைய) விரும்பும்
சிறுமையும்-கீழ்க்குணமும்
இம் மூன்றும்-இந்தமூன்று தன்மைகளும்
செல்வம்-ஒருவன் செல்வத்தை
உடைக்கும் படை-அழிக்கும் ஆயுதங்கள் ஆகும்.

### பொழிப்புரை

தன்னைத் தானே புகழ்ந்துகொண்டு செருக்கு அடைதலும், பணிவு இல்லாமல் வீணாகக் கோபத்தை மிகுத்தலும், தான் பெறக் கருதிய பிறர்க்கு உரிய பல பொருள்களையும் தானே அடைய விரும்பும் கீழ்க்குணமும் இந்த மூன்று தன்மைகளும் ஒருவன் செல்வத்தை அழிக்கும் ஆயுதங்கள் ஆகும்.

### கருத்துரை

செருக்கு, கோபம், ஆசை ஆகிய மூன்று இழி குணங்களும் ஒருவனது செல்வத்தை அழித்துவிட வல்ல தீயவை ஆகும். (இம்மூன்று தீயகுணங்கள் யாரிடமும் இருக்கக் கூடாது)

### விளக்கவுரை

தன்னைத் தானே புகழ்ந்து கொள்பவன் வீண் பெருமைக்காகத் தன்செல்வத்தை அழிப்பான்; கோபக்காரனும் தன் கோபத்தால் அவசரப்பட்டுச் செல்வத்தை

அழிப்பான்; பல பொருள்களையும் விரும்பும் ஆசை உள்ளவனும் அவ்வாசை காரணத்தால் செல்வத்தை அழிப்பான். ஆக இம்மூன்று இழி குணங்கள் உள்ளவர் இடத்தில் செல்வம் உறுதியாக நிலைக்காது.

இலக்கணம்

தருக்கல், பெருக்கல்—தொழிற் பெயர்கள்

கொன்—இடைச்சொல்

வெகுளி—தொழிற்பெயர்; வெகுள்—பகுதி

பல + பொருள் = பல் பொருள்

தாழ்வு + இன்றி = தாழ்வின்றி

இன்றி — வினையெச்சம்

முன்னிய — இறந்த காலப் பெயரெச்சம்

வெஃகும், உடைக்கும்-எதிர்காலப்பெயரெச்சங்கள்.

## 3. உறுதி அற்றவை

சொற்பொருள்

நிறை நெஞ்சுடையானை — (உள்ளது போதும் என்னும்) மன நிறைவு உடையவனைக் கண்டு

நல்குரவு அஞ்சும்-வறுமை பயப்படும்

அறனை நினைப்பவனை- அறத்தையே நினைப்பவனைக்(கண்டு)

அல்பொருள் அஞ்சும்- புண்ணியம் அல்லாத பாவம் பயப்படும்

மறவனை-கொலைத்தொழில் செய்பவனைக் (கண்டு)

எவ்வுயிரும் அஞ்சும்- போர்க்களத்திற்கு வந்து எல்லா உயிர்களும் பயப்படும்

இம் மூன்றும்-இந்த மூன்று அச்சங்களும்

திறவதின்-உறுதியில் இருந்து

தீர்ந்த பொருள்-நீங்கிய பொருள்கள் ஆகும். (உறுதி அற்றவை ஆகும்.)

### பொழிப்புரை

உள்ளது போதும் என்று மன நிறைவு உடையவனைக் கண்டு வறுமை பயப்படும்; அறத்தையே நினைப்பவனைக் கண்டு புண்ணியம் அல்லாத பாவம் பயப்படும்; கொலைத் தொழில் செய்பவனைக் கண்டு போர்க் களத்திற்கு வந்த எல்லா உயிர்களும் பயப்படும் இந்த மூன்று அச்சங்களும் உறுதி அற்றவை ஆகும்.

### கருத்துரை

ஒருவனுக்கு மன நிறைவும், தரும சிந்தனையும், அருட்குணமும் இன்றியமையாதனவாம்.

### விளக்கவுரை

வறுமை அற்ற வாழ்வு பெற மன நிறைவு வேண்டும்; புண்ணியம் பொருந்திய வாழ்வு பெற அற உணர்வு வேண்டும்; எல்லா உயிர்களின் அன்பும் கொண்ட வாழ்வுக்கு அருட்குணம் வேண்டும்.

கொலையாளியைக் கண்டு உலகம் அஞ்சும்; எனவே கொலையாளியாக இல்லாமல் அருளாளனாக இருக்க வேண்டும்.

### இலக்கணம்

நிறை, நல்குரவு—தொழிற் பெயர்

மறவன்—மறம்—பகுதி

திறவது—பண்புப் பெயர்

எ+உயிர்=எவ்வுயிர்

# 4. நல்வழியை அடைக்காதவை

## சொற்பொருள்

**நீர் படியின்** – தண்ணீர் பட்டால்

**உப்பின் பெருங்குப்பை**– உப்பினது பெரிய குவியல்

**இல் ஆகும்** – இல்லாமல் கரைந்து போகும்

**நட்பின் கொழுமுளை** – நட்பினது செழிப்பான தொடக்கம்

பொய் வழங்கின் – பொய் பேசினல்

**இல் ஆகும்** – இல்லாமல் நீங்கிவிடும்

செப்பம் உடையார்– நடுவு நிலைமை உடையவர்கள்

மழை அனையர் – (எல்லார்க்கும் ஒப்ப உதவுவதால்) மேகத்துக்கு ஒப்பு ஆனவர் ஆவர்

இம்மூன்றும்-இந்த மூன்று பண்புகளும்

செப்பம் நெறி – நல்வழியை

தூரா (த) ஆறு - அடைக்காத உபாயங்கள் ஆகும்.

### பொழிப்புரை

தண்ணீர் பட்டால் உப்பினது பெரிய குவியல் இல்லாமல் கரைந்து போகும். நட்பினது செழிப்பான தொடக்கம் பொய் பேசினல் இல்லாமல் நீங்கிவிடும். நடுவு நிலைமை உடையவர்கள் எல்லார்க்கும் ஒப்ப உதவுவதால் மேகத்துக்கு ஒப்பானவர் ஆவர். இந்த மூன்று பண்புகளும் நல்ல வழியை அடைக்காத உபாயங்கள் ஆகும்.

### கருத்துரை

உப்பின் குவியலில் நீர்படல் ஆகாது. நட்பினர்களுள் பொய் பேசல் ஆகாது. பிறர்க்கு உதவுபவர் நடுவு நிலைமையில் இருந்து மாறலாகாது.

### விளக்கவுரை

உப்பு அழியாமல் இருக்க, அதன்மேல் நீர் படாமல் பார்த்துக்கொள்வது நல்ல வழியாகும்; நட்புக் கெடா

மல் இருக்கப் பொய் பேசாமல் இருப்பது நல்வழி யாகும்; பிறர்க்குச் செய்யும் உதவியில் பழி வராமல் இருக்க, நடுவு நிலைமை மாறுமல் இருப்பது நல்ல வழி யாகும்.

உபகாரிக்கு உவமை மேகம். மேகம் வேறுபாடு இன்றி யாவருக்கும் மழை பொழிகிறது; பதில் உதவி யையும் எதிர் பார்ப்பது கிடையாது. அதைப்போல நல்ல உபகாரிகள் யாவருக்கும் உதவுவர்; பதில் உதவி எதிர்பார்க்கமாட்டார்கள்.

இலக்கணம்

படியின், வழங்கின் – வினையெச்சங்கள்
செப்பம் – பண்புப் பெயர்
தூரா—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

## (உ) இன்னு நாற்பது

இது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று; கடவுள் வாழ்த்துச் செய்யுளோடு 41 பாடல்களைக் கொண்டது. இந்நூலை இயற்றியவர் கபிலதேவர் என்பவர்.

பெயர்க் காரணம் :

இன்னு நாற்பது என்பதற்குத் துன்பம் தரத்தக்க வற்றைப் பற்றிக்கூறும் நாற்பது பாடல்களைக்கொண்ட நூல் என்பது பொருள்.

ஆசிரியர் வரலாறு

கபில தேவர் கடைச் சங்கப் புலவருள் ஒருவர்; பாரி வள்ளலின் உயிர்த் தோழர்; அந்தணர் குலத்தவர்; இவரைச் சமணர் என்று கூறுவாரும் உளர்; இவர் பரணா என்ற புலவரோடு இணைத்துக் கூறப்படுபவர்; 'பொய்யா நாவிற் கபிலர்' என்று புலவர்களால் புகழப்

படுபவர். இவர் பாடல்கள் சங்க இலக்கியங்களில் நிறைய உள்ளன. இவர் காலம் கி. பி. 50 முதல் 125 வரை என்பர்.

இக்கபிலர் பாரியின் நண்பராகிய கபிலர் அல்லர் என்றும், சற்றுப் பிற்காலத்தவர் என்றும் சிலர் கூறுவர்.

## பாடல் 1.

### சொற் பொருள்

உண்ணுது-(தானும்) உண்ணுமல்

வைக்கும்-சேர்த்து வைக்கும்

பெரும் பொருள் வைப்பு-மிக்க சேமிப்புப் பொருள்

இன்ஞ-துன்பம் தருவது ஆகும்

நண்ஞ-பொருந்தாத

பகைவர்-பகைவருடன்

புணர்ச்சி-கூடும் கூட்டுறவு

நனி இன்ஞ - மிகுந்த துன்பம் தருவது ஆகும்

கண் இல் ஒருவன்-பார்வை இல்லாத ஒருவனது (குருடனது)

வனப்பு-அழகு

இன்ஞ-துன்பம் தருவது ஆகும்

ஆங்கு-அவ்வாறே

எண் இலான்-இலக்கங்கள் தெரியாதவன்

செய்யும் கணக்கு-செய்கின்ற கணக்கு

இன்ஞ - துன்பம் தருவது ஆகும்.

### பொழிப்புரை

தானும் உண்ணுமல் சேர்த்து வைக்கும் மிக்க சேமிப்புப் பொருள் துன்பம் தருவது ஆகும்; பொருந்தாத பகைவருடன் கூடும் கூட்டுறவு மிகுந்த துன்பம் தருவது ஆகும்; பார்வை இல்லாத குருடனது அழகு துன்பம் தருவது ஆகும். அவ்வாறே, இலக்கங்கள் அறியாதவன் செய்யும் கணக்கும் துன்பந் தரும்

### கருத்துரை

செல்வத்தைப் பிறர்க்கு அளித்துத் தானும் உண்ணவேண்டும். பகைவருடன் கூட்டுறவு கொள்ள

லாகாது. குருட்டுத் தன்மை அழகைக் கெடுக்கும். எண் இலக்கணம் நன்கு கற்றுக் கணக்குச் செய்ய வேண்டும்.

### இலக்கணம்

உண்ணது—எதிர்மறை வினையெச்சம்

வைக்கும்—எதிர்காலப் பெயரெச்சம்

நண்ண—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

நனி—உரிச்சொல்

புணர்ச்சி—தொழிற்பெயர்

ஆங்கு—இடைச்சொல்.

## பாடல் 2.

### சொற் பொருள்

அடக்கம் உடையவன்- அடங்குதல் உடையவனின்

மீளிமை-வீரம்

இன்னு-துன்பம் தருவது ஆகும்

தொடக்கம் இலாதவன்- முயற்சி இல்லாதவன்

தன் செருக்கு-( தன்னைப் பெரியவனாக நினைத்துக் கொள்ளும்) கர்வம்

இன்னு-துன்பம் தருவது ஆகும்

அடைக்கலம் - காப்பாற்றி வைக்கப் பிறன் தன்னிடம் தந்த பொருளை

வவ்வுதல்-கவர்ந்து கொள்ளுதல்

இன்னு-துன்பம் தருவது ஆகும்

ஆங்கு-அவ்வாறே

அடக்க -(அறிவு உடையோர்) அடக்க

அடங்காதார் சொல்- அதற்கு அடங்காதவர்களுக்குக் கூறும் சொற்கள்

இன்னு-துன்பம் தருவன ஆகும்

### பொழிப்புரை

அடங்குதல் உடையவனின் வீரம் துன்பம் தருவ தாகும். முயற்சி இல்லாதவன் தன்னைப் பெரியவனாக நினைத்துக் கொள்ளும் கருவம் துன்பம் தருவது ஆகும். காப்பாற்றி வைக்கப் பிறன் தன்னிடம் தந்த பொருளைக் கவர்ந்து கொள்ளுதல் துன்பம் தருவது ஆகும். அவ்வாறே அறிவுடையோர் அடக்க அடங்காதவர் களுக்குக் கூறும் சொல் துன்பந் தருவது ஆகும்.

### கருத்துரை

பணிவுள்ளவனுக்கு வீரம் ஆகாது; முயற்சி இல்லாதவனுக்குச் செருக்கு ஆகாது; அடைக்கலம் தந்த பொருளைக் கவருதல் ஆகாது. அவ்வாறே அடக்கம் இல்லாதவனுக்கு அறிவுரை கூறலாகாது.

### இலக்கணம்

தன் + செருக்கு + இன்னா = தற்செருக்கின்னா
அடக்க—வினையெச்சம்

அடங்காதார் × அடங்குபவர் } எதிர்ச்சொற்கள்
உடையவன் × இலாதவன் }

## (ஊ) இனியவை நாற்பது

இது பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. பூதஞ் சேந்தனார் என்பவரால் இயற்றப்பட்டது.

**பெயர்க் காரணம் :**

'இவை இவை இனியவை, நன்மை தருபவை' என்று நாற்பது பாடல்களால் விளக்கும் நூல் என்பது பொருள். இந்நூலில் கடவுள் வாழ்த்துச் செய்யுளோடு 41 பாடல்கள் உள்ளன.

ஆசிரியர் வரலாறு : பூதஞ்சேந்தனுர். சங்கப் புலவருள் ஒருவர்; மதுரை நகரத்தவர்; மதுரைத் தமிழாசிரியர் மகனுர் எனக் குறிக்கப்படுபவர்.

## பாடல் 1.

### சொற்பொருள்

கற்ருர்முன்–கற்றவர்க்கு முன்பு
கல்வி உரைத்தல்–(ஒருவன்) தான் கற்ற கல்வியை எடுத்துக் கூறுதல்
மிக இனிது–மிகவும் இனியது ஆகும்.
மிக்காரைச் சேர்தல்–(கல்வி, அறிவு ஒழுக்கங்களால்) சிறந்தவரைக் கூடி இருத்தல்
மிக மாண–மிகவும் பெருமைப்பட
முன் இனிது-முற்பட இனியது ஆகும்.
எள்துணை ஆ(யி)னும்–எள் அளவு (பொருளே) ஆனுலும்
இரவாது–பிறரிடம் பிச்சை வாங்காமல்
தான் ஈதல்–தான் பிறர்க்குக் கொடுத்தல்
எத்துணையும்–எல்லா விதத்தினும்
ஆற்ற இனிது–மிகவும் இனியது ஆகும்.

### பொழிப்புரை

கற்றவர்க்கு முன்பு ஒருவன் தான் கற்ற கல்வியை எடுத்துக்கூறுதல் மிகவும் இனியது ஆகும். கல்வி அறிவு ஒழுக்கங்களால் சிறந்தவரைக் கூடியிருத்தல் மிகவும் பெருமைப்பட இனியது ஆகும். எள் அளவு பொருளே ஆனுலும் பிறரிடம் பிச்சை வாங்காமல் தான் பிறர்க்குக் கொடுத்தல் எல்லா விதத்திலும் மிகவும் இனியது ஆகும்.

### கருத்துரை

கற்றோர் கூட்டத்தில் பேசுதல் இனிய்து; நல்லவர்களோடு கூடுவது இனியது; பிச்சை எடுக்காமல் பிறர்க்குக் கொடுப்பது இனியது.

## இலக்கணம்

கற்ருர்; மிக்கார்—வினையாலணையும் பெயர்கள்
கற்ருர் என்பதற்குக் 'கல்' பகுதி
மிக்கார்—மிகு, பகுதி
மிக + இனிதே = மிகவினிதே
முன் + இனிதே = முன்னினிதே
எள் + துணை = எட்டுணை
இனிது—வினைமுற்று

## பாடல் 2.

### சொற்பொருள்

வருவாய் அறிந்து-(தனக்கு வருகின்ற பொருளின்) அளவினை அறிந்து
வழங்கல்-(பிறருக்குக்) கொடுத்தல்
இனிது-இனியது.
ஒருவர் பங்கு ஆகாத-(வேண்டியவர் என்ற எண்ணத்துடன்) ஒருவருக்குச் சார்பு ஆகாத
ஊக்கம்-மன எழுச்சி
இனிது-இனியது
பெருவகைத்து ஆயினும்-பெரிய பயனைத் தருவது ஆனலும்
பெட்டவை-தான் விரும்பியவற்றை
செய்யார்-(ஆராயாமல்) செய்யாதவராய்
திரிபு இன்றி-தம் இயல்பில் மாறுபடாது
வாழ்தல்-வாழ்க்கையை நடத்துவது
இனிது-இனியது.

### பொழிப்புரை

தனக்கு வருகின்ற பொருளின் அளவினை அறிந்து பிறர்க்குக் கொடுத்தல் இனியது. வேண்டியவர் என்ற எண்ணத்துடன் ஒருவருக்குச் சார்பு ஆகாத மன எழுச்சி இனியது. பெரிய பயனைத் தருவது ஆனலும் தான் விரும்பியவற்றை ஆராயாமல் செய்யாதவராய்த் தம் இயல்பில் மாறுபடாது வாழ்வது இனிது.

## கருத்துரை

வருவாய்க்குத் தக்கபடி பிறர்க்குக் கொடுத்தல் இனியது; தொடர்புடையவர் பக்கமே சாராத மனவெழுச்சி மிக இனியது; எதையும் ஆராய்ந்து தம் இயல்பு மாருமல் வாழ்வது இனியது.

## இலக்கணம்

வழங்கல், ஊக்கம், வாழ்தல்—தொழிற் பெயர்கள்

ஆகாத—எதிர்மறைப் பெயரெச்சம்

பெட்டவை—பலவின் பால் பெயர்; பெட்பு—பகுதி

செய்யார் × செய்பவர்—எதிர்ச்சொற்கள்

இன்றி—வினையெச்சங்கள்

## பாடல் 3.

### சொற்பொருள்

கயவரை-கீழ்மக்களை

கை இகந்து-நீங்கி

வாழ்தல் இனிது-வாழ்வது இனியது ஆகும்

உயர்வு உள்ளி-தான் மேலும், மேலும் உயர் தலை நினைத்து

ஊக்கம் பிறத்தல்-ஒருவனுக்கு எழுச்சி உண்டாவது

இனிது-இனியது ஆகும்

இவர் எளியவர் என்று-'இவர் ஏழை' என்று

இகழ்ந்து உரையார் ஆகி-அவமதித்துப் பேசாதவராகி

ஒளிபட வாழ்தல்-புகழ் உண்டாக வாழ்தல்

இனிது-இனியது ஆகும்.

பொழிப்புரை

கீழ் மக்களை நீங்கி வாழ்வது இனியது ஆகும். தான் மேலும் மேலும் உயர்தலை நினைத்து ஒருவனுக்கு மன எழுச்சி உண்டாவது இனியது ஆகும். 'இவர் ஏழை' என்று அவமதித்துப் பேசாதவராகிப் புகழ் உண்டாக வாழ்வது இனியது ஆகும்.

கருத்துரை

கீழ் மக்களோடு சேராமை நல்லது; முன்னேற்றத்திற்கான ஊக்கம் நல்லது; ஏழைகளை இகழாமல் இருத்தல் நல்லது.

இலக்கணம்

கை + இகந்து = கையிகந்து

வாழ்தல், ஊக்கம், பிறத்தல்—தொழிற் பெயர்கள்.

இகந்து, உள்ளி, இகழ்ந்து, ஆகி-வினையெச்சங்கள்

என்று + இகழ்ந்து + உரையார் + ஆகி = என்றிகழ்ந்துரையாராகி

உரையார் × உரைப்பவர்—எதிர்ச்சொற்கள்

## வினா-விடை

## அ. திருக்குறள்

1. அமிர்தம் என்று உணரும் தன்மை உடையது எது? எப்படி?

இடையறாது பொழிந்து உலகத்தினை வாழ வைக்கும் மழை அமிர்தம் என்று உணரும் தன்மையை உடையது.

அமிர்தம் உண்டவர்கள் இறக்காமல் நிலையாக வாழ்வர். அவ் வமிர்தத்தைப் போல உலகை நிலையாக வாழவைக்கும் தன்மை மழைக்கே உண்டு. எனவே மழையை அமிர்தம் என்று வள்ளுவர் கூறுகிறார்.

2. மழைஇல்லையேல் என்ன நிகழும் ?

மேகம் என்று சொல்லப்படும் மழை இல்லையேல் உழவர்கள் கலப்பையைக்கொண்டு நிலத்தை உழமாட்டார்கள்.

3. எவ்வாறு அறம் செய்தல் வேண்டும்?

நமக்கு இயலும் வகைகளில் முடியும் இடங்களில் எல்லாம் இடைவிடாமல் அறம் செய்தல் வேண்டும்.

4. எது அறம்? எது ஆரவாரம்?

தன் மனத்தில் குற்றம் இல்லாது விளங்குதலே அறம் ஆகும்.

குற்றம் உள்ள சொல்லும் செயலும் ஆரவாரத் தன்மை உடையனவாகும்.

5. முயல்வார் யார்? அவரினும் மிக்கவர்கள் யாவர்?

இன்பங்களை வெறுத்துவிட முயல்பவர்களே முயல்வார் ஆவர்.

இல்லற வாழ்க்கையை முறையுடன் நடத்தி வாழ்பவன் என்று சொல்லப்படுபவன் இன்பங்களை விடுவதற்கு முயல்வராகிய எல்லாருள்ளும் மிக்கவன் ஆவான்.

6. வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்— யாரை?

உலகில் வாழத் தகுந்த முறைப்படி வாழ்க்கையை நடத்துபவன் மேல் உலகத்தில் நிலைத்து வாழும் படியான தேவருள் ஒருவனாக வைத்து மதிக்கப் படுவான்.

7. கனி இருப்பக் காய் கவர்ந்தற்று – எது ?

உலகில் புண்ணியம் தரக்கூடிய இனிய சொற்கள் இருக்கவும், கேட்பவருக்கு வருத்தம் தரும் சொற்களை ஒருவன் சொல்லுவது இனிமையான கனி இருக்க உண்ணத்தகாத காயைப்பறித்து உண்பது போன்ற தாகும்.

8. இன்சொல்லினால் என்ன நன்மை விளையும்?

நல்ல சொற்களை மனத்துள் ஆராய்ந்து, மகிழ்ச்சி தரும் சொற்களையே ஒருவன் சொல்வான் ஆனால் அவனுடைய பாவம் அழியப் புண்ணியம் வளரும்.

9. எது ஈகை? மற்றவை எத்தன்மை உடையன?

தன்னிடம் ஒரு பொருளும் இல்லாத ஏழைக்கு, அவர் கேட்கும் ஒருபொருளை உவந்து கொடுப்பதே ஈகை ஆகும்.

பிற தருமங்கள் எல்லாம் கைம்மாறு எதிர்பார்த்துக் கொடுப்பதாகிய தன்மை உடையது.

10. பொருள் வைப்புழி எது ?

பொருள் அற்ற வறியவரின் வருத்தும் பசியை ஒழிக்கவேண்டும். அதுவே செல்வம் படைத்த ஒருவன் அச் செல்வத்தைச் சேர்த்துவைக்கும் இடம் ஆகும். ஏழைகளின் பசியைப் போக்கினால் அப் புண்ணியம் மறுமைக்கும் உதவுவதால் அது சிறந்த சேமிப்பு இடமாகக் கூறப்படுகிறது.

11. மனிதனுக்கு எது கொடிய பகை ?

முகத்தின் சிரிப்பினையும், மனத்தின் மகிழ்ச்சியினை யும் அழிக்கும் கோபமே மனிதனுக்குக் கொடிய பகை ஆகும்.

12. உள்ளிய எல்லாம் உடன் எய்தும்-யாருக்கு?

ஒருவன் மனத்தாலும் சினத்தை நினைக்கமாட்டான் என்ருல் அவன் தான் பெற நினைத்தவற்றையெல்லாம் ஒருங்கே அடைவான்.

13. இன்னு செய்தாரை ஒறுத்தல் எப்படி ?

துன்பம் செய்தவர்கள் வெட்கப்படும்படியாக அவர்களுக்கு நாம் நல்லுதவிகளைச் செய்து அவற்றை மறந்து விடுதலே நமக்குத் துன்பம் செய்தவர்களைத் தண்டிக்கும் வழியாகும்.

14. "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்"— என்னும் பழமொழியின் கருத்து அமைந்த திருக்குறளை எழுதி விளக்குக.

பிறர்க்கின்னு முற்பகல் செய்யின் தமக்கின்னு
பிற்பகல் தாமே வரும். — என்பது "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்" என்னும் பழமொழி யீன் கருத்தமைந்த குறளாகும்.

"ஒருவர் மற்ருெருவருக்கு நாளின்முன் பகுதியிலே துன்பம் செய்தாராயின் நாளின் பின் பகுதியிலே அவர்களுக்குத் துன்பம் மற்ருெருவன் செய்யாமலேயே தாமாகவரும்" என்பது அக்குறளின் பொருள் ஆகும்.

15. கற்றலும் நிற்றலும் பற்றி வள்ளுவர் கூறுவன யாவை ?

"ஒருவன் கற்கத் தகுந்த நூல்களைக் குற்றம் நீங்கக் கற்க வேண்டும். அப்படிக் கற்ற பிறகு அக் கல்விக்கு ஏற்ற நல்லொழுக்க வழிகளிலே நெறியாக ஒழுக வேண்டும்" என்பது கற்றலும் நிற்றலும் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துக்கள் ஆகும்.

15. மணற்கேணியை வைத்து வள்ளுவர் விளக்கும் நீதி யாது?

“மணலை அடியில் கொண்ட கிணறு தோண்டத் தோண்ட நீர் சுரக்கும்; அதைப் போலக் கற்கும் அளவுக்கு அறிவுபெருகும்” என்பது மணற்கேணி யைக் கொண்டு வள்ளுவர் விளக்கும் நீதி ஆகும்.

17. கொள்ளார் அறிவுடையார்– எதை?

படிக்காதவனுடைய அறிவுடைமை சில நேரங்களில் மிகவும் சிறப்பாகக் காணப்பட்டாலும் அறிவு பெற்றவர் அதனை ஏற்க மாட்டார்கள்.

18. எதனினும் எது இன்னுது?

கல்லாதவரிடம் உண்டான செல்வம் நல்லவரிடம் உண்டான வறுமையைக் காட்டிலும் துன்பம் தருவது ஆகும்.

19. எவ்வகைக் காதுகளை வள்ளுவர் செவிட்டுக் காதுகள் என்கிறுர்?

‘நல்லவர்கள் கூறும் நல்லவற்ருல் துளைக்கப்படாத காதுகள் பிற ஓசைகளைக் கேட்டாலும் செவிட்டுக் காதுகளே’ என்று வள்ளுவர் கூறுகிறுர்.

20. செவிச்சுவை உணர்தல் என்ருல் என்ன? அதை உணராதவர்களை வள்ளுவர் எங்ஙனம் வெறுக்கிறுர்?

கேள்வியால் இன்பத்தினை உணர்தலே செவிச் சுவை உணர்தல் எனப்படும்.

‘அங்ஙனம் கேள்வியால் இன்பத்தினை அறியாத வாய்ச்சுவையை மட்டும் உணருபவர் இறந்தாலும் வாழ்ந்தாலும் அதனுல் உலகத்துக்கு ஒருபயனும் இல்லை’ என்று செவிச்சுவையை உணராதவர்களை வள்ளுவர் வெறுக்கிறுர்.

21. எது அறிவு?

எந்தப் பொருளை எவர் எவர் வாயினால் சொல்லக் கேட்டாலும் அந்தப் பொருளின் உண்மையான பயனைக் காணும் திறமையுடையது உண்மை அறிவு எனப்படும்.

22. எல்லாம் உடையார்; இருந்தும் இல்லாதவர்— யார்? யார்?

அறிவு பெற்றிருப்பவர்கள் ஒன்றும் அற்றவர்கள் ஆயினும் எல்லாம் பெற்றவர்களே ஆவர்.

அறிவு இல்லா தவர்கள் பிற யாவும் பெற்றிருப் பவர் ஆயினும் ஒன்றும் இல்லாதவரே ஆவர்.
தக்கது.

23. யாருடைய செல்வம் பெருமிதப் படத்தக்கது?

ஆணவமும் கோபமும் இழிந்த ஒழுக்கங்களும் இல்லாதவர்களுடைய செல்வமானது பெருமிதப்படத்

24. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை என்ன ஆகும்?

குற்றம் வருவதற்கு முன்னர் அதைத் தடுத்துக் கொள்ளாதவன் வாழ்வானது தீயின் முன்புள்ள வைக்கோல் போர் அழிவதுபோல அழிந்துவிடும்.

25. மனத்தினாலும், இனத்தினாலும் கிடைப்பவை எவை?

மக்களுக்குப் பொது உணர்வு மனம் கருவியாக உண்டாகும்.

'இவன் இப்படிப் பட்டவன்' என்று உலகத்தவ ரால் சொல்லப்படும் சொற்கள் சேர்ந்து பழகும் இனத் தினால் உண்டாகும்.

26. இனந் தூய்மையால் என்ன நன்மை விளையும்?

சிறப்பான அறிவை வெளிப்படுத்துவதற்கு இடமான மனத்தினது தூய்மைத் தன்மையும், செய்யும் செயல்களின் தூய்மைத் தன்மையும் ஆகிய இரண்டும் பழகும் இனத்தின் தூய்மையைப்பற்றுக் கோடாகக் கொண்டு ஒருவனுக்கு உண்டாகும்.

27. வலியறிதலின் இன்றியமையாமையை விளக்குக.

தம்முடைய வலிமையை ஆராய்ந்து அறியாமல் மன எழுச்சியால் தம்மை விட வலிமை மிக்கவரோடு போட்டியிட்டு அப்போட்டி முடிவதற்கு முன்பே தோற்றவர் உலகில் பலர் ஆவர். எனவே வலியறிதல் இன்றியமையாதது.

28. யாருக்குச் செல்வம் சேரும் ?

காக்கைகள் தமக்குக் கிடைத்த இரையை மறைக்காமல் தம் இனத்தையும் அழைத்துக் கூடி உண்ணும். செல்வமும் காகத்தைப் போன்ற (சுற்றம் தழுவும்) தன்மை உடையவரிடத்துச் சேரும்.

29. கொடியவரை அரசன் கொலை செய்வது எதற்கு ஒப்பாகும் ?

அரசன் கொடியவர்களைக் கொலையால் தண்டித்தல் உழவன் விளைவிக்கும் பயிரைச் செழிக்கச் செய்யக் களைகளை நீக்குவதற்கு ஒப்பாகும்.

30. கண்ணிற்கு அணிகலம் எது ? பிற கண்கள் எத்தகையன ?

ஒருவன் கண்ணுக்கு அணியும் அணியாவது இரக்கம் கொண்ட பார்வையாகும். அவ்விரக்கப்பார்வை ஒருவன் கண்களிலே இல்லையானல் அவன் கண்கள் கண்களாக மதிக்கப்படா. புண்களாகவே அறிஞர்களால் கருதப்படும்.

## ஆ. நாலடியார்

### 1. உலகத்தார் இயல்பை விளக்குக.

ஒருவன் செல்வனுய் வாழுங் காலத்தில் மிகுந்த சுற்றத்தார்கள் ஆகாயத்தில் தோன்றி ஒளி வீசும் நட்சத்திரங்களை விட அதிக எண்ணிக்கையில் வந்து சூழ்ந்து கொள்வார்கள். பொறுக்க இயலாத வறுமையை அவர் அடையும்பொழுது அவருடைய உறவினர் என்று சொல்லக் கூடியவர்கள் சிலரே ஆவர். இதுவே உலகத்தார் இயல்பு ஆகும்.

### 2. தந்தை மக்கட்கு எச்சமாக எதனை வைக்க வேண்டும்? ஏன்?

ஒருவன் தன் பிள்ளைகளுக்குச் சேர்த்துவைக்க வேண்டியன பல்வகைக் கல்விகளே ஆகும். மற்றைய வீடு, மாடு முதலியன செல்வம் அல்ல.

கல்வியானது பிறரால் எடுத்துக் கொள்ளப்பட மாட்டாது. அக் கல்வி மிக உண்டாகி மற்றவர்க்குக் கற்பித்தால் குறைவு படாது. அரசர் கோபித்தாலும் அக்கல்வியைக் கவரமாட்டார். எனவே கல்வி மக்கட்கு எச்சமாக வைக்கத் தகுந்த பொருளாகும்,

### 3. மைந்தரது கடமை என்ன? விளக்குக.

தந்தைக்கு உதவிகள் செய்து தந்தையின் தளர்ச்சியைப் போக்குவதே மைந்தரது கடமையாகும்.

கறையானுல் அரித்துத் தின்னப்பட்ட ஆலமரத்தை அந்த மரத்தின் விழுதுகள் தூண் போன்றவை ஆகிப் புவியில் ஊன்றித் தாங்குவதுபோலத் தந்தையிடம் சோர்வு ஏற்பட்டால் அந்தத் தந்தை பெற்று வளர்த்த மகன் முயன்று அச்சோர்வை மறைக்கத் தந்தைக்குத் தளர்ச்சி கெட்டுப்போகும்.

4. கீழ்களை நள்ளார் அறிவுடையார்? ஏன்?

இரு கைகளாலும் வாரிக் கொள்ளலாம் என்னும் படி சிறிய அரும்புகளை உடையதாய் இருந்தாலும் தலையில் அணிந்துகொள்ளத் தகுந்த பூ அல்லாமையினால் கள்ளிப் பூவை யாரும் சூட மாட்டார்கள். அது போல மிக்க அறிவு படைத்தவர்கள், தாழ்ந்த கீழ்மக்கள் மிகுந்த செல்வம் பெற்றிருப்பினும் அவர்களை நெருங்க மாட்டார்கள்.

5. விழுமியோர் செயலையும், கீழோர் செயலையும் பற்றி நாலடியார் யாது கூறுகிறது?

அரசாளும் செல்வம் பெற்றாலும் மேன்மக்கள் ஒருபோதும் சொல்லத் தகாத சொற்களைச் சொல்ல மாட்டார்கள். ஆனால் தாழ்ந்தவன் எப்போதும் முந்திரி அளவு செல்வத்துக்குமேல், காணி அளவு செல்வம் மிகுதியாகக் கிடைத்து விட்டாலும் தன்னை இந்திரன் என்ற தேவர் தலைவனாக மதித்து விடுவான் என்று விழுமியோர் செயலையும் கீழோர் செயலையும் பற்றி நாலடியார் கூறுகிறது.

6. மேலோர் சினவார் என்பதற்கு நாலடியார் கூறும் உவமையைக் கூறிப் பொருளோடு பொருத்துக.

'கூர்த்துநாய் கௌவிக்கொளக் கண்டும் தம் வாயால் பேர்த்து நாய் கௌவினர் ஈங்கில்லை' என்னும் இவ் வுவமை, மேலோர் சினவார் என்பதற்கு நாலடியார் கூறும் உவமை ஆகும்.

நாயானது சினம் மிகுந்து கடித்துத் தசையைப் பிடுங்கப் பார்த்தாலும் பதிலாகத் தம்வாயினால் தம்மைக் கடித்த அந்த நாயினைக் கடித்தவர் இவ்வுலகில் இல்லை. அதுபோல இனிமையான சொல்லைக்கூருத

இழிந்த மக்கள் இழிவாகிய சொற்களைச் சொன்னாலும் மேலோர்கள் பதிலாகத் தம் வாயினால் இழிவான சொற்களைச் சொல்லார்.

7. எஞ்ஞான்றும் துன்பம் அடையாதவர் யார்?

அறிதற்கு உரிய நூலைக் குற்றம் அறக்கற்று அறிந்து, அஞ்சத்தகுந்த தீய செயலைச் செய்யப் பயந்து, தம்மைவிட்டு நீங்காமல் இருப்பதாகிய தருமத்தை உலகத்தார் மகிழும்படியாகச் செய்து கிடைக்கும் செல்வத்தைக்கொண்டு மன நிறைவுடன் இன்பத்துடன் வாழும் தன்மை உடையவருக்கு எக்காலத்திலும் துன்பங்கள் இல்லை.

8. பெரியவர் கேண்மை; சிறியவர் தொடர்பு— விளக்குக.

பெரியவருடன் கொண்ட நட்பானது வளர்பிறைச் சந்திரனைப் போல முறை முறையாகத் தானே வளரும்.

சிறியவருடன் கொண்ட கூட்டுறவானது விண்ணில் தவழும் பூரண சந்திரனைப் போல நாள் தோறும் தானாகக் குறையும்.

## (இ) பழமொழி

1. 'பாம்பறியும் பாம்பின் கால்' என்னும் பழமொழியால் அறியத்தகும் கருத்து யாது?

'அறிவு மிக்கவர்களை, அம் மிக்க அறிவினை ஆராய்ந்து அறிதல் அறிவிற் சிறந்தவர்களுக்கே விளங்கும். சிறந்த அறிவில்லாத மக்களுக்குத் தெரியாது' என்பது 'பாம்பறியும் பாம்பின் கால்' என்னும் பழமொழியால் அறியத் தகும் கருத்தாகும்.

2. கற்ருர்க்கு ஆற்றுணு வேண்டுவதில்—ஏன் ?

மிகவும் படித்து அறிந்தவர்கள் அறிவு உடையவர்கள் ஆவர். அக் கல்வி அறிவை உடையவர்கள் தெற்கு, கிழக்கு, வடக்கு, மேற்கு என்ற நான்கு திசைகளிலும் போகாத நாடுகள் இல்லே. அந்த நாடுகள் அவருக்கு அயல் நாடுகள் ஆகா. தம்முடைய நாடுகளே. அப்படித் தம்முடைய நாடுகள் ஆனுல் வழி நடப்பவர்கள் கொண்டு செல்லும் கட்டுச் சோறு அவர்களுக்குத் தேவை இல்லே.

3. நற்குலமும், செல்வமும் இருப்பினும் அறிவே சிறந்தது என்பதை விளக்குக .

நெருப்புப் பொறி போன்ற மாணிக்கங்களும், பொன்னும், சந்தனமும், மலர்மாலேயும் ஆகிய இவை போன்ற அணிகலன்களும் உடுக்கும் ஆடைக்குப் பின்னே தான் சிறப்புடையன. அதைப்போல அறிவின் பெருமை சிறிதும் இல்லாத ஒருவன் செல்வம் குலம் முதலியவற்ருல் சிறப்படைய இயலுவதில்லே. எனவே நற்குலமும் செல்வமும் இருப்பினும் அறிவே சிறந்தது.

4. கற்றலின் கேட்டலே நன்று—என்ற கருத்தை முன்றுறையரையனுர் எவ்வாறு விளக்குகிருர் ?

'குடிப்பதற்கு இனிமையான இந்தத் தண்ணீர், தான் உள்ள இடம் தவிர வேறு இடத்தில் இல்லே என்றெண்ணும் கிணற்றுத் தவளேயைப்போலக் கற்றவர்கள் இருக்க மாட்டார்கள். ஏனென்ருல் ஒருநூலே முழுவதும் ஒவ்வொரு நாளும் வெறுக்காமல் தானே படித்துக் கற்பதைவிடப் பல நூல்களேயும் வல்லவர் சொல்லக் கேட்டு அறிவதே நல்லது' என முன்றுறை அரையனுர் கூறுகிருர்.

5. கீழ் வரும் பழமொழிகளை விளக்கி வரைக.

(அ) மதியம் போல் பன்மீனும் காய்கலா ஆகும் நிலா.

(ஆ) புலித்தலையை நாய் மோத்தல் இல்.

(அ) மதியம் போல் பன்மீனும் காய்கலா ஆகும் நிலா.

உலகில் பரவியுள்ள இரவுக்காலத்தின் இருட்டைப் போக்கும் சந்திரனைப்போல ஆகாயத்தில் உள்ள பல நட்சத்திரங்களும் ஒளியைத் தரமாட்டா. அதுபோல இந்த மிகப்பெரிய உலகில் அறிவு அற்றவர்கள் ஆயிரம் பேர்கள் கூடினாலும் அறிவின் சிறப்புடைய ஒருவனுக்கு ஒப்பாகார்.

(ஆ) புலித்தலையை நாய் மோத்தல் இல்.

பலம் கெட்டு நரம்புகள் இழுக்கப்பட்டுத்தசைச் சுருக்கம் அடைந்து நடக்கவும் சக்தி அற்றுப் படுத்து விட்டாலும் புலியினுடைய தலையை நாயானது மோந்து பார்த்தல் இல்லை. அதுபோல நாட்டில் உள்ள அனைவராலும் தெரிந்து கொள்ளப்பட்ட பெரிய செல்வத்தை உடையவர் வறுமை அடைந்து தளர்ந்த காலத்திலும் மற்ற ஒருவருக்குத் தாழ்வு அடையார்.

## (ஈ) திரிகடுகம்

1. 'இம்மூவர் கேளாக வாழ்தல் இனிது'—மூவர் யார்? விளக்குக.

முயற்சி உடையவன் என்று சொல்லப்படுபவன் கடன் படாமல் வாழ்பவன். நிலத்தை உழுது பயிரிடும் உழவன் என்று சொல்லப்படுபவன் விருந்தினர் பசி கொண்டிருக்கத் தான் மட்டும் உண்ணாதவன் ஆவான். கற்பிப்பதைத் தன் மனத்தில் கொள்ளும் மாணாக்கன் என்று சொல்லப்படுபவன் கற்றதை மறந்துவிடாதவன் ஆவான். இந்த மூவரையும் ஒருவன் தன் நண்பாரகக் கொண்டு வாழ்வது இன்பம் தருவது ஆகும்.

2. 'இம் மூன்றும் செல்வம் உடைக்கும் படை'— மூன்று யாவை? விளக்குக.

தன்னைத் தானே புகழ்ந்துகொண்டு செருக்கு அடைதலும், பணிவு இல்லாமல் கோபத்தை வீணாக அதிகப் படுத்தலும், தான் பெறக் கருதிய பிறர்க்குரிய பல பொருள்களையும் தான் அடைய விரும்பும் கீழ்க் குணமும் ஆகிய இம் மூன்று தன்மைகளும் ஒருவன் செல்வத்தை அழிக்கும் ஆயுதங்கள் ஆகும்.

3. உறுதியற்ற மூன்று பொருள்கள் யாவை?

உள்ளது போதும் என்னும் மன நிறைவு உடையவனைக் கண்டு வறுமை பயப்படுதலும், அறத்தையே நினைப்பவனைக் கண்டு புண்ணியம் அல்லாத பாவம் பயப்படுதலும், கொலைத் தொழில் செய்பவனைக் கண்டு போர்க்களத்திற்கு வந்த எல்லா உயிர்களும் பயப்படுதலும் இந்த மூன்று அச்சங்களும் உறுதி அற்ற பொருள்கள் ஆகும்.

## (உ) இன்னா நாற்பது

இன்னாதனவாக நும் பாடப்பகுதியில் வந்தவற்றைத் தொகுக்க.

1. தானும் உண்ணாமல் சேர்த்து வைக்கும் சேமிப்புப் பொருள் மிக்க துன்பம் தருவது ஆகும்.

2. பொருந்தாத பகைவருடன் கூடும் கூட்டுறவு துன்பம் தருவது ஆகும்.

3. பார்வை யில்லாத ஒரு குருடனது அழகு துன்பம் தருவது ஆகும்.

4. இலக்கங்கள் தெரியாதவன் செய்கின்ற கணக்குத் துன்பம் தருவது ஆகும்.

5. அடங்குதல் உடையவனின் வீரம் துன்பம் தருவது ஆகும்.

6. முயற்சி இல்லாதவன் தன்னைப் பெரியவனாக நினைத்துப் படும் கருவம் துன்பம் தருவது ஆகும்.

7. காப்பாற்றி வைக்கப் பிறன் தன்னிடம் தந்த பொருளைக் கவர்ந்து கொள்ளுதல் துன்பம் தருவது ஆகும்.

8. அறிவு உடையோர் அடக்க, அதற்கு அடங்காதவருக்குக் கூறும் சொற்கள் துன்பம் தருவன ஆகும்.

## (ஊ) இனியவை நாற்பது

இனியவையாக நும் பாடப் பகுதியில் கூறப்பட்டனவற்றைத் தொகுக்க.

1. கற்றவர்க்கு முன்பு, ஒருவன்தான் கற்ற கல்வியை எடுத்துக் கூறுதல் மிகவும் இனியது ஆகும்.

2. கல்வி அறிவு ஒழுக்கங்களால் சிறந்தவர்களுடன் கூடியிருத்தல் மிகவும் பெருமைப்படத்தக்க வகையில் இனியது ஆகும்.

3. எள் அளவு பொருளே ஆனாலும் பிறரிடம் பிச்சை வாங்காமல் அயலார்க்குக் கொடுத்தல் எல்லா விதத்திலும் மிகவும் இனியது ஆகும்.

4. தனக்கு வருகின்ற பொருளின் அளவினை அறிந்து பிறர்க்குக் கொடுத்தல் இனியது ஆகும்.

5. வேண்டியவர் என்ற எண்ணத்துடன் ஒருவருக்குச் சார்பு ஆகா மனவெழுச்சி இனியது ஆகும்.

6. பெரிய பயனைத் தருவது ஆனாலும் தாம் விரும்பியவற்றை ஆராயாமல் செய்யாதவராய் தம் இயல்பில் மாறுபடாது வாழ்க்கையை நடத்துவது இனியது ஆகும்.

7. கீழ்மக்களை நீக்கி வாழ்வது இனியது ஆகும்.

8. தான் மேலும் மேலும் உயர்தலை நினைத்து ஒருவனுக்கு மன எழுச்சி உண்டாவது இனியது ஆகும்.

9. 'இவர் ஏழை' என்று அவமதித்துப் பேசாதவராகிப் புகழ் உண்டாக வாழ்வது இனியது ஆகும்.

---

# 3. கதைப் பகுதி

## (அ) நள வெண்பா

இது நளனது கதையைக் கூறும் நூல்; வெண்பாவால் ஆனது. நளன், மாவிந்தம் என்ற நகரைத் தலைநகராகக் கொண்டு நிடத நாட்டை அரசாண்டவன்; சந்திர குல அரசன். இவனது வரலாற்றைப் புகழேந்திப் புலவர் நளவெண்பாவில் பாடியுள்ளார். நளவெண்பா 427 வெண்பாக்களைக் கொண்டது.

நள வெண்பா சுயம்வர காண்டம், கலிதொடர் காண்டம், கலி நீங்கு காண்டம் என்னும் மூன்று பிரிவுகளை உடையதாகும். (காண்டம் — பெரும்பிரிவு)

### ஆசிரியர் வரலாறு

ஆசிரியர் — புகழேந்திப் புலவர்

ஊர் — பொன் விளைந்த களத்தூர் (செங்கற்பட்டு மாவட்டம்)

மரபு — வேளாளர்

மதம் — வைணவம்

ஆதரித்தோர் — சந்திரன் சுவர்க்கி

பாடிய வேறு நூல்கள் — அல்லி யரசாணி மாலை, பஞ்ச பாண்டவர் வனவாசம், இரத்தினச் சுருக்கம் முதலியன

காலம் — 12 ஆம் நூற்றாண்டு என்பர்.

**நளன் வரலாற்றுச் சுருக்கம்:**

நிடத நாட்டு வேந்தனாகிய நளன் சோலையில் தோன்றிய அன்னத்தால், விதர்ப்பநாட்டைக் குண்டின புரத்திலிருந்து அரசாண்ட வீமன் மகள் தமயந்தியின் அழகையும் குணத்தையும் பற்றி அறிந்தான். அவ்வன்னத்தைத் தமயந்தியின்பால் தன்னைப் பற்றிக் கூறுமாறு தூது அனுப்பினான்; அன்னம் தூது சென்று உடன்பாடு பெற்று வந்தது.

வீமன், தமயந்திக்குச் சுயம்வரம் நிகழ்த்த எண்ணி ஞன். சுயம்வரத்திற்கு இந்திரன், இயமன், அக்கினி, வருணன் ஆகிய தேவர்கள் நளன் உருவில் வந்தனர்; தமயந்தி அன்னம் கூறிய உண்மை நளன் வந்திருப் பதைச் சில அறிகுறிகளால் உணர்ந்து அவனுக்கே மாலே சூட்டிஞள்.

தேவர்கள் வெட்கமுற்று விண்ணுலகம் செல்லும் வழியில் கலி மகனைக் கண்டனர்; நிகழ்ந்தவற்றைக் கூறினர். கலி சினம் கொண்டான்; தமயந்தியையும் நளனேயும் பிரிக்கக் காலம் பார்த்திருந்தான்; புட்கரன் என்னும் மன்னனை நளனேடு சூதாடுமாறு ஏவிஞன். நளன் அவனிடம் தன் செல்வம் முழுதும் வைத்துத் தோற்ருன்.

நளன் தன் மக்களைக் குண்டின புரத்தில் மாமனிடம் சேர்ப்பித்தான்; தமயந்தியுடன் கானகம் சென்ருன்; காட்டில் கலியின் சூழ்ச்சியால் தமயந்தியைப் பிரிந்தான்; தீயில் சிக்கிய கார்க்கோடகன் என்னும் பாம்பை எடுத்து மீட்டபோது அதனுல் கடிக்கப்பட்டுக் கறுத்த உருவம் பெற்ருன்; பழைய உருவம் பெற நினைத்தால் அணி யுமாறு கூறிக் கார்கோடகனுல் தரப்பட்ட ஆடைகள் இரண்டையும் பெற்று அயோத்திக்குச் சென்ருன்; அந்நகரை யாண்ட இருதுபன்னனிடம் தேர்ப்பாகனுய் வேலே செய்தான்.

வீமனை அடைந்த தமயந்தி, நளனை அடைவதற் கான முயற்சிகளில் ஈடுபட்டாள்; நளன் இருதுபன் னனிடம் இருத்தலே அந்தணன் ஒருவன் வாயிலாக உணர்ந்தாள். தமயந்திக்கு இரண்டாம் சுயம்வரமென வீமன் ஓலே போக்கவே இருதுபன்னனின் தேரை யோட்டிக்கொண்டு நளன் குண்டினபுரம் அடைந்தான்.

நளனது வருகையைக் கண்ட தமயந்தி தன்மக்களை யனுப்பி, அவனே நளனென உணர்ந்தாள்; தந்தையுடன் நளனிடம் சென்று உண்மையுருக் காட்டுமாறு வேண்டினாள். நளன் கார்க்கோடன் அளித்த துகிலை உடுத்து உண்மையுருக் காட்டினான்.

நளன் மனைவிமக்களுடன் நிடதநாடு சென்று புட்கரனை வென்று முடிசூடிக் குடிகளை நன்கு காத்து வாழலானான்.

## கலி நீங்கு காண்டம்

நளனைப்பிடித்த கலி நீங்கும் நிகழ்ச்சியை விளக்கும் பகுதி. இது நள வெண்பாவின் மூன்றாம் காண்டமாகும்.

### பாடல் 1.

### நளனை நாடியறிய உபாயம் நவிலல்

சொற்பொருள்

தண்கோதை – குளிர்ச்சி பொருந்திய மாலையை அணிந்த தமயந்தி
மின்னுப்புரை – மின்னலைப் போல
கதிர்வேல் – ஒளி வீசும் வேலை உடைய
வேந்தன்–வீம மன்னனின்
புரோகிதனுக்கு–செய்திகளை அறிந்து சொல்பவனுக்கு
என்னை இருங்கானில் – என்னைப் பெரிய காட்டில்
நீத்த – விட்டுப் பிரிந்த
இகல் வேந்தன் தன்னை – போர் மன்னனாகிய நளனை
நீ நாடுக – நீ தேடிக் கொண்டு வருக
என – என்று
உணர்ந்து – தெரிந்து
இந்த உரை – இத்தகைய சொற்களை
பகர்வதானாள்–கூறினாள்.

பொழிப்புரை

குளிர்ச்சி பொருந்திய மாலையை அணிந்த தமயந்தி மின்னலைப் போல ஒளி வீசும் வேலையுடைய வீமராசனின் புரோகிதனுக்கு, "என்னைப் பெரிய காட்டிலே விட்டுப் பிரிந்த போர் மன்னனாகிய நளனை நீ தேடிக் கொண்டுவருக' என்று இத்தகைய சொற்களைக்கூறினாள்.

### கருத்துரை

தமயந்தி வீமனின் புரோகிதனை அழைத்து நளனைத் தேடிவருக எனக்கூறி யனுப்பினுள்.

### இலக்கணம்

கோதை-கோதையை அணிந்த பெண்ணைக் குறிக்கும்.

நீத்த—பெயரெச்சம்

நாடுக—வியங்கோள் வினைமுற்று

தண்கோதை—எழுவாய்; பகர்வதானுள்-பயனிலை

### பயிற்சி

| | |
|---|---|
| என்னை என்பதில் உள்ள ஐ | ஆகிய இவை என்ன வேற்றுமை உருபுகள் ? |
| இருங்கானில் என்பதில் உள்ள இல் | |
| புரோகிதனுக்கு என்பதிலுள்ள கு | |

## பாடல் 2.

### சொற்பொருள்

கார் இருளில்-(தமயந்தி) கரிய இருட்டில்

பாழ் மண்டபத்தே-பாழடைந்த மண்டபத்தில்

தன் காதலியை- தன் மனைவியை

சோர் துயிலில் - அயர்ந்த துயிலில்

நீத்தல்-விட்டுப் பிரிதல்

தேர்வேந்தற்கு-தேரினை உடைய பெரிய மன்னனுக்கு

துணிவு அன்ருே-நல்ல செயல் ஆகுமா?

என்று அறைந்தால்-என்று நீ சொன்னுல்

எதிர் மாற்றம்-(அதைக் கேட்டு) மறுமொழியை

தந்தாரை - சால்கின்றவரை

சென்று அறிந்து வா-போய்த் தெரிந்து கொண்டு வருக

என்ருள் தேர்ந்து – என்று நன்கறிந்து கூறினுள்.

### பொழிப்புரை

கரிய இருட்டில் பாழடைந்த மண்டபத்தில் தன் மனைவியை அயர்ந்த தூக்கத்தில் விட்டுப்பிரிதல் பெரிய மன்னவனுக்கு நல்ல செயல் ஆகுமோ?' என்று நீ சொன்னால், அதைக்கேட்டுப் பதில் உரை சொல்கின்ற வரைப் போய்த்தெரிந்துகொண்டு வருக எனத் தமயந்தி நன்கு அறிந்து புரோகிதனிடம் கூறினாள்.

### கருத்துரை

தமயந்தி நளனை அறிந்து வருவதற்காகப் புரோகிதனுக்கு ஓர் உபாயம் கூறியனுப்பினாள்.

### இலக்கணம்

கருமை + இருள் = காரிருள்

வேந்தன் + கு + என்று + அறைந்தால் = வேந்தற் கென்றறைந்தால்

தந்தார்—வினையாலணையும் பெயர்

சென்று + அறிந்து = சென்றறிந்து

வா—முன்னிலை ஏவல் வினைமுற்று

### பயிற்சி

இருளில், காதலியை, வேந்தற்கு, என்பவற்றில் உள்ள உருபுகளைக்காட்டி இன்ன வேற்றுமைக்கு உரிய உருபு என? எழுதுக.

## பாடல் 3.

புரோகிதர் பல இடங்களிலும் தேடி அலைந்தார்; பின்னர் அயோத்தியில் இருதுபன்னனுடைய அரண்மனை வாயிலை அடைந்தார்.

### புரோகிதன் வினவுதல்

#### சொற்பொருள்

(புரோகிதன்)

கானகத்து – காட்டில்

காதலியை – மனைவியை

கார் இருளில்–நடு இரவில்

கை விட்டு – தனியாக விட்டு விட்டு

போனதுவும்-சென்றதுவும்

வேந்தற்குப் போதுமோ தான்-அரசனுக்குத் தகுதியான செயல் ஆகுமா?

என்று சாற்றினன்–எனக் கேட்டான்

அந்த உரை–அந்த சொற்றொடரை

தார் வேந்தன்–மாலை அணிந்த நளன்

தன் செவியில்– தன் காதினுள்

ஏற்றினன்-ஏற்றுக்கொண்டவனாய்

எதிர்–(புரோகிதன்) எதிரில்

வந்தான்–வந்து தோன்றினன்.

#### பொழிப்புரை

'காட்டில் மனைவியை நடு இரவில் தனியாக விட்டு விட்டுச் சென்றது அரசனுக்குத் தகுதியான செயலா?' எனப் புரோகிதன் கேட்டான். அச் சொற்றொடரை மாலையணிந்த நளன் தன் காதினுள் ஏற்றுக் கொண்டவனாய்ப் புரோகிதன் எதிரில் வந்து தோன்றினன்.

#### கருத்துரை

அயோத்தியை அடைந்த புரோகிதன் தமயந்தி கூறியனுப்பியவாறு, 'காட்டில் மனைவியைக் கைவிடுதல் அரசருக்குத் தகுதியோ?' என வினவினன். நளன் இச் சொற்றொடர் கேட்டு முன் வந்தான.

### இலக்கணம்

சாற்றினுன், வந்தான்—இறந்தகால வினைமுற்றுக்கள். சாற்று, வா என்பன பகுதிகள்.

### பயிற்சி

காதலியை, இருளில், வேந்தற்கு, செவியில் என்பவற்றில் உள்ள உருபுகளை எடுத்தெழுதி இன்ன வேற்றுமை என்றும் எழுதுக.

## பாடல் 4.

## நளன் மறுமொழி

### சொற்பொருள்

நீ –(புரோகிதனுகிய) நீ
தண் தரளம்-குளிர்ச்சி மிக்க முத்துக்களால் கோக்கப்பட்ட
பூத்தாம வெண்குடையான்-மாலைகளையும் வெண் கொற்றக் குடையையும் உடைய வீமனின்
பொன் மகளை - அழகிய மகளான தமயந்தியை
வெவ்வனத்தே - கொடிய காட்டில்
நீத்தான் - கைவிட்டுச் சென்றுன்
என்று ஐயுறேல் –என ஐயம் கொள்ளாதே
ஒண்தொடி தன்னை – ஒளி வீசும் வளையல்களை அணிந்த தமயந்தியை
உறக்கத்தே – அவள் தூங்கும் போது
நீத்ததுவும் – பிரிந்து சென்ற செயலும்
பண்டைவிதியின் பயனே– முன்செய்த வினையின் பயனே ஆகும்
காண் – இதை அறிக

### பொழிப்புரை

'குளிர்ச்சி மிக்க முத்துக்களால் கோக்கப்பட்ட மாலைகளையுடையவனும் வெண்கொற்றக் குடையை உடையவனும் ஆகிய வீமனின் அழகிய மகளான தமயந்தியைக் கொடிய காட்டில் கைவிட்டுச் சென்றுனே என்று புரோகிதனுகிய நீ ஐயப்படாதே. ஒளி வீசும் வளையல் அணிந்த தமயந்தியை அவள் தூங்கும்போது பிரிந்து, சென்ற செயல்,முன் செய்த வினையின் பயனே ஆகும். இதை நீ அறிக' என நளன் கூறினுன்.

**கருத்துரை**

அரசன் தமயந்தியைப் பிரிந்தது முன் செய்த ஊழ்வினையின் பயன் என்று நளன் புரோகிதனிடம் கூறினன்.

**இலக்கணம்**

தொடி-தொடியை அணிந்த பெண்ணைக் குறிக்கும்.
தண் + தரளம் + பூ + தாமம் = தண்டரளப் பூத்தாமம்
வெம்மை + வனம் = வெவ்வனம்
நீத்தான் + என்று + ஐயுறேல் = நீத்தானென்றை யுறேல்

நீத்தான்—இறந்தகால வினைமுற்று;
ஐயுறேல்—எதிர்மறை வினைமுற்று.

## பாடல் 5

## புரோகிதன் தமயந்தியிடம் மீண்டு வந்து கூறுதல்

**சொற் பொருள்**

நூல் ஏந்து-பூணூல் அணிந்த
மார்பன்-மார்பையுடைய புரோகிதன் (தமயந்தியை நோக்கி)
பூகமழும்-பூக்களின் மணம் வீசும்
கூந்தலாய்- கூந்தலையுடைய தமயந்தியே!
அகுலப்பாகன்-அந்த உயர் குலத்திலே தோன்றிய தேரோட்டி
வாக்கினல்-(தனது) பேசும் மொழிகளால்
மன்னவனை-நளனை
ஒப்பான்-ஒத்திருக்கிறான்
மறித்து-மீண்டும்
ஒருகால்-ஒருமுறை
ஆக்கையே-உடலை
நோக்கின்-பார்த்தால்
அவன் அல்லன்-நளன் அல்லாதவனுகத் தோன்றுகிறுன்
என்று எடுத்து உரைத்தான்-என விளங்கும் வண்ணம் கூறினன்.

## பொழிப்புரை

பூணூல் அணிந்த மார்பினை உடைய புரோகிதன் தமயந்தியை நோக்கிப் 'பூக்களின் மணம் வீசும் கூந்தலை யுடைய தமயந்தியே ! அந்த உயர்குலத்தில் தோன்றிய தேரோட்டி, தனது பேசும் மொழிகளால் நளனை ஒத்திருக்கிறான்; மீண்டும் ஒரு முறை உடலைப் பார்த்தால் நளன் அல்லாதவனாகத் தோன்றுகிறான்' என விளங்கும் வண்ணம் கூறினான்.

## கருத்துரை

புரோகிதன் தமயந்தியிடம் தான் கண்ட தேரோட்டி, பேச்சால் அரச குலத்தவன் போலத் தோன்றினாலும் உருவத்தால் அவ்வாறு இலன் எனக் கூறினான்.

## இலக்கணம்

ஒப்பான் × ஒவ்வான் - எதிர்ச் சொற்கள்

ஒப்பான் – எதிர்கால வினைமுற்று

மறித்து + ஒருகால் = மறித்தொருகால்

அவன் + அல்லன் = அவனல்லன்

கூந்தலாய் – விளி; கூந்தலாள் – முதல் வேற்றுமை

உரைத்தான் – இறந்தகால வினைமுற்று. இதற்கு எழுவாய் நூல்மார்பன் என்பது.

## பயிற்சி

வாக்கினால், மன்னவனை, என்பவற்றில் உள்ள வேற்றுமை உருபுகளை எடுத்தெழுதி இன்னவேற்றுமை உருபு என்றும் எழுதுக.

## பாடல் 6

### தமயந்தி அதுகேட்டு நளனை அறிய மேலும் ஒரு வழிகூறிப் புரோகிதனை அயோத்திக்கு அனுப்புதல்

#### சொற் பொருள்

அந்தண – புரோகிதனே!
நீ போய்-நீன் (அயோத்திக்கு) மறுமுறை சென்று
வீமன் திரு மடந்தை– வீமனின் அழகிய மகளான தமயந்தி
மீண்டு – மறுமுறையும்
ஓர் சுயம்வரத்தை – ஒரு சுயம்வரத்தை
பூண்டாள் என்று - மேற்கொண்டாள் என்று
உரைத்தால் – கூறினுல்

நீண்ட கொடை - (பெருங் கொடை) வள்ளலான
வேந்தற்கு – அரசன் இருதுபன்னனுக்கு
தேர்க்கோலம் - தேரோட்டியாக
படைவேந்தன் – படைகள் உடைய நளமன்னன்
இத்தூரம் கொள்வான் – இவ்விடம் வருவான்
பரிந்து – (என இங்ஙனம்) பரிவுடன்
என்ருள் – (மற்ருெரு உபாயம்) கூறினுள்.

#### பொழிப்புரை

'புரோகிதனே! நீ அயோத்திக்கு மறுமுறையும் சென்று வீமராசனின் அழகிய மகளான தமயந்தி, மறுமுறையும் ஒரு சுயம்வரத்தை மேற்கொண்டாள் என்று கூறினுல், பெருங் கொடை வள்ளலான அரசன் இருது பன்னனுக்குத் தேராட்டியாகப் படைகளைப் பெற்ற நளமன்னன் இவ்விடத்திற்கு வருவான்' என இங்ஙனம் பரிவுடன் மற்ருெரு உபாயம் கூறினுள்.

#### கருத்துரை

தமயந்திக்கு மற்ருெரு சுயம்வரம் என இருது பன்னனுக்குக் கூறினுல், நளன் அவனுக்குத் தேரோட்டியாகக் குண்டினபுரத்திற்கு வருவான் என்பது மற்ருெரு உபாயம் ஆகும்.

### இலக்கணம்

பூண்டாள் + என்று + அந்தண = பூண்டாளென்றந்தண

பரிந்து- வினையெச்சம்,
பூண்டாள்-இறந்தகால வினைமுற்று; இதற்கு எழுவாய் மடந்தை; பூண்-பகுதி.
அந்தண-விளி; அந்தணன்- முதல் வேற்றுமை.

## பாடல் 7

## தமயந்தி தோழிக்குக் கூறுதல்

### சொற்பொருள்

வளை ஆடும் - வளையல்கள் ஆடும்
கையாள் – கைகளை உடைய தமயந்தி
மதித்து – முடிவு செய்த வாறு
கோதை – மாலை சூட்டப் பட்ட
நெடுவேல் - நீண்ட வேலை உடைய
குமரனையும் – மகனாகிய (இந்திர சேனனையும்)
தங்கையையும்-அவன் தங்கை(இந்திரசேனை)யையும்
ஆதிஅரசன்-தம் முன்னைய அரசன் (என்று கருதப்படும் நளனது)
அருகுஆக – அருகில்
போத – போய்
விளையாட விட்டு- விளையாடும்படி விட்டு
அவன்தன் மேல் செயல்- அதற்குமேல் அவனது செயல்களை
நாடு – கூர்ந்து கவனி.
என்றாள் - எனக் கூறினாள்.

### பொழிப்புரை

வளையல்களாடும் கைகளை யுடைய தமயந்தி முடிவு செய்தவாறு மாலை சூட்டப் பட்ட நீண்ட வேலை உடைய மகனாகிய இந்திர சேனனையும் அவன் தங்கை இந்திர சேனையையும் தம் முன்னைய அரசன் என்று கருதப் படும் நளனது அருகில் போய் விளையாட விட்டு நளனது செயல்களைக் கூர்ந்து கவனி எனக் கூறினாள்

### கருத்துரை

நளன் என்று கருதப் படுபவன் எதிரில் குழந்தைகளை விளையாட விடுமாறும் அவன் செயல்களைக் கவனிக்குமாறும் தோழியிடம் தமயந்தி கூறினாள்.

### இலக்கணம்

நெடுமை + வேல் = நெடுவேல்

குமரனையும் தங்கையையும் என்பவற்றிலுள்ள உம் இடைச்சொல்; 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு

நாடு—முன்னிலை ஏவல் வினைமுற்று

வளை—காரணச் சிறப்புப் பெயர்

## பாடல் 8

## நளன் மக்களைக் கண்டு மகிழ்தல்

### சொற் பொருள்

வன்மக்களியானை-வலிமையும் மதமும் கொண்ட யானையை உடைய

மன்-அரசனாகிய நளன்

மக்களை-தன் புதல்வர்களை

முன் காணா-தன் எதிரே கண்டு

மனம் நடுங்கா-மனம் நடுங்கி

வெய்துயிரா-வெப்பமான பெருமூச்சு விட்டு

புக்கு-முன்வந்து

எடுத்து-அம்மக்களைத் தூக்கி

வீரப் புயத்தணையா-வீரத் தோள்களில் அணைத்து

மக்காள்-பிள்ளைகளே

நீர் என் மக்கள்

போல்கின்றீர்-நீர் இருவரும் என் புதல்வர்களைப் போல இருக்கின்றீர்கள்

யார் மக்கள்-நீவிர் யார் பெற்ற புதல்வர்கள்

என்று உரைத்தான்-என்று கேட்டான்.

### பொழிப்புரை

வலிமையும், மதமும் கொண்ட யானையை உடைய அரசனாகிய நளன் தன் புதல்வர்களைத் தன் எதிரே கண்டு மனம்நடுங்கி வெப்பமான பெருமூச்சு விட்டு

முன் வந்து அம்மக்களைத் தூக்கி வீரத் தோள்களில் அணைத்துப் 'பிள்ளைகளே நீங்கள் இருவரும் என் புதல்வர்களைப் போல இருக்கின்றீர்கள்! யார் பெற்ற புதல்வர்கள் ? என்று கேட்டான்.

### கருத்துரை

நளன் தன் பிள்ளைகளைத் தழுவிக் கொண்டு, 'என் மக்களைப் போலவே இருக்கிறீர்கள். நீர் யார் பெற்ற புதல்வர்கள் ?' என்று கேட்டான்.

### இலக்கணம்

காணு, நடுங்கா, உயிரா எடுத்து, அணையா—வினையெச்சங்கள்.

மக்காள்—விளி வேற்றுமை; மக்கள்—முதல் வேற்றுமை.

## பாடல் 9

## மக்கள் மறுமொழி

### சொற்பொருள்

அழுது -(பிள்ளைகள் நளனை நோக்கி)அழுதுகொண்டே
மன்னன் – பேரரசனும்
நிடதத்தார்வாழ் வேந்தன்- நிடத நாட்டினர் வாழ்வுக்குக் காரணமானவனும் ஆகிய நளனுடைய
மக்கள் யாம் – புதல்வர்கள் நாங்கள்
அவன் – அம் மன்னன்
அன்னைதனை – எங்கள் தாயாகிய தமயந்தியை
கான் விட்டு – காட்டில் விட்டு விட்டு
ஏக – பிரிந்து செல்ல
இந்நகர்க்கே வாழ்கின்றோம் - (நாங்கள் தாயுடன் குண்டின புர) நகரிலேயே வாழ்கின்றோம்
எங்கள் வளநாடு – எங்கள் வளம்பொருந்திய நிடத நாட்டை
மற்றொருவன் – சூதால் அடைந்த புட்கரன்
ஆள்கின்றான் – ஆட்சி புரிந்து வருகின்றான்
என்றார் – என்று கூறினர்கள்

### பொழிப்புரை

பிள்ளைகள் அழுது கொண்டே நளனை நோக்கி, "பேரரசனும், நிடத நாட்டினர் வாழ்வுக் காரணமானவனும் ஆகிய நளனுடைய புதல்வர்கள் நாங்கள். அம் மன்னன் எங்கள் தாயாகிய தமயந்தியைக் காட்டில் விட்டு விட்டுப் பிரிந்து செல்ல நாங்கள் தாயுடன் இந்தக் குண்டிபுர நகரிலேயே வாழ்கின்றோம். எங்கள் வளம் பொருந்திய நிடத நாட்டைச் சூதால் அடைந்த புட்கரன் ஆட்சி புரிந்து வருகிறான்" என்று கூறினார்கள்.

### கருத்துரை

'நாங்கள் நிடத நாட்டு மன்னனின் மக்கள்; தந்தை அன்னையைக் காட்டிலே விட்டுப் பிரிந்தார்; இங்கே தாயுடன் நாங்கள் உள்ளோம்; நிடத நாட்டை வேறொருவன் ஆள்கிறான்' என்று நளனுக்கு, அவன் மக்கள் மறுமொழி அளித்தனர்.

### இலக்கணம்

கான் + விட்டு + அவன் + ஏக = கான் விட்டவனேக

விட்டு, ஏக-வினை யெச்சங்கள்

வாழ்கின்றோம்—நிகழ் கால வினைமுற்று; தன்மைப் பன்மை; வாழ்—பகுதி.

ஆள்கின்றான்—நிகழ்கால வினைமுற்று; படர்க்கை ஒருமை; ஆள் — பகுதி.

# பாடல் 10

## நளன் தன் புதல்வனை வினவுதல்

### சொற் பொருள்

**மா தவத்தால் பெற்ற**–(நளன்) மிக்க தவத்தினால் பெற்ற

**இள அரசை நோக்கி**–தன் மகனாகிய இந்திரசேனனென்னும் இளவரசனைப் பார்த்து

**செங்கை**-சிவந்த கைகளைக் கொண்ட

**வள அரசே**–வளமிக்க நாட்டுக்கு உரியவனே

**உங்கள் அரசு**–உங்களுக்கு உரிமையான நாட்டை

**ஒருவன் ஆள**-மற்றொருவன் ஆண்டு கொண்டு இருக்க

**நீர் ஓடிப் போந்து**–நீங்கள் பயந்து ஓடிவந்து

**இங்ஙன்**–இந்த நகரிலே

**உறைதல்** இழுக்கு

**அன்றோ**–வாழ்ந்திருத்தல் குற்றம் அன்றோ

**என்று எடுத்து**

**உரைத்தான்**–என்று விளக்கமாகக் கூறினான்.

### பொழிப்புரை

நளன் மிக்க தவத்தினால் பெற்ற தன் மகனாகிய இந்திரசேனனென்னும் இளவரசனைப் பார்த்து, 'சிவந்த கைகளைக் கொண்ட வளம் மிக்க நாட்டுக்கு உரியவனே! உங்களுக்கு உரிமையான நாட்டை மற்றொருவன் ஆண்டு கொண்டிருக்க நீங்கள் பயந்து ஓடிவந்து இந்த நகரிலேயே வாழ்தல் குற்றம் அன்றோ?' என விளக்கமாகக் கூறினான்.

### கருத்துரை

'உங்கள் நாட்டை மற்றவன் ஆள நீர் பயந்து இங்குத் தங்குதல் குற்றம்' என்று இளவரசனுக்கு நளன் கூறினான்.

இலக்கணம்

ஆள;ஓடி — வினையெச்சங்கள்.

உறைதல் — தொழிற் பெயர்

செம்மை+கை=செங்கை

பெற்ற—இறந்த காலப் பெயரெச்சம்; பெறு-பகுதி.

## பாடல் 11

## புதல்வன் வெகுண்டு உரைத்தல்

### சொற் பொருள்

அடு மடையா- (இந்திரசேனன் நளனை நோக்கி) சமையல் தொழில் புரிகின்றவனே!

எஞ்சாது - எப்பொழுதும் தவருமல்

தீமையே கொண்ட- இழிவே கொண்ட

சிறு தொழிலாய்- கீழ்மையான தொழில்களைச் செய்பவனே

நெஞ்சால் நினைந்து - மனத்தால் நினைந்து

இம் மாற்றம்-(எம்மை அவமதித்த) இந்தச் சொல்லை

உரைக்க - சொல்ல

நீ அல்லது-உன்னைத்தவிர

மன்னர் அஞ்சாரோ- அரசர்கள் அஞ்ச மாட்டார்களா?

எங்கோமான்- எம் அரசனாகிய நளனின்

வாய்மையே - சத்தியமே

வலி - எங்களுக்கு ஆதாரம்

கண்டாய்- இதை நீ அறிவாயாக.

### பொழிப்புரை

இந்திரசேனன் நளனை நோக்கி 'சமையல் தொழில் புரிகின்றவனே! எப்பொழுதும் தவருமல் இழிவே கொண்ட கீழ்மையான தொழில்களைச் செய்பவனே! மனத்தால் நினைந்து எம்மை அவமதித்த இந்தச்

சொல்லைச்சொல்ல உன்னைத்தவிர அரசர்கள் அஞ்சு வார்கள். எம் அரசனுகிய நளனின் சத்தியமே எங்களுக்கு ஆதாரம். இதை நீ அறிவாயாக!' என்று கூறினன்.

கருத்துரை

'நீ சொன்ன இழி சொற்களைப் பிற மன்னர் கூறக் கூசுவார்கள்; நளனின் வாய்மையே எங்களுக்கு ஆதாரம்' என்று இந்திரசேனன் நளனிடம் கோபித்துக் கூறினன்.

இலக்கணம்

இ+மாற்றம்=இம்மாற்றம்; இ—புறச்சுட்டு
மடையா—விளி; மடையன்—முதல் வேற்றுமை
தொழிலாய்—விளி; தொழிலாய்-முதல்வேற்றுமை
கண்டாய்—ஏவல் வினைமுற்று; காண்—பகுதி

## பாடல் 12

## புதல்வன் வெகுண்டு உரைத்தல் (தொடர்ச்சி)

### சொற்பொருள்

பணிமுடியில் – (ஆதி சேடன் என்னும்) பாம்பின் தலையில் தங்கி இருக்கும்

பார் – உலகத்தினை

காக்கும் – ஆளும்

பார்வேந்தர் – உலக மன்னர்கள்

கந்து சுளியும் – கட்டுத் தறியை முரிக்கும்

கடாக் களிற்றின் – மதங் கொண்ட ஆண் யானை களைப் போல்

வந்து –விரைந்து வந்து

மணிமுடியின் – மணிகள் பதித்த முடிகளோடு

தாமும்-வணங்குதலால் உண்டாகிய

தேய்ந்த வடு – அழுந்திய தழும்புகளை

எந்தை – எம் தந்தை யாகிய நளனின்

கழல் இணையில் - வீரக் கழல் கட்டியிருக்கும் திரு வடிகளில்

எம்மருங்கும் காணலாம் – எல்லாப் பக்கங்களிலும் அடையாளமாகப் பார்க்கலாம்

### பொழிப்புரை

ஆதிசேடன் என்னும் பாம்பின் தலையில் தங்கி இருக்கும் உலகத்தினை ஆளும் உலக மன்னர்கள் கட்டுத்தறியை முரிக்கும் மதம் கொண்ட ஆண்யானைகளைப் போல வந்து மணிபதித்தமுடிகளினால் வணங்குதலால் உண்டாகிய அழுந்திய தழும்புகளை எந்தையாகிய நளனின் வீரக்கழல் கட்டியிருக்கும் திருவடிகளின் எல்லாப் பக்கங்களிலும் அடையாள மாகப் பார்க்கலாம்.

### கருத்துரை

'எம் தந்தையின் திருவடிகளில் உலகமன்னர்கள் யாவரும் பணிவார்கள்' என்று மேலும் இந்திரசேனன் நளனிடம் கூறினான்.

### இலக்கணம்

எம் + தந்தை = எந்தை

எ + மருங்கு = எம் மருங்கு; எ - புறச்சுட்டு

காக்கும், தாழும் - எதிர்காலப் பெயரெச்சங்கள்

தேய்ந்த - இறந்த காலப் பெயரெச்சம்

## பாடல் 13

## நளன் கூறிய நயவுரை

### சொற்பொருள்

கனிந்து உருகி-(நளன்) மனம் தளர்ந்து உருகி

கண்நீர் வார-தன்னுடைய கண்களிலிருந்து நீர் ஒழுக

முடிசாய்த்து-தலைவணங்கி

மன்னர் பெருமை-அரசர்களின் பெருமையை

மடையர் அறிவரோ- சமையற்காரர்களுக்குத் தெரியுமோ

உன்னை - உன்னைப்பற்றி

அறியாது - தெரிந்து கொள்ளாமல்

உரைசெய்த - பேசிய

என்னை முனிந்து அருளல் என்னைத் தயவுசெய்து கோபிக்காதே

என்று - என்று கூறி நின்றான்.

### பொழிப்புரை

'நளன் மனம் தளர்ந்துருகித் தன்னுடைய கண்களில் இருந்து நீர் ஒழுகத் தலை வணங்கி "அரசர்களின் பெருமை சமையற்காரர்களுக்குத் தெரியுமோ? உன்னைப்பற்றித் தெரிந்து கொள்ளாமற் பேசிய என்னைத் தயவு செய்து கோபிக்காதே' என்று கூறி நின்றான்.

### கருத்துரை

'உன் பெருமை தெரியாது பேசிய என்னைக் கோபிக்காதே' என்று நளன் இந்திரசேனனிடம் உளம் வருந்திக் கூறினான்.

### இலக்கணம்

அறியாது – எதிர்மறை வினையெச்சம்
செய்த – இறந்தகாலப் பெயரெச்சம்
முனிந்தருளல் – எதிர்மறை வினைமுற்று
நின்றான் – இறந்தகால வினைமுற்று; நில் – பகுதி
கண் – சினைப்பெயர்

## பாடல் 14

## தமயந்தி நிகழ்ந்தது அறிந்து வருந்துதல்

### சொற்பொருள்

கொற்றக்குமரனையும்– வெற்றிக்கு ஏற்ற பண்பு உள்ள மகனாகிய இந்திர சேனனையும்

கோதையையும்–மகளாகிய இந்திரசேனையையும்

அவன் கண்டு–நளன் பார்த்து

மற்றுத்தான்–அந்த நளன்

ஆங்குரைத்த வாசகத்தை- அங்கே சொன்ன சொல்லை

முற்றும் மொழிந்தார்– (தோழியர்கள் தமயந்தியிடம்) முழுவதும் சொன்னார்கள்

அம் மாற்றம்–அந்தச் சொற்களை

மொழியாத முன்னே– முடிப்பதற்கு முன்னாக

அழிந்தாள்-தமயந்தி மனம் உடைந்தாள்

அழுது விழுந்தாள்–அழுத படியேகீழே விழுந்தாள்.

பொழிப்புரை

வெற்றிக்கு ஏற்ற மகனாகிய இந்திரசேனனையும், மகளாகிய இந்திர சேனையையும் நளன் பார்த்து அங்கே சொன்ன சொல்லைத் தோழியர்கள் தமயந்தியிடம் முழுவதும் சொன்னார்கள். அந்தச்சொற்களை முடிப்பதற்கு முன்னாகத் தமயந்தி மனம் உடைந்தாள். அழுதபடியே கீழே விழுந்தாள்.

இலக்கணம்

கொற்றம்+குமரன்=கொற்றக்குமரன்
மற்று+அவன்+தான்=மற்றவன்றான்
மற்று - இடைச் சொல்
அவன் - சுட்டுப் பெயர் (அகச் சுட்டு)
மொழிந்தார் - படர்க்கை இறந்தகால வினைமுற்று
அ+மாற்றம் - அம் மாற்றம், அ - புறச்சுட்டு
விழுந்தாள் - படர்க்கைப் பெண்பால் இறந்தகால வினைமுற்று
அழுது - வினையெச்சம்

## பாடல் 15

## தமயந்தி தன் தந்தைக்கு நவிலல்

சொற் பொருள்

இத்திரு நகர்க்கு - இந்தச் சிறந்த நகரத்துக்கு
வந்து அடைந்த - வந்திருக்கும்
மன்னவற்கு - இருதுபன்னன் என்ற அரசனுக்கு
கொற்றத் தனித்தேரும் - வெற்றியை உடைய ஒப்பற்ற தேரையும்
கொண்டு அணைந்து - செலுத்திக்கொண்டு வந்து
மற்றும் - மேலும் அம் மன்னனுக்கு
மடைத்தொழிலே - சமையல் வேலையையும்
செய்கின்ற மன்னவன் - செய்கின்ற மன்னவனோ
எங்கள் - எங்களது
கொடைத் தொழிலான்
காண் - ஈகையிற் சிறந்த நளனென்பதை அறிக
என்றாள் குறித்து - என்று உறுதிப்படுத்திக் கூறினாள்

பொழிப்புரை

இந்தச் சிறந்த நகரத்துக்கு வந்திருக்கும் இருதுபன்னன் என்ற அரசனுக்கு வெற்றியை உடைய ஒப்

பற்ற தேரையும் செலுத்திக் கொண்டு வந்து மேலும் அம் மன்னனுக்குச் சமையல் வேலையையும் செய்கின்ற மன்னனே எங்கள், ஈகையிற் சிறந்த நளன் என்பதை அறிக என்று தமயந்தி உறுதிப் படுத்தினுள்.

கருத்துரை

'இருதுபன்னனின் தேர்ப்பாகனும், சமையற் காரனும் ஆகியவனே நளன்' என்று தந்தையாகிய வீமனிடம் தமயந்தி கூறினுள்.

இலக்கணம்

மற்று – இடைச்சொல்
இத்திருநகர் – இ – புறச்சுட்டு
வந்து + அடைந்த = வந்தடைந்த
வந்து; குறித்து – வினை யெச்சங்கள்
அடைந்த; செய்கின்ற – பெயரெச்சங்கள்
என்ருள் – படர்க்கைப் பெண்பால் இறந்தகால வினைமுற்று

## பாடல் 16

## வீமன் நளனைக் கண்டு வேண்டுதல்

சொற்பொருள்

மந்தி-பெண் குரங்கானது
பூகத்தின்-பாக்கு மரத்தின்
ஐந்தலைய-அழகிய உச்சியில் உள்ள
பாளைதனை-பாளையை
பைந்தலைய–நச்சுப் பையை தலையிலே உடைய
நாகப் பணம் என்று-நாகப் பாம்பின் படம் என்று
ஐயுற்று—ஐயம் கொண்டு
தெளியாது–மனத்துணி வில்லாமல்
இருக்கும் – பயந்து இருக்கும்
திருநாடா–அழகிய நிடத நாட்டுக்கு உரியவனே
உன்னை ஒளியாது–உன்னை மறைக்காமல்
உன் உருக் காட்டு–உன் உண்மை வடிவைக் காட்டுவாயாக (என்று வீமன் வேண்டினுன்.)

பொழிப்புரை

'பெண் குரங்கானது பாக்கு மரத்தின் அழகிய உச்சியில் உள்ள பாளையை, நச்சுப் பையைத் தலையிலே உடைய நாகப் பாம்பின் படம் என்று ஐயம் கொண்டு

மனத்துணிவில்லாமல் பயந்திருக்கும் அழகிய நிடத நாட்டுக்கு உரியவனே! உன்னை மறைக்காமல், உன் உண்மை வடிவை எமக்குக் காட்டுவாயாக' என்று வீமன் வேண்டினன்.

கருத்துரை

'பாக்கு மரத்தின் பாளையை நாகப் பாம்பின் படம் என்று மந்தி மயங்கும் நாட்டவனே! உன் உருவைக் காட்டுக' என்று நளனை வீமன் வேண்டினன்.

இலக்கணம்

தெளியாது—எதிர்மறை வினையெச்சம்
நாடா—விளி; நாடன்—முதல் வேற்றுமை
காட்டு+உன்—காட்டுன்

குறிப்பு: இப்பாடலில் பாக்கு மரத்தின் பாளையைப் பாம்பு எனக் கருதியதாக வருணிக்கப்பட்டுள்ளது. அது உண்மை நளனைத் 'தேரோட்டி' எனத் தவருக நினைத்திருந்த செய்தியை உள்ளடக்கிய வருணனை ஆகும்.

## பாடல் 17

## நளன் கார்க்கோடகன் அளித்த துகில்களை அணிந்து தனது பழைய வடிவை அடைதல்

### சொற்பொருள்

அக்காலம்-கலிபிடித்த அக்காலத்தில்
காதலியை-மனைவியை
கானகத்தே நீத்து-காட்டில் விட்டு
கரந்து உறையும்-மறைந்துவாழும்
மான் நகத் தேர்ப்பாகன் வடிவு - குதிரை பூட்டிய பெரிய மலை போன்ற தேரினை ஓட்டி வரும் பாகன் உருவம்
மிக்கோன்-திருமாலின்

உலகளந்த-(மகாபலிச் சக்கரவர்த்திக்காக) உலகத்தை அளந்த
மெய் அடியே-உண்மையான திருவடியே
சார்வாக-துணையாக
புக்கோர்-அடைக்கலம் புகுந்த அடியவர்களின்
அருவினை போல்-நீக்குதற்கியலாத பாவம் ஒழிவதைப் போல
போயிற்று-மாறியது (நளனது பழைய வடிவு வந்தது

### பொழிப்புரை

கலி பிடித்த அந்தக் காலத்தில் மனைவியைக் காட்டில் விட்டு மறைந்து வாழும் குதிரை பூட்டிய பெரிய மலை போன்ற தேரினை ஓட்டிவரும் பாகனுடைய உருவம் திருமாலின் உலகத்தை அளந்த திருவடியே துணையாக அடைக்கலம் புகுந்த அடியவர்களின் நீக்கு தற் கியலாத பாவம் ஒழிவதைப் போல மாறி நளனது பழைய வடிவு வந்தது.

### கருத்துரை

கார்க்கோடன் அளித்த உடைகளை அணிந்த உடன் நளனின் தேர்ப்பாகன் வடிவம் அடியவர் பாவம் நீங்கு வதைப் போல நீங்கியது; பழைய அரச வடிவம் வந்தது.

### இலக்கணம்

மான் + நகம் + தேர் = மானகத் தேர்

மிக்கோன் என்பதில் மிகு—பகுதி

உலகு + அளந்த = உலகளந்த

அளந்த—பெயரெச்சம்

சார்வு + ஆக = சார்வாக

அருமை + வினை = அருவினை

போயிற்றே—ஏ—இடைச்சொல்

வடிவு—எழுவாய், போயிற்று—பயனிலை

# பாடல் 18

## கலி புருடன் தோன்றி வரம்கொடுத்து மறைதல்

### சொற் பொருள்

கலி - சனி பகவான்
நன் காவி–அழகிய கருங் குவளை
மட்டு இறைக்கும்– தேனைச் சிந்தும்
சோலை–சோலைகளை உடைய
வள நாடன் முன்நின்று – வளப்பம் பொருந்திய நாட்டையுடைய நளனின் முன்வந்து
மின்கால் – ஒளியை வீசும்
அயில்வேலாய்- கூர்மையான வேலை யுடையவனே!
என் காலத்து – எனக்கு உரிய கலி காலத்தில்
உன்சரிதம் – உன்னுடைய வரலாற்றை
கேட்டாரை – விரும்பிக் கேட்டவரிடத்தே
யான் அடையேன் – நான் சார்ந்து துன்புறுத்த மாட்டேன்
மெய் – இஃது உண்மை
என்று - என்று
கட்டு உரைத்து – உறுதி கூறி
போனன் -சென்றான்.

### பொழிப்புரை

சனி பகவான் அழகிய கருங்குவளைத் தேனைச் சிந்தும் சோலைகளை உடைய வளப்பம் பொருந்திய நாட்டை உடைய நளனின் முன் வந்து, "ஒளியை வீசும் கூர்மையான வேலையுடையவனே! எனக்குரிய கலிகாலத்தில் உன்னுடைய வரலாற்றை விரும்பிக் கேட்டவரிடத்தே நான் சார்ந்து துன்புறுத்தமாட்டேன்; இஃது உண்மை' என உறுதி கூறிச் சென்றான்.

### கருத்துரை

சனி பகவான் நளனை நோக்கிக், 'கலி காலத்தில் உன் வரலாறு கேட்டவரை நான் துன்புறுத்த மாட்டேன்' என்று உறுதி கூறிச் சென்றான்.

### இலக்கணம்

அடையேன்—தன்மை ஒருமை எதிர்மறை வினை முற்று

வேலாய்—விளி; வேலான்—முதல் வேற்றுமை

மட்டு+இறைக்கும்—மட்டிறைக்கும்

போனுன்—இறந்த கால வினை முற்று

## பாடல் 19

## வீமனளித்த விருந்து

### சொற்பொருள்

**தாதுபுதைய**-மகரந்தப் பொடி மூடும்படி

**தேன் பாய்ந்து ஒழுகும்**-தேனுனது பாய்ந்து வடியும்படியான

**பூஞ்சோலை**-மலர்கள் மிக்க சோலைகளையே

**வேலி**-வேலியாகக் கொண்ட

**விதையக்கோன்**-விதர்ப்ப நாட்டு அரசனுகிய வீமன்

**வேதநெறிவழுவா**-வேதத்தில் கூறிய வழிகளிலிருந்தும் தவருத ஒழுக்கம் உடைய

**வேந்தனையும்**-நள மன்னனையும்

**பூந்தடங் கண் கோதையையும்** - தாமரை போன்ற பெரிய கண்களை உடைய தமயந்தியையும்

**மக்களையும்** - அவர்களின் இரு குழந்தைகளையும்

**கொண்டு போய்**-(மடைப் பள்ளியிலிருந்து) அரண் மனைக்கு அழைத்துக் கொண்டு சென்று

**விருந்து செய்தான்**-விருந்து ஊட்டினுன்.

### பொழிப்புரை

மகரந்தப் பொடி மூடும்படி, தேனுனது பாய்ந்து வடியும் மலர்கள் மிக்க சோலைகளையே வேலியாகக் கொண்ட விதர்ப்ப நாட்டு அரசனுகிய வீமன் வேதத்தில் கூறிய வழிகளிலிருந்தும் தவருத ஒழுக்கமுடைய நள மன்னனையும் தாமரை போன்ற பெரிய கண்களை

உடைய தமயந்தியையும் அவர்களின் இரு குழந்தைகளையும் மடைப்பள்ளியிலிருந்து அரண்மனைக்கு அழைத்துச் கொண்டு சென்று விருந்து ஊட்டினன்.

### கருத்துரை

நளன், தமயந்தி, இந்திரசேனன், இந்திரசேனை ஆகியோர்க்கு வீமன் விருந்து செய்தான்.

### இலக்கணம்

வழுவா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
பாய்ந்து + ஒழுகும் = பாய்ந்தொழுகும்
பாய்ந்து – வினையெச்சம்
ஒழுகும் – பெயரெச்சம்
பூ + சோலை = பூஞ்சோலை
செய்தான் – இறந்த கால வினைமுற்று.

## பாடல் 20

## நளன் வரவுகண்ட நகரமாந்தர் களிப்பு

[பின்னர், புட்கரனுடன் மீண்டும் சூதாடித் தன் நிடத நாட்டைப் பெற்று மாவிந்த நகருக்குள் நளன் தமயந்தியுடனும் இந்திரசேனன், இந்திரசேனையுடனும் புகுந்தான். மக்கள் மகிழ்ந்தனர்.]

### சொற்பொருள்

பார்பெற்று – தான் முன்பு தோற்றநாடு நகர் முதலியவற்றை மீட்டுக் கொண்டு
மாதோடு – தமயந்தியுடன்
மன்னன் வரக்கண்ட – நளன் வருவதைப் பார்த்த
மாநகர்க்கு – பெரிய மாவிந்த நகரத்துக்கு
எதிர் – ஒப்பாக
ஏதோ உரைப்பன் - எதைத் துணிந்து சொல்லுவேன்
கார் பெற்ற தோகையோ - மேகத்தைக் கண்டமயில் என்பேனோ ?

கண்பெற்ற வாள் முகமா– இழந்த கண்களை மீண்டும் பெற்ற ஒளி பொருந்திய முகம் என்பேனோ?

நீர் பெற்று உயர்ந்த – (நெடுங்காலம் எதிர் நோக்கிய மழை பெய்ய) நீரைப் பெற்று வளர்ந்த

நிறை புலமோ - விளைச்சல் நிறைந்த வயல் என்பேனோ (எதைச் சொல்லுவேன் ?)

பொழிப்புரை

தான் முன்பு தோற்ற நாடு நகர் முதலியவற்றை மீட்டுக் கொண்டு தமயந்தியுடன் நளன் வருவதைப் பார்த்த பெரிய மாவிந்த நகரத்துக்கு ஒப்பாக எதைத் துணிந்து சொல்லுவேன்! மேகத்தைக் கண்ட மயில் என்பேனோ? இழந்த கண்களை மீண்டும் பெற்ற ஒளி பொருந்திய முகம் என்பேனோ? நெடுங்காலம் எதிர் நோக்கிய மழை பெய்ய நீரைப்பெற்று வளர்ந்த விளைவு நிறைந்த வயல் என்பேனோ? எதனைச்சொல்லுவேன்?

கருத்துரை

நளனைக் கண்ட மக்கள் மேகத்தைக்கண்ட மயில் போலவும், இழந்த கண்களைப் பெற்ற முகம் போலவும் மழையைப் பெற்ற நிலம் போலவும் மகிழ்ந்தனர்.

இலக்கணம்

பெற்ற; உயர்ந்த – பெயரெச்சங்கள்

பெற்ற என்பதில் பெறு – பகுதி; உயர்ந்த என்பதில் உயர் – பகுதி

தோகையோ; முகமோ; புலமோ என்பவற்றில் உள்ள 'ஓ' இடைச்சொல்

உரைப்பன் – தன்மை ஒருமை எதிர்காலவினைமுற்று

பயிற்சி

மாதோடு; நகருக்கு – இதில் கண்ட வேற்றுமை உருபுகள் யாவை? என்ன வேற்றுமை?

## (ஆ) அரிச்சந்திர புராணம்

இது அரிச்சந்திரன் என்னும் புராண கால அரசனின் வரலாறு கூறும் இலக்கியம். இந்நூல் வாய்மையே உலகில் உயர்ந்தது என்று நிலைநாட்டு கிறது. புராணம்—பண்டைய வரலாறு. இந்நூல்.

பத்துக் காண்டங்களை உடையது. அவற்றுள் இங்குப பாடமாக வைக்கப்பட்டுள்ள பகுதி எட்டாவது காண்ட மாகிய மயான காண்டத்தில் உள்ளது. இந்நூலை இயற்றியவர் வீரை ஆசு கவிராயர்.

### ஆசிரியர் வரலாறு

இயற் பெயர் : வீரை கவிராயர்

ஊர் : நல்லூர் (இராமநாதபுரம் மாவட்டம்)

சிறப்புப் பெயர் ; ஆசு கவி. விரைந்து கவி பாடும் திறமையுள்ளவர். ஆகையினால் இப்பட்டம் பெற்றார்

காலம் : கி. பி. 15 ஆம் நூற்றாண்டு.

### கதைச் சுருக்கம்

அரிச்சந்திரன் என்பவன் அயோத்தியைத் தலை நகராகக் கொண்டு கோசல நாட்டை ஆண்டவன்; சூரிய குலத்தவன்; அவன் மனைவி சந்திரமதி; மகன் லோகிதாசன். அரிச்சந்திரன் வாய்மை தவறாதவன்.

இந்திரன் அவையில் 'அரிச்சந்திரன் உண்மையே பேசுபவன்' என்று வசிட்ட முனிவர் கூறினார். அதைக் கேட்ட விசுவாமித்திர முனிவர், அரிச்சந்திரன் பொய்யன் தான்' என்று கூறினார். அதை மெய்ப்பிக்க அரிச்சந்திர னுக்கு எண்ணற்ற இன்னல்களை உண்டாக்கினார். அரிச்சந்திரன் நாடிழந்தான்; மனைவியை அடகு வைத்தான்; பிள்ளையை இழந்தான்; இறுதியில் மனைவி யைத் தன் கையாலேயே கொல்ல வேண்டிய நிலையும் வந்தது. எத்துன்பம் வந்த போதும் அவன் வாய்மை தவறாது வென்றான்.

மயான காண்டம் : சந்திரமதி காசி ராசன் மகனைக் கொன்றதாகப் பொய்க் குற்றம் சாட்டப் படுகிறாள்; அரிச்சந்திரனாலேயே நகர் வழிச் சுடுகாட்டுக்கு அழைத்

துச் செல்லப்படுகிறான். அங்கே அரசனது கட்டளைப் படி அரிச்சந்திரன் அவளைக் கொல்ல வாள் வீசினான். அது மலர் மாலையாகச் சந்திரமதி கழுத்தில் விழுந்தது. இக் கதைப் பகுதி அமைந்த காண்டமே மயான காண்டம். மயானத்திலேயே முக்கியமான கதைப் பகுதி நிகழ்ந்துள்ளமையால் இக் காண்டம் மயான காண்டமெனப்பட்டது.

### கண்டோர் கூறுதல்

சந்திரமதியின் கைகளில் கட்டிய கயிற்றைப் பிடித்துக்கொண்டு அரிச்சந்திரன் காசி நகரத்தின் தெரு வழியே போகிறான். வீதி இரு மருங்கும் மக்கள் இதைப் பற்றிப் பேசிக்கொள்கிறார்கள்.

## பாடல் 1

### சொற் பொருள்

வேலைப் பழித்த – வேலாயுதத்தைப் பழிக்கும்படியான

விழியாளை - அழகிய விழியை உடைய சந்திரமதியை

சினத்து அரசன் – கோபங் கொண்ட காசி மன்னன்

வெட்டு என்று - வெட்டுக என்று

உரைத்த பொழுதே – உத்தரவிட்ட போதே

சால – மிகுதியாக

பிணங்கள் சுடு - பிணங்களைச் சுடும்படியான

கோலில் கடிந்து – கொம்பினால் அதட்டி

கனிதள்ளிக் கொணர்ந்த – மிக விரைவாக அவனைத் தள்ளிக்கொண்டு வந்த

புலையன் – இழிமகனாகிய இவனுடைய

சீலத்தையும் – ஒழுக்கத்தையும்

கனக மார்பத்தையும் – பொன் நிறம் வாய்ந்த மார்பையும்

குலவு திண்தோளையும் – அழகு பெற்று விளங்குகின்ற வலியதோள்களையும்

கண்டிடில் – பார்த்தால்

மால் ஒப்பன் – இவன் திருமாலுக்கு ஒப்பாவான்

அன்றி – அல்லது

மயிலோன் ஒப்பன் – மயிலை வாகனமாகக் கொண்ட முருகப் பெருமானுக்கு ஒப்பாவான்

அல்லதுஒரு மதன்ஒப்பன் - இல்லைஎனில் மன்மதனுக்கு ஒப்பாவான்

என்று மருள்வார் – என்றெல்லாம்கூறிக் காசி நகர மக்கள் மயங்கினார்கள்

### பொழிப்புரை

வேலாயுதத்தைப் பழிக்கும்படியான அழகிய விழி யையுடைய சந்திரமதியைக் கோபங்கொண்ட காசி மன்னன் வெட்டுக என்று உத்தரவிட்டபோதே மிகுதி யாகப் பிணங்களைச் சுடும்படியான கொம்பினால் அதட்டி மிக விரைவாக அவளைத் தள்ளிக்கொண்டு வந்த இழி மகனாகிய இவனுடைய ஒழுக்கத்தையும் பொன் நிறம் வாய்ந்த மார்பையும், அழகுபெற்று விளங்குகின்ற வலிமையான தோள்களையும் பார்த்தால் இவன் திருமாலுக்கு ஒப்பாவான்; அல்லது மயிலைவாகனமாகக் கொண்ட முருகப்பெருமானுக்கு ஒப்பாவான்; இல்லையெனில் மன்மதனுக்கு ஒப்பாவான் என்றெல் லாம் கூறிக் காசி நகர மக்கள் மயங்கினார்கள்.

### கருத்துரை

அரிச்சந்திரன் ஒழுக்கத்தாலும், வலிமையாலும், அழகாலும் மிக்கவன் என்றும் திருமாலுக்கும், முருகனுக் கும், மன்மதனுக்கும் ஒப்பானவன் என்றும் காசி நகர மக்கள் பேசிக் கொண்டார்கள்.

சால; நனி—ஒரு குணம் தழுவிய பல உரிச்சொல்.

வெட்டு—ஏவல் வினைமுற்று

மருள்வார்—படர்க்கைப் பன்மை எதிர்கால வினை முற்று.

### பயிற்சி

1. இப்பாடலில் உள்ள பெயரெச்சங்களை எடுத்து எழுது.

2. சீலத்தையும் என்று தொடங்கும் வரியிலுள்ள இடைச்சொற்களை எடுத்து எழுது.

# பாடல் 2

## சொற் பொருள்

எங்கோமகன் பதற— எம் அரசனுகிய காசிராசன் அழ
உயிருண்ட — பிள்ளையின் உயிரை உண்ட
கொலேகாரி— கொலே செய்தவள்
இவளோ — இவள் தானே
எனத்தொடருவார்-என்று கூறிச் சிலர் உடன் வருவார்கள்
வெம்கோபம் - கொடிய கோபத்தை உடைய
வன்கரியின் — வலிய யானையின்
முன் போடும் — முன்னர் இவளேப் போடுங்கள்
என்று சிலர் வெகுள்வார் — என்று சிலர் கோபிப்பார்கள்
நெருங்கி அடர்வார் - சிலர் நெருங்கி அவளே வருத்துவார்கள்
பறைக்கு - புலேயனுக்கு (அரிச்சந்திரனுக்கு)
இவளே வதை செய்தல் - இச்சந்திரமதியைக் கொல்லுதல்
பங்கோ — உரிமையோ
நம்படை — நமது படைகள்
படாதோ - கூடாதோ
எனப்பற்றுவார் — இவ்வாறு சிலர் விரைந்து உரைப்பர்
நீர் சொல்வது — நீங்கள் சொல்லுவது
செங்கோல் முறைக்கு — நீதிக்கு
வழுஎன்று — குற்றம் என்று
சிலர் செயலால் - செய்கையாலே சிலர்
விலக்கி வருவார் — அவர்களே விலக்குவார்கள்.

### பொழிப்புரை

'எம் அரசனுகிய காசிராசன் அழ, அவன் பிள்ளையின் உயிரை உண்ட கொலேகாரி இவள் தானே' என்று கூறிச் சிலர் உடன் வருவார்கள். 'கொடிய கோபத்தை உடைய வலிய யானையின் முன்னர் இவளேப் போடுங்கள்' என்று சிலர் கோபிப்பார்கள். சிலர் நெருங்கி அவளே வருத்துவார்கள். 'புலேயனுகிய அரிச்சந்திரனுக்குத் தான் இச்சந்திரமதியைக் கொல்ல உரிமையோ? நமது படைகள் கூடாதோ ?' என்று சிலர் இவ்வாறு விரைந்து உரைப்பார். 'நீங்கள் சொல்லுவது நீதிக்குக் குற்றம்'

என்று செய்கையாலே சிலர் அவர்களை விலக்கி வருவார்கள்.

கருத்துரை

காசி நகர மக்களில் 'இவளா காசி ராசன் மகனைக் கொலை செய்தாள்' எனச் சிலரும், இவளை நம் படை கொல்லலாகாதோ' எனச் சிலரும் 'அது நீதிக்குக் குற்றம்' எனச் சிலரும் பேசிக்கொண்டனர்.

இலக்கணம்

எம் + கோமகன் = எங்கோமகன்
வெம்மை + கோபம் = வெங்கோபம்
செம்மை + கோல் = செங்கோல்
வருவார்—வா-பகுதி

பயிற்சி

இப்பாடலில் வந்துள்ள வினைமுற்றுக்களை எழுதுக.

## பாடல் 3

சொற்பொருள்

அழியாத காசிபதி-அழிவில்லாத காசி ராசனின்
மகன் ஆவி-மகனின் உயிரை
கொண்ட இவள் - பறித்த இந்தச் சந்திரமதி
அநியாயக்காரி - அநியாயமே செய்கிறவள்
அசடி—தீயவள்
பழி பூணி-பழியைச் சுமந்தவள்
இங்கு அகலின்—இவ்விடம்விட்டுத் தப்பிச் சென்றால்
எளிதாய் விடாது—எளிமையாய் விட்டுவிடாமல்
நமர்—நம் சுற்றத்தார்
பலர் ஆவியும்-பலரின் ஆவியையும்
பருகுவாள்—(இவள்) குடிப்பாள்
விழியால் எறிந்தும்—கண்ணால் வெருட்டியும்
உயிர் கவர்வாள்—நம் உயிரை வாங்குவாள்
முகத்தில் எதிர்விழியாது நில்லும்-இவள் முகத்தின் முன்னே தோன்றாமல் (மறைந்து) நில்லுங்கள்
எனவே மொழிவார்—என்றே சிலர் கூறினர்
வதைத்திடுகை-(இவளைக்) கொலைசெய்வதே
பொருளாக-முடிவாக (ஆனபிறகும்)
அற்ப மனம் - இவளின் தாழ்வான உள்ளம்
முசியாள்—வருந்தாள்
எனப் பகருவார்—எனச் சிலர் சொல்வார்கள்.

### பொழிப்புரை

அழிவில்லாத காசிராசனின் மகனின் உயிரைப் பறித்த இந்தச் சந்திரமதி அநியாயமே செய்கிறவள்; தீயவள்; பழியைச் சுமந்தவள்; இவ்விடம் விட்டுத் தப்பிச் சென்றால் எளிமையாய் விட்டுவிடாமல் சுற்றத்தார் பலரின் ஆவியையும் இவள் குடிப்பாள். கண்ணால் வெருட்டியும் நம் உயிரை வாங்குவாள். இவள் முகத்தின் முன்னே தோன்றாமல் மறைந்து நில்லுங்கள் என்றே சிலர் கூறினர். இவளைக் கொலை செய்வதே முடிவாக ஆன பிறகும் இவளின் தாழ்வான உள்ளம் வருந்தாள் எனச் சிலர் சொன்னார்கள்.

### கருத்துரை

காசி நகர மக்கள் மேலும் பலவாறு சந்திரமதியை வைதனர்; இவளைக் கொல்லாமல் விட்டால் தீங்கு நேரிடும் என்றும் கூறினர்.

### இலக்கணம்

அழியாத—எதிர்மறைப் பெயரெச்சம்.

இவள்—சுட்டுப் பெயர்; இ— அகச்சுட்டு

இங்கு + அகலின் = இங்ககலின்

விழியாது— எதிர்மறை வினையெச்சம்

### பயிற்சி

இப்பாடலில் உள்ள பெண்பால் வினைமுற்றுக்களை எழுதுக.

# பாடல் 4

## சொற் பொருள்

தப்பாது – தவருமல்

மன்மகனை – நம் அரசன் மகனின்

உயிர்கொண்டு – உயிரைக் கவர்ந்து கொண்டு

உதிரம் – அம்மகனின் ரத்தத்தை

உண்ட – குடித்த

தறுகண் அரக்கி கொடுமை வாய்ந்த இராட்சசி

நமர்தம் – நம்மவருடைய

கைப்பாசம் உற்று– கையிலுள்ள கயிற்ருல் கட்டுண்டு

வர வலளோ – மீண்டும் வர வல்லவளோ?

விசும்பினிடை– ஆகாயத்தில்

கரவாது இருத்தல் இலள் – மறையாமல் இருத்தல் இலள் (மறைந்து விடுவாள்)

அப்பாலனை – (காசிராசனுடைய) அச்சிறுவனை

கறுவி – கோபித்து

இவள் – இச்சந்திரமதியே

கொன்றதோ– கொன்ருளோ

அலது – அல்லது

யார் கொன்றதோ? –வேறு யார் கொன்ருர்களோ? (அறியேம்)

தெய்வமே – கடவுளே!

இப்பாவிதன் – இந்தப் பாவியின்

தலையில் வைத்தாய்– தலைமேல் (இப்பழியைச்) சுமத்தினுய்

உனக்கு – (எல்லாம் அறிந்த) உனக்கு,

நடுவு இலையோ – நடுவு நிலைமை இல்லையா

எனப்புகலுவார் – என்று சிலர் சொல்லுவார்கள்.

### பொழிப்புரை

தவருமல் நம் அரசன் மகனின் உயிரைக் கவர்ந்து கொண்டு அம்மகனின் இரத்தத்தைக் குடித்த கொடுமை வாய்ந்த அரக்கியாகிய இவள் நம்மவருடைய கையிலுள்ள கயிற்ருல் கட்டுண்டு மீண்டு வர வல்லவளோ? இறந்து ஆகாயத்தில் மறைவாள்;

காசிராசனுடைய அச்சிறுவனைக் கோபித்து இச் சந்திரமதியே கொன்ருளோ? அல்லாவிடில் வேறு யார் கொன்ருர்களோ? அறியேம். கடவுளே! இந்தப் பாவியின்மேல் பழியைச் சுமத்தினுயே, எல்லாம் அறிந்த உனக்கு நடுவு நிலைமை இல்லையோ? என்று சிலர் சொல்லுவார்கள்.

### கருத்துரை

இச் சந்திரமதி கொலையிலிருந்து தப்பமுடியாது' என்றும், 'இவளே கொன்ருளா? பிறர் யாரேனும் கொன்றனரா' என்று சிலரும், 'இறைவனே! உனக்கு 'நடுவு நிலைமை இலையா' என்று சிலரும் பேசிக் கொண்டனர்.

### இலக்கணம்

தப்பாது—எதிர்மறை வினையெச்சம்

உயிர் + கொண்டு + உதிரம் + உண்ட = உயிர் கொண்டுதிரமுண்ட

தறுகண் + அரக்கி = தறுகணரக்கி

நமர்—முறைப் பெயர்

அப்பாலன்—அ—புறச்சுட்டு

இவள்—இ—அகச் சுட்டு

விசும்பினிடை—இடை—ஏழாம் வேற்றுமை உருபு

இலள்—எதிர்மறை வினை முற்று

# பாடல் 5

## சொற் பொருள்

தனி ஆய - ஆதரவு அற்ற
பாவி - பாவம் செய்த இச் சந்திரமதி
குறை - மனக்குறையை
எவர் போய் உரைத்திடுவர்–மன்னன் உணருமாறு எவர் போய்ச் சொல்லுவார்கள்
தரும ஆலயப் புரவலன் நீதிக்கு இருப்பிடமான அரசன்
அநியாயம் என்று – தான் செய்வதுதவறு என்று
சிறிது உணராது – சிறிதும் உணராமல்
ஓர் பெண் பழியை – ஒரு பெண்ணைக் கொன்ருன் என்ற பழிச்சொல்லை
அவமே – வீணுக
கொளக் கருதினுன் - கொள்ள நினைத்தான்
இனி - இனிமேல்
இரங்குபவர் யார்– இரக்கங்கொண்டு இதைத் தடுப்பவர் யார்
எனவே அலேந்து – என்று கூறி மனம் வருந்தி
வயிறு எரியா–தமது வயிறு எரிந்து
உலேந்து – மிகவாடி
சுழல்வார் - சிலர் குழப்பமடைவார்கள்
கனிவாய்–(சிலர்) கோவைப் பழம் போன்ற வாயானது
புலர்ந்து - காயும்படியாக
நிலே தளர்வார் – தம் நிலே மாறிச் சோர்வார்கள்
கலங்கி – சிலர் மனக் கலக்கம் அடைந்து
உடல் கரைவார்கள் – உடல் மெலிவார்கள்
புலம்பி அழுவார் - சிலர் புலம்பிக் கொண்டு அழுவார்கள்.

## பொழிப்புரை

ஆதரவற்ற பாவம் செய்த இச் சந்திரமதியின் மனக் குறையை மன்னன் உணருமாறு யார்போய்ச் சொல்லுவார்கள்? நீதிக்கு இருப்பிடமான அரசன் தான் செய்வது தவறு என்று சிறிதும் உணராமல் ஒரு பெண்ணைக் கொன்ருன் என்ற பழிச் சொல்லே வீணுகக் கொள்ளநினைத்தால் இனிமேல் இரக்கம் கொண்டு இதைத் தவிர்ப்பவர் யார் இருக்கிருர்கள்? என்று கூறி

மனம் வருந்தித் தம் வயிறு எரிந்து, மிக வாடிச் சிலர் குழப்பம் அடைவார்கள்; சிலர் தம் கோவைப்பழம் போன்ற வாயானது காயும்படியாக நிலைமாறிச் சோர் வார்கள்; சிலர் மனக் கலக்கம் அடைந்து உடல் மெலி வார்கள்; சிலர் புலம்பிக்கொண்டு அழுவார்கள்.

கருத்துரை

சிலர் அரசனுக்கு இவள் நிலையை யார் கூறுவது என்றும், அரசன் பழியைக் கொள்கிருன் என்றும் பேசிக்கொண்டனர். இவ்வாறு பலர் பலவாறு வருந்தினர்.

இலக்கணம்

தருமம்+ஆலயம்—தருமாலயம்

வயிறு+எரியா—வயிறெரியா

கனிவாய்—உவமைத்தொகை

பயிற்சி

கடைசி வரியிலுள்ள வினைமுற்றுக்களை எடுத்து எழுது.

## பாடல் 6

சொற்பொருள்

இறை – புலையன் உருவில் இருக்கும் அரசனாகிய அரிச்சந்திரன்

என்ன பாதகம் செய்தனம்- (இக்கொலையைச் செய்ய) என்ன பாவம் செய்தோமோ

என நகைத்து - என்று சிரித்து

கன்னி – இளமை பொருந் திய சந்திரமதியின்

கைகளைக் கட்டிய கயிறு – கைகளைச் சேர்த்துக் கட்டிய கயிற்றை

தான் பிடித்து – தான் பிடித்துக் கொண்டு

துன்னு மாமணித் தோரண வாயிலை – மிக அழகிய தோரணம் கட்டியுள்ள வாயிலை

கடந்து – தாண்டி

பொன்னின் – பொன் மயமான

மா நகர்ப் புரிசையின் – பெரிய காசி நகரத்து மதிலின்

புறத்து - வெளியே

வந்து இறுத்தான் – வந்து சேர்ந்தான்.

### பொழிப்புரை

புலையன் உருவில் இருக்கும் அரசனாகிய அரிச்சந்திரன், 'இக்கொலையைச் செய்ய என்ன பாதகம் செய்தோமோ?' என எண்ணிச் சிரித்து, இளமை பொருந்திய சந்திரமதியின் கைகளைச் சேர்த்துக் கட்டிய கயிற்றைத் தான் பிடித்துக்கொண்டு, மிக அழகிய தோரணம் கட்டியுள்ள வாயிலைத் தாண்டிப் பொன் மயமான பெரிய காசி நகரத்து மதிலின் வெளியே வந்து சேர்ந்தான்.

### கருத்துரை

'என்ன பாவம் செய்தேனோ' என்று எண்ணிய வாறு அரிச்சந்திரன் சந்திரமதியின் கைகளைக் கட்டிய கயிற்றைப் பிடித்துக்கொண்டு, காசி நகர மதிலுக்கு வெளியே வந்து சேர்த்தான்.

### இலக்கணம்

செய்தனம்—தன்மைப் பன்மை இறந்த கால வினை முற்று.

கட்டிய—பெயரெச்சம்

பிடித்து; கடந்து—வினையெச்சங்கள்

இறுத்தான்—இறந்த கால வினைமுற்று

### பயிற்சி

கைகளை; வாயிலை—இவற்றில் உள்ள வேற்றுமை உருபுகள் யாவை? என்ன வேற்றுமை?

## பாடல் 7

[வசிட்டர் இந்திரனுக்குக் கூறுதல்]

### சொற்பொருள்

உற்ற நாளையில்-(அரிச்சந்திரன் சந்திரமதியை அரசன் ஆணைப்படி கொல்ல மயானத்துக்கு அழைத்து சென்ற) அந்த நாளையில்

வசிட்டன்-வசிட்ட முனிவர்

அவ் உம்பர் கோன் தனக்கு-அத் தேவர்க்கு அரசனாகிய இந்திரனுக்கு

கொற்றவா – அரசனே!

நினக்கு யான் புகல்-உன்னிடம் யான் கூறிய

கோது இலான் இடத்தே-குற்றமில்லாத அரிச்சந்திரனிடம்

அற்றை நாள் முதல்-அந்த நாள் தொடங்கி

கௌசிகன்–விசுவாமித்திர முனிவன்

அமைக்கும்–உண்டாக்கும்

ஊறு அனைத்தும்–துன்பம் முழுவதும்

இன்றை நாள் விடும்–இன்று நீங்கிவிடும்

காண்பம் – அதை நாம் பார்ப்போம்

நீ எழுக-நீ புறப்படுவாயாக

என்று இசைத்தான் – என்று சொன்னான்.

### பொழிப்புரை

அரிச்சந்திரன் சந்திரமதியை அரசன் ஆணைப்படி கொல்ல மயானத்துக்கு அழைத்துச் சென்ற அந்த நாளில், வசிட்டமுனிவன் தேவர்க்கு அரசனாகிய இந்திரனுக்கு, 'அரசனே, உன்னிடம் யான் கூறிய குற்றம் இல்லாத அரிச்சந்திரனிடம் அந்த நாள் தொடக்கமாக விசுவாமித்திர முனிவன் உண்டாக்கும் துன்பம் முழுவதும் இன்று நீங்கிப் போகும். அதை நாம் பார்ப்போம். நீ புறப்படுவாயாக!' என்று சொன்னான்.

### கருத்துரை

"அரிச்சந்திரன் நான் கூறிய படியே வாய்மையாளன் என்பது முடிவாகத் தெரியும் நாள் இதுவே; விசுவாமித்திரனின் முயற்சிகள் முடியும் நாளும் இது; மண்ணுலகிற்குச் சென்று அந்நிகழ்ச்சியைக் காண்போம் வா" என்று இந்திரனை வசிட்டமுனிவர் அழைத்தார்.

இலக்கணம்

உற்ற—பெயரெச்சம்

கொற்றவா—விளி; கொற்றவன்—முதல் வேற்றுமை

நினக்கு+யான்=நினக்கியான்

நினக்கு என்பதில் கு-நான்காம் வேற்றுமை உருபு

காண்பம்-தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று.

எழுக—வியங்கோள் வினைமுற்று

கோது+இலான்=கோதிலான்

ஊறு+அனைத்தும்=ஊறனைத்தும்

## பாடல் 8

[தேவர்கள் ஆகாயத்தில் வந்திருத்தல்]

சொற் பொருள்

தாழும் வார் சடை – தொங்கும்படியான நீண்ட சடையினை உடைய

மாமுனி – சிறந்த முனிவனாகிய வசிட்டன்

அவ்வுரை சாற்ற – இந்திரனிடம் அவ்வாறு சொல்ல

சூழும் மாதரும்- எப்போதும் சூழ்ந்திருக்கின்ற தெய்வப் பெண்களும்

தும்புரு – தெய்வப் பாடகனான வித்யாதரனும்

நாரதர் தாமும் – நாரதரும்

வாழும் – அவர்களுடன் வாழ்கின்ற

வச்சிர பாணியும்– வச்சிராயுதம் தாங்கிய கையனாகிய இந்திரனும்

வசிட்டனும்– வசிட்ட முனிவரும்

யாரும் – மற்ற அனைவரும்

ஏழு பாலரும் – (அட்டதிக்குப் பாலருள் இந்திரன் ஒழிந்த அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், என்ற) எழுதிசைக் காப்பாளரும்

காணவந்து – நிகழ்வதைப் பார்ப்பதற்காக வந்து

அந்தரத்து இருந்தான்– வானத்து இருந்தார்கள்.

### பொழிப்புரை

தொங்குப்படியான நீண்ட சடையினையுடைய சிறந்த முனிவனாகிய வசிட்டன் இந்திரனிடம் அவ்வாறு சொல்ல, எப்பொழுதும் சூழ்ந்திருக்கின்ற தெய்வப் பெண்களும், தெய்வப் பாடகனான வித்யாதரனும், நாரதரும், அவர்களுடன் வாழ்கின்ற வச்சிராயுதம் தாங்கிய கையனாகிய இந்திரனும், மற்ற அனைவரும், அக்கினி, யமன், நிருதி, வாயு, வருணன், குபேரன், ஈசானன் என்னும் எழுதிசைக் காப்பாளரும் நிகழ்வதைப் பார்ப்பதற்காக வந்து வானத்தில் இருந்தார்கள்.

### கருத்துரை

வசிட்டன் அழைத்த உடன் தலைவனாகிய இந்திரன் உட்படத் தேவருலகத்தவர் அனைவரும் நிகழ்வதைக் காண வானத்தில் வந்து இருந்தார்கள்.

### இலக்கணம்

அ + உரை = அவ்வுரை; அ—புறச்சுட்டு

வந்து + அந்தரத்து + இருந்தார்—வந்தந்தரத்திருந்தார். இருந்தார்—பலர்பால் இறந்த கால வினைமுற்று

காண, வந்து—வினையெச்சங்கள்

### பயிற்சி

இந்தப் பாடலில் உள்ள இடைச்சொற்களை எழுது.

## பாடல் 9

## [விசுவாமித்திரர் அரிச்சந்திரனைப் பொய் புகலத் தூண்டுதல்]

### சொற்பொருள்

அந்த வேளையில் – (காசி நகரத்தில் அரிச்சந்திரனும் சந்திரமதியும் இருந்த) அந்தச் சமயத்திலே

கௌசிகன்–விசுவாமித்திர முனிவன்

விரைந்து வந்து – (அரிச்சந்திரனிடம்) வேகமாக வந்து

அரசே – மன்னனே!

இந்தநோதகவு – இந்தத் துன்பத்தை

எய்தல் என் – அடைவானேன்

நீ எனக்கு–நீ எனக்கு

மு(ன்)னம் தந்த நாடு– முன்னே கொடுத்த நாட்டை

யான் தந்திலேன் – நான் உனக்குக் கொடுக்கவில்லை

என்னும் மொழி சாற்றி – என்னும் (பொய்யான) சொல்லைக் கூறி

உம்தம் – உங்களுடைய

நாடும் - நாட்டையும்

இவ் உயிர்களும்-(இறந்து போன உன்மகன், காசி மன்னன் மகன் ஆகிய) இந்த உயிர்களையும்

பெறுக–மீண்டும் பெறுவாயாக

என உரைத்தான் - என்று வஞ்சகமாகக் கூறினன்.

### பொழிப்புரை

காசி நகரத்தில் அரிச்சந்திரனும் சந்திரமதியும் இருந்த அந்தச் சமயத்திலே விசுவாமித்திர முனிவன் அரிச்சந்திரனிடம் வேகமாக வந்து, "மன்னனே! இந்தத் துன்பத்தை அடைவானேன்? நீ எனக்குக் முன்னே கொடுத்த நாட்டை நான் உனக்குக் கொடுக்க வில்லை என்னும் பொய்யான சொல்லைக் கூறி உங்களுடைய நாட்டையும் இறந்துபோன உன் மகன், காசி மன்னன் மகன் ஆகிய உயிர்களையும் மீண்டும் பெறுவாயாக!" என்று வஞ்சகமாகக் கூறினன்.

## கருத்துரை

'நாட்டை நான் தரவில்லை என்று பொய் கூறி நாட்டையும் இறந்தவர்களையும் மீண்டும் பெற்று இன்புறுக' என்று விசுவாமித்திரன் அரிச்சந்திரனிடம் கூறினன்;

## இலக்கணம்

நோதகவு+எய்தல்+என் = நோதகவெய்தலென்

எனக்கு என்பதில் அமைந்துள்ள கு நான்காம் வேற்றுமை உருபு,

தந்த—இறந்த காலப் பெயரெச்சம்; தா—பகுதி

சாற்றி—வினையெச்சம்

இ+உயிர் = இவ்வுயிர்; புறச்சுட்டு

பெறுக—வியங்கோள் வினைமுற்று

தந்திலன்—தன்மை ஒருமை வினைமுற்று

## பாடல் 10

[அரிச்சந்திரனும் சந்திரமதியும் மறுத்துக் கூறல்]

### சொற் பொருள்

சேர நின்று - அரிச்சந்திரனை நெருங்கி நின்று

அவன் - விசுவாமித்திர முனிவன்

செப்பியது - இரகசியமாகச் சொன்ன அந்தச் சொற்களை

ஆங்கு அவர் அன்றி - அங்கே அந்த இருவர் அல்லாமல்

ஆரும் - (மற்றவர்) எவரும்

கேட்டிலர் - கேட்கவில்லை

வசிட்டனும் - வசிட்ட முனிவரும்

அமரரும் அறிந்தனர் - தேவர்களும் (மட்டிலுமே) அறிந்தார்

வீரவேந்தனும் - வீரனாகிய அரிச்சந்திர மன்னனும்

மங்கையும் - (அவன் மனைவியாகிய) சந்திரமதியும்

அவன் அடிவீழ்ந்து - அந்த முனிவனின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி

இங்குயாரை - இங்குயாரை

இந்த ஏழ்மைக்கு - இந்தப் பொய் கூறுதலாகிய அறியாமைக்கு

ஆட் செய்தி - அடிமையாக்குகிறாய்

என்றார் - என்றுகூறினர்கள்.

பொழிப்புரை

அரிச்சந்திரனை நெருங்கி வந்து அவ்விசுவாமித்திர முனிவன் இரகசியமாகச் சொன்ன சொற்களை அங்கே அந்தஇருவர் அல்லாமல் மற்றவர்எவரும் கேட்கவில்லை. வசிட்டனும் தேவர்களும் மட்டிலுமே அறிந்தார்கள். வீரனாகிய அரிச்சந்திர மன்னனும் அவன் மனைவியாகிய சந்திரமதியும் அந்த முனிவனின் திருவடிகளில் பணிந்து 'இங்கு' யாரை இந்தப் பொய் கூறுதலாகிய அறியாமைக்கு அடிமையாக்குகிறாய் என்று கூறினார்கள்.

கருத்துரை

விசுவாமித்திரன் கூறியவை தேவருக்கும் அரிச்சந்திரனுக்குமே கேட்டது; யாரை இவ் வறியாமைக்கு அடிமையாக்குகிறாய், என்று அரிச்சந்திரன் வருந்திக் கூறினான்.

இலக்கணம்

கேட்டிலர் – பலர்பால் எதிர்மறை வினைமுற்று
அறிந்தார் – பலர்பால் இறந்தகால வினைமுற்று
வீழ்ந்து – வினையெச்சம்

## பாடல் 11

சொற்பொருள்

சேய்மை – தொலைவிலும்
அண்மையில் – அருகிலேயும்
உயிர்க்கு ஒருதுணையென- உயிருக்கு ஒப்பற்ற துணை என்று சொல்லும்படி
சிறந்த – சிறப்பாக உள்ள
வாய்மையால் – உண்மையால்
அகம் தூய்மையாம் – மனம் தூய்மை ஆகும்
மற்று இலை – வேறொன்றும் அவ்வாறு தூய்மை செய்வது இல்லை
புறத்தை - அகம் அல்லாத வெளிப்புற உடலை
தூய்மை செய்வது – சுத்தம் செய்வது
நீர் அலால் – தண்ணீரை அல்லாமல்
சொல்லின் – எடுத்துச் சொன்னால்
வேறுளதோ? – வேறு ஒரு பொருள் உண்டோ? (இல்லை)
நோய்மை செய்யினும் – துன்பம் செய்தாலும்
எமக்கு –(கணவன் மனைவி ஆகிய) எங்களுக்கு
வாய்மையே நோன்பு– உண்மை பேசுதலே விரதம் ஆகும்
அறிதி-இதைநீஅறிவாயாக

### பொழிப்புரை

'தொலைவிலும் அருகிலேயும் உயிருக்கு ஒப்பற்ற துணை என்று சொல்லும்படி சிறப்பாக உள்ள உண்மையினுல் மனம் தூய்மை ஆகும்; வேறென்றும் அவ்வாறு தூய்மை செய்வது இல்லை. அகம் அல்லாத வெளிப்பக்க உடலைத் தூய்மை செய்வது தண்ணீரை அல்லாமல் வேறு ஒரு பொருள் உண்டோ? (இல்லை.) துன்பம்செய்தாலும் கணவன் மனைவியாகிய எங்களுக்கு உண்மை பேசுதலே விரதம் ஆகும். இதை நீ அறிவாயாக!

### கருத்துரை

உயிருக்குத் தூய்மை செய்வது வாய்மையே உடலைத் தூய்மை செய்வதைப் போல உள்ளத்தைத் தூய்மை செய்வது வாய்மை. அவ் உயர்ந்த உண்மை பேசுதலே எங்களுக்கு விரதம் என்று அரிச்சந்திரனும் சந்திரமதியும் விசுவாமித்திரனிடம் கூறினுர்கள்.

### இலக்கணம்

சேய்மை × அண்மை- எதிர்ச் சொற்கள்

சேய்மை-தொலைவில் உள்ளதான சுவர்க்க வாழ்வு;

அண்மை-அருகில் உள்ளதான இவ்வுலக வாழ்வு;

சிறந்த—பெயரெச்சம்

மற்று—இடைச்சொல்

வேறு + உளதோ = வேறுளதோ

நோன்பு + எமக்கு + அறிதி = நோன்பெமக் கறிதி

எமக்கு என்பதிலுள்ள கு நான்காம் வேற்றுமை உருபு

அறிதி—முன்னிலை ஏவல் வினைமுற்று

# பாடல் 12

## சொற் பொருள்

புலையனும் – கீழ்மகனும்
விரும்பாத –(உண்பதற்கு) விரும்பாத
இப்புன் புலால் யாக்கை – இந்த இழிவான இறைச்சியால்ஆகிய மனித உடல்
நிலை எனு மருண்டு – அழியாதது என்று மயங்கி
உயிரினும் – அழியாத உயிரை விட
நெடிதுஉற – நெடுங்காலம் அழியாது புகழுடன் இருக்க
சிறந்த –சிறந்தபண்பாகிய
தலைமை சேர்தரு – முதன்மை பெற்ற
சத்தியம் பிறழ்வது – வாய்மையிலிருந்து தவறி நடப்பதை
தரியேம் – (நாங்கள்) பொறுத்துக் கொள்ள மாட்டோம்
கலை உணர்ந்த நீ –எல்லாக் கலைகளையும் உணர்ந்த நீ
எமக்கு – எங்களுக்கு
இது கழறுவது – இவ்வாறு பொய் சொல்லுமாறு வற்புறுத்திக் கூறுவது
அழகோ – அழகாகுமோ ? (ஆகாது)

## பொழிப்புரை

கீழ் மகனும் உண்பதற்கு விரும்பாத இந்த இழிவான இறைச்சியால் ஆகிய மனித உடல் அழியாதது என்று மயங்கி, அழியாத உயிரைவிட நெடுங்காலம் புகழுடன் இருக்கச் சிறந்த பண்பாகிய முதன்மை பெற்ற வாய்மையிலிருந்து தவறி நடப்பதை நாங்கள் பொறுத்துக் கொள்ள மாட்டோம். எல்லாக் கலைகளையும் உணர்ந்த நீ இவ்வாறு பொய் சொல்லுமாறு எங்களை வற்புறுத்திக் கூறுவது அழகு ஆகாது.

## கருத்துரை

'இவ்வுடல் என்றேனும் அழியத்தான் போகிறது. இவ்வுடலைப் புலையனும் விரும்ப மாட்டான். யாவும் அறிந்த தாங்கள் இவ்விழிந்த உடலை வாழ வைப்பதற்காகப் பொய் சொல்லத் தூண்டுதல் அழகன்று' என அரிச்சந்திரனும் சந்திரமதியும் விசுவாமித்திரனுக்குக் கூறினர்கள்.

இலக்கணம்

விரும்பாத – எதிர்மறைப் பெயரெச்சம்
என – உடன் பாட்டு வினையெச்சம்
சிறந்த – பெயரெச்சம்
தரியேம்-தன்மைப்பன்மை எதிர்மறை வினைமுற்று

## பாடல் 13

### சொற்பொருள்

இம்மை – இப் பிறப்பு
அம்மை – அடுத்த பிறப்பு
வீடு என-மோட்சம் என்று
மறை – வேதங்கள்
புலம் கொள – மக்களின் அறிவு கொள்ளும்படி
இயம்பும் - சொல்லும்
மும்மையும் – மூன்றையும்
தரும்முறை உடைத்து- தருகின்ற தன்மையை உடையது (பொய்யாமை)
எனும் நிலை முரணி–என்ற நிலைக்கு மாறுபட்டு
எம்மை –(அரிச்சந்திரனும் சந்திரமதியும் ஆகிய) எங்களை
ஆழ்வயிற்று அடக்கி – ஆழமான வயிற்றில் அடக்கிக் கொண்டு
மீட்டு உமிழ் கலா – மறுபடியும் வெளிவிடாத
எரிவாய் – தீயையுடைய
வெம்மை கூர் நரகு –வெப்பம் மிகுந்த நரகத்தில்
உய்க்கினும் – கொண்டு போய்ச் சேர்த்தாலும்
மெய்ம்மையை - உண்மை பேசுதலை
விடேம் - நாங்கள் விட மாட்டோம்.

பொழிப்புரை

இப்பிறப்பு, அடுத்த பிறப்பு, மோட்சம் என்று வேதங்கள் மக்களின் அறிவு கொள்ளும்படி சொல்லும் மூன்றையும் தருகின்ற தன்மையை உடையது பொய்யாமை என்ற நிலைக்கு மாறுபட்டு அரிச்சந்திரனும் சந்திரமதியும் ஆகிய எங்களை ஆழமான வயிற்றில் அடக்கிக்கொண்டு மறுபடியும் வெளிவிடாத தீயை உடைய வெப்பம் மிகுந்த நரகத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தாலும் உண்மை பேசுதலை நாங்கள் விடமாட்டோம்.

### கருத்துரை

'எங்களை நரகத்திலே இட்டாலும், இம்மை, மறுமை, முத்தி ஆகியவற்றைத் தரவல்ல உண்மைபேசுதலை விட மாட்டோம்' என்று அரிச்சந்திரனும் சந்திரமதியும் முனிவரிடம் கூறினர்.

### இலக்கணம்

இயம்பும்; தரும்—பெயரெச்சங்கள்

முரணி—வினையெச்சம்

உமிழ்கலா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

விடேம்—தன்மைப் பன்மை எதிர்மறை வினைமுற்று

ஆல்—அசை

## பாடல் 14

### சொற் பொருள்

பதி இழந்தனம் - (உண்மையே பேசும் விரதத்தால் நாங்கள் எங்கள்) நாட்டை இழந்தோம்

பாலனை இழந்தனம்— நாங்கள் பெற்ற பிள்ளையை இழந்தோம்

படைத்த நிதி இழந்தனம்— பெற்றிருந்த செல்வத்தை இழந்தோம்

இனி நமக்கு உளதென— இனி நமக்கு உள்ளது என்று

நினைக்கும் - (நாங்கள்) நினைக்கின்ற

கதி இழக்கினும்- மோட்சத்தை இழக்க வேண்டி வந்தாலும்

கட்டுரை இழக்கிலேம் - நாங்கள் (மேலே சொன்ன) உறுதிச் சொற்களில் இருந்து தவற மாட்டோம்

என்றார்-என்று கூறினார்கள்

அருந்தவன்- அருமையான தவத்தைச்செய்தவனாகிய விசுவாமித்திரன்

மதியிழந்து-(தன் முயற்சி பலிக்காமையால்) அறிவு கலங்கி

தன் வாய் இழந்து-தன் வாய் அடங்கி (பேசாமல்)

மறைந்தான்-அவ்விடம் விட்டுப் போயினான்.

### பொழிப்புரை

'உண்மையே பேசும் விரதத்தினுல் நாங்கள் எங்கள் நாட்டை இழந்தோம்; நாங்கள் பெற்ற பிள்ளையை இழந்தோம். பெற்றிருந்த செல்வத்தையும் இழந்தோம். மேலும் நமக்கு என எஞ்சியது என்று நாங்கள் நினைக்கின்ற மோட்சத்தையே இழக்கவேண்டி வந்தாலும் நாங்கள் மேலே சொன்ன உறுதிச் சொற்களிலிருந்து தவற மாட்டோம்' என்று கூறினுர்கள். அருமையான தவத்தைச் செய்தவனுகிய விசுவாமித்திரன் தன் முயற்சி பலிக்காமையால் அறிவு கலங்கி மறுமொழி பேசாமல் அவ்விடம் விட்டு மறைந்து போனுன்.

### கருத்துரை

'நாங்கள் வாய்மையே பேசும் விரதத்தினுல் நாட்டையும், பிள்ளையையும், செல்வத்தையும் இழந்தோம். இனி மோட்சமே போயினும் உறுதி தவருேம்' என்று அரிச்சந்திரனும் சந்திரமதியும் கூறியவுடன் விசுவாமித்திர முனிவர் அவ்விடம் விட்டுச் சென்ருர்.

### இலக்கணம்

இழந்தனம் – தன்மைப் பன்மை இறந்த கால வினைமுற்று

படைத்த – இறந்தகாலப் பெயரெச்சம்

நமக்கு + உளது + என = நமக்குளதென

கதி + இழக்கினும் = கதியிழக்கினும்

இழக்கிலேம் – தன்மைப்பன்மை எதிர்மறை வினைமுற்று

மறைந்தான் – இறந்தகால வினைமுற்று

## பாடல் 15

### சொற் பொருள்

**மறைந்து போதலும்**– (அரிச்சந்திரனைப் பொய் சொல்லச் செய்ய முடியாமல் விசுவாமித்திரன்) மறைந்து போனவுடனே

**வாசவன்**–இந்திரன்

**மாமுனிவனைக் கூய்**-பெரிய முனிவனாகிய விசுவாமித்திரனை அழைத்து

**அறைந்த காரணம்**-(முன்பு நீ அரிச்சந்திரன் பொய்யன் என்று) சொல்லிய காரணத்தை

**அறிந்து போ என**– தெரிந்து கொண்டு போவீராக என்று கூறித்

**அருகு அழைத்தான்**– அருகில் வர அழைத்தான்

**நிறைந்த நாணமும்**– மிகுத்த வெட்கமும்

**குறைந்த பார்வையும்**– மகிழ்ச்சி குன்றிய பார்வையும்

**உற**-பொருந்த

**முகிலிடத்து அவருடன் கூடி**-மேக மண்டலத்தில் மறைந்திருந்த தேவர்களுடன் சேர்ந்து

**நினைவு குறைந்து**-தன் சுய நினைவு குன்றி

**இருந்தனன்** - விசுவாமித்திரன் இருந்தான்.

### பொழிப்புரை

அரிச்சந்திரனைப் பொய் பேசச் செய்யமுடியாமல் விசுவாமித்திரன் மறைந்து போனவுடனே இந்திரன் பெரிய முனிவனாகிய விசுவாமித்திரனை அழைத்து 'முன்பு நீர் அரிச்சந்திரன் பொய்யன் என்று கூறிய காரணத்தைத் தெரிந்து கொண்டு போவீராக' என்று கூறி அருகில் வர அழைத்தான். மிகுந்த வெட்கமும் மகிழ்ச்சி குன்றிய பார்வையும் பொருந்த மேக மண்டலத்தில் மறைந்திருந்த தேவர்களுடன் சேர்ந்து தன் சுய நினைவு குன்றி விசுவாமித்திரன் இருந்தான்.

### கருத்துரை

விசுவாமித்திரன் தன் முயற்சிகள் பலிக்காமையால் மனம் தளர்ந்து தேவர்களுடன் கூடி ஆகாயத்தில் இருந்தான். 'இந்திரன் விசுவாமித்திரனை அழைத்து உண்மையை அறிக' என்றான்.

இலக்கணம்

கூடி—வினையெச்சம்
அறைந்த, நிறைந்த, குறைந்த-பெயரெச்சங்கள்
போ — ஏவல்
அருகு + அழைத்தான்—அருகழைத்தான்
அழைத்தான்—இறந்த கால வினைமுற்று.

## பாடல் 16

## (அரிச்சந்திரன் சந்திரமதியுடன் மயானம் அடைதல்)

சொற் பொருள்

வாசம் தார் புனை - மணம் வீசும் மலர் மாலையை அணிந்த
வாசவனுடன் - இந்திரனுடன்
முனி வைக-முனிவன் தங்கியிருக்க
பாசத்தாள்—தன் அன்புக் குரியவளான சந்திரமதியின்
கரம் – கைகளை
பிணித்தது ஓர் பாசம்—கட்டியுள்ள கயிற்றை
ஓர்கை பற்றி - தன் ஒரு கையினல் பிடித்துக் கொண்டு
பேசத்தான் பொருன் - பேசுவதற்கும் முடியாதவன் ஆகி
பிணம் சுடும் கோலினல் தள்ளி-(மற்றொரு கையினல் பிணங்களைப் புரட்டிச்சுடும் கோலினல் சந்திரமதியைத்) தள்ளி
நேசத்து ஆர் மகன் - அன்பு மிகுந்த தன் மைந்தன்
கிடந்தது ஓர் நெடு நிலம் – (சுடுவதற்காகக்)கிடத்தப் பட்டிருந்த சுடுகாட்டை
சேர்ந்தான்—அடைந்தான்.

பொழிப்புரை

மணம் வீசும் மலர்மாலையை அணிந்த இந்திரனுடன் விசுவாமித்திர முனிவன் தங்கி இருக்கத் தன் அன்புக் குரியவளான சந்திரமதியின் கைகளைக் கட்டியுள்ள கயிற்றைத் தன் ஒரு கையினல் பிடித்துக்கொண்டு பேசுவதற்கும் முடியாதவனுகி மற்றொரு கையினல் பிணங்களைப் புரட்டிச் சுடும் கோலினல் சந்திரமதியைத்

தள்ளி அன்பு மிகுந்த தன் மைந்தன் சுடுவதற்காகக் கிடத்தப்பட்டிருந்த சுடுகாட்டை அடைந்தான்.

கருத்துரை

விசுவாமித்திரன் இந்திரனுடன் இருந்தான். மகனின் பிணம் இருக்கும் இடத்திற்குச் சந்திரமதியை அரிச்சந்திரன் இழுத்துக் கொண்டு வந்தான்.

இலக்கணம்

வாசவனுடன்-உடன்—மூன்றும் வேற்றுமை உருபு
வைக; தள்ளி—வினையெச்சங்கள்
சேர்ந்தான்—இறந்தகால வினைமுற்று

## பாடல் 17

## (அரிச்சந்திரன் கட்டளையும் சந்திரமதியின் அறவுரையும்)

சொற்பொருள்

நீ வழக்கின் - (சந்திரமதியே!) நீ வழக்கத்தால்
என்றும் - எக்காலத்திலும்
வழிபடு கடவுளை- வணங்கும் தெய்வத்தை
வணங்கி-வணக்கம்செய்து
கிழக்கு நோக்கி-கிழக்குத் திசையைப் பார்த்தவாறு
ஈண்டு இரு-இங்கே இருப்பாயாக
என-என்று அரிச்சந்திரன் கட்டளை இட
கிளி மொழி மடந்தை - கிளியைப்போலப் பேசும் சந்திரமதி
பழக்கமான-தான் தினமும் வணங்கிப் பழகிய
அக் கணவனை-அந்த அரிச்சந்திரனையே
பரவி - மனத்தால் துதித்து
என் ஆவி இழக்கற்கு அஞ்சி - நான் என்உயிரை விடுவதற்கு வருந்தி
நீ அறம் வழுவேல்- நீர் தருமத்திலிருந்து தவறுதீர்
என இயம்பும்-என்றுகூறிப் பின்னும் சொல்லுவாள்.

பொழிப்புரை

'சந்திரமதியே! நீ வழக்கத்தால் வணங்கும் தெய்வத்தை வணக்கஞ்செய்து கிழக்குத் திசையைப் பார்த்தவாறு இங்கேயே இருப்பாயாக!' என்று

அரிச்சந்திரன் கட்டளை இட, கிளியைப் போலப் பேசும் சந்திரமதி தான் தினமும் வணங்கிப் பழகிய அந்த அரிச்சந்திரனையே மனத்தால் துதித்து, 'நான் என் உயிரை விடுவதற்கு வருந்தி நீர் தருமத்திலிருந்து தவருதீர்' என்று கூறினுள்.

### கருத்துரை

வழிபடுங் கடவுளைக் கும்பிட்டுக் கிழக்கு நோக்கி இரு என அரிச்சந்திரன் கூறச் சந்திரமதி அரிச்சந்திரனையே வணங்கினுள். என் உயிர் போகிறதே என்று நீ வாய்மை பிறழாதே என்ருள்.

### இலக்கணம்

வணங்கி; நோக்கி; பரவி; அஞ்சி – வினையெச்சங்கள்

இரு - முன்னிலை ஏவல்

வழுவேல் – எதிர்மறை வினைமுற்று

இயம்பும் – எதிர்கால வினைமுற்று

## பாடல் 18

### சொற்பொருள்

மன்னவ நீ-தலைவனே! நீ

நீத்தத்தில்-வெள்ளத்தில்

பொருந்தும்-தோன்றும்

புற்புதம் வாழ்வை- நீர்க்குமிழி போன்ற நிலையற்ற வாழ்வை

மெய் என்று- உண்மையானது என்று தவருகக் கருதி

அருந்தவத்தினையும்- உன்னுடைய அருமையான தவத்தினையும்

அறத்தையும்- தருமத்தையும்

மெய்யையும்- சத்தியத்தையும்

விடுத்து–கைவிட்டு

வருந்தல் - வருந்தாதே

வழி வழி சிறக்க–மேலும் மேலும் சிறப்படைவாய் ஆகுக!

என வாழ்த்தி–என்று அரிச்சந்திரனை வாழ்த்தி

இருந்த பின்–சந்திரமதி அமர்ந்த பிறகு

சுடர்வாள் படை–ஒளி விடும் வாளாயுதத்தை

வலக் கையில் –வலக் கையின் கண்

எடுத்தான்– (அரிச்சந்திரன்) எடுத்தான்.

### பொழிப்புரை

'தலைவனே! நீ வெள்ளத்தில் தோன்றும் நீர்க் குமிழி போன்ற நிலையற்ற வாழ்வை உண்மையானது என்று தவறாகக் கருதி உன்னுடைய அருமையான தவத்தினையும் தருமத்தையும் கைவிட்டு வருந்தாதே! நீ மேலும் மேலும் சிறப்படைவாயாக!' என்று அரிச்சந்திரனை வாழ்த்திச் சந்திரமதி அமர்ந்த பிறகு, ஒளிவிடும் வாளாயுதத்தை வலக் கையில் அரிச்சந்திரன் எடுத்தான்.

### கருத்துரை

அரிச்சந்திரனுக்குச் 'சத்தியத்திலிருந்து பிறழாதே' என்றும், 'நீ சிறக்கவேண்டும்' என்றும் சந்திரமதி வாழ்த்துக் கூறினாள். அவளைக்கொல்ல அரிச்சந்திரன் வலக்கையில் வாள் எடுத்தான்.

### இலக்கணம்

வருந்தல்—எதிர்மறை வினைமுற்று

மன்னவ—விளி; மன்னன்—முதல் வேற்றுமை

சிறக்க—வியங்கோள் வினைமுற்று

எடுத்தான்—இறந்த கால வினைமுற்று

## பாடல் 19

### சொற் பொருள்

உலகு உயிர்க்கு எலாம்-உலகில் தோன்றும் உயிர்கட்கெல்லாம்

பசுபதி-சிவபெருமான்

ஒரு முதல் ஆயின்-ஒப்பற்ற கடவுள் ஆனல்

அலகு இல்-அளவு இல்லாத

சீருடை-சிறப்புடைய

அவன் மொழி மறை எனின்-அக் கடவுள் சொல்லியதே வேதம் என்றுல்

அதன் கண்-அந்த வேதத்தில்

இலகு அறம்-விளங்குகின்ற அறங்கள்

பலவற்றினும்-பலவற்றிலும்

வாய்மை-சத்தியமே

ஈடு இலதேல்-ஒப்பு இல்லாதது என்றுல்

விலக்குருமல்-தவருமல்

அவ் வாய்மையை-அந்தச் சத்தியத்தையே

விரதமா-நோன்பாக

யான் கொளின்-யான் கொண்டிருந்தால்

## பாடல் 20

நெறியில்-நல்ல வழியில்

அன்ன-அப்படிப்பட்ட

என்தனை விடா நிறை-என்னை விட்டு நீங்காத கற்பு என்னும் பண்பு

இவட்கு உளதேல்-இச் சந்திரமதிக்கு இருக்குமானல்

இவள் இறுதி இன்மையைப் பெறுக-இவள் இறவாமையைப் பெறுக

அன்று எனின்-அவ்வாறு அன்று என்றுல்

இவள் இறுதி பெறுக-இவள் இறக்கட்டும்

என்று-என்று கூறி

வாள் வீசினன்-வாளை அவள் கழுத்தில் வீசினன்

அவ்வடிவாள்-அந்தக் கூர்மையான வாள்

பேதை தன் கழுத்தில்-குற்றம் அற்ற அச் சந்திரமதியின் கழுத்தில்

மறுமணத்திடும்-இரண்டாவது திருமணத்தில் இடும்

மாலையாய்-மாலைபோல்

வீழ்ந்தது-விழுந்தது.

### பொழிப்புரை

'உலகில் தோன்றும் உயிர்களுக்கெல்லாம் சிவபெருமான் ஒப்பற்ற கடவுள் ஆனால், அளவில்லாத சிறப்பை உடைய அக்கடவுள் சொல்லியதே வேதம் என்றால், அந்த வேதத்தில் விளங்குகின்ற அறங்கள் பலவற்றிலும் சத்தியமே ஒப்பு இல்லாதது என்றால், தவறாமல் அந்தச் சத்தியத்தையே யான் நோன்பாகக் கொண்டிருந்தால்,

அப்படிப்பட்ட நல்லவழியில் என்னைவிட்டு நீங்காத கற்பென்னும் பண்பு இச்சந்திரமதிக்கு இருக்குமானால் இவள் சாவாமையைப் பெறுக! அவ்வாறு அல்ல என்றால் இவள் இறந்து போகட்டும்!' என்று கூறி வாளை அவள் கழுத்தில் வீசினான். அந்தக் கூர்மையான வாள் குற்றமற்ற சந்திரமதியின் கழுத்தில் இரண்டாவது திருமணத்தில் இடுகின்ற மாலைபோல் விழுந்தது.

### கருத்துரை

அரிச்சந்திரன் சில உண்மைகளைச் சொல்லி இவை உண்மையானால் சந்திரமதி பிழைக்கட்டும், இல்லை என்றால் இறக்கட்டும் என்றவாறு வாளை வீசினான். அவ்வாள் மாலையாகச் சந்திரமதியின் கழுத்தில் விழுந்தது.

### இலக்கணம்

வாய்மை + ஈடு + இலது + ஏல் = வாய்மையீடிலதேல்

விடா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

பெறுக – வியங்கோள் வினைமுற்று

வீசினன், வீழ்ந்தது – இறந்தகால வினைமுற்றுக்கள்

# வினு – விடை

## அ. நள வெண்பா

1. நளனை நாடி அறியத் தமயந்தி புரோகிதருக்குக் கூறிய உபாயத்தை விளக்கு.

தமயந்தி வீமராசனின் புரோகிதனிடம், 'என்னைப் பெரிய காட்டில் விட்டுப் பிரிந்த போர் மன்னனுகிய நளனை நீ தேடிக் கொண்டு வருக!' என்று கூறினுள். மேலும், 'கரிய இருட்டில் பாழ் அடைந்த மண்டபத்தில் தன் மனைவியை அயர்ந்த தூக்கத்தில் விட்டுப் பிரிதல் பெரிய மன்னனுக்கு நல்ல செயல் ஆகுமா? என்று சொன்னுல் அதைக் கேட்டுப் பதில் வார்த்தைகள் சொல்கின்றவரைத் தெரிந்துகொண்டு வருக' என்றும் நளனை நாடி அறிய ஓர் உபாயம் கூறினுள்.

2. புரோகிதன் வினுவிற்கு நளன் கூறிய விடை யாது?

புரோகிதன் அயோத்தி அவையில், 'காட்டில் மனைவியை நடு இரவில் தனியாக விட்டுச் சென்றது அரசனுக்குத் தகுதியான செயலா' எனக் கேட்டான். அச் சொற்ருெடரை நளன் தன் காதினுள் ஏற்றுக் கொண்டவனுய்ப் புரோகிதன் முன் தோன்றினுன். புரோகிதனுகிய நீ வீமனது அழகிய மகளான தமயந்தியை நளன் கொடிய காட்டில் கைவிட்டுச் சென்ருனே எனச் சந்தேகப்படாதே. தமயந்தியை அவன் தூங்கும்போது பிரிந்து சென்ற செயல், முன் செய்த வினையின் பயனே என விடை கூறினுன்.

3. நளமன்னனைக் கண்டறியத் தமயந்தி புரோகிதருக்குக் கூறிய இரண்டாம் உபாயம் யாது?

தமயந்தி 'புரோகிதரே! நீர் அயோத்திக்கு மறுமுறை சென்று வீமராசனின் அழகிய மகளான

தமயந்தி மறுமுறையும் ஒரு சுயம்வரத்தை மேற்கொண்டாள் என்று கூறினல், பெருங் கொடை வள்ளலான அரசன் இருதுபன்னனுக்குத் தேரோட்டியாக நள மன்னன் வருவான்' என நள மன்னனைக் கண்டறிய இரண்டாம் உபாயம் கூறினள்.

4. நளனைக் கண்டறியத் தமயந்தி தன் தோழிக்கு என்ன கூறினள் ?

தமயந்தி, 'இந்திரசேனனையும் அவன் தங்கை இந்திரசேனையையும் நம் முந்தைய அரசன் என்று கருதப்படும் நளனது அருகில் போகவிட்டு, விளையாடச் செய்து, நளனது செயல்களைக் கூர்ந்து கவனி' என நளனைக் கண்டறியத் தோழிக்கு உபாயம் கூறினள்.

5. தன் மக்களைக்கண்ட நளன் என்னசெய்தான்?

தன் புதல்வர்களைத் தன் எதிரே கண்டு நளன் மனம் நடுங்கி, வெப்பமான பெருமூச்சுவிட்டு முன் வந்து அம்மக்களைத் தூக்கி வீரத்தோள்களில் அணைத்துப் 'பிள்ளைகளே! நீவிர் இருவரும் என் புதல்வர்களைப் போல இருக்கிறீர்கள்; யார் பெற்ற புதல்வர்கள்?' என்று கேட்டான்.

6. நளன் தன்மகனை வினவிய வினவையும் மக்கள் கூறிய விடையையும் எழுது.

நளன் தன் மகனாகிய இந்திரசேனன் என்னும் இளவரசனைப் பார்த்துச், 'சிவந்த கைகளைக் கொண்ட வளம் மிக்க நாட்டுக்கு உரியவனே! உங்களுக்கு உரிமையான நாட்டை மற்றொருவன் ஆண்டுகொண்டிருக்க, இந்த நகரிலே வாழ்ந்து இருத்தல் குற்றம் அன்றோ?' என்று விளக்கமாகக் கேட்டான்.

இந்திரசேனன் அதற்கு நளனைநோக்கிச், 'சமையல் தொழில் புரிகிறவனே! எப்பொழுதும் இழிவே கொண்ட கீழ்மையான தொழிலைச் செய்கின்றவனே! எம்மை அவமதித்த இந்த சொல்லைச்சொல்ல உன்னைத் தவிர மற்ற அரசர்கள் கூசுவார்கள். எம் அரசனாகிய நளனின் சத்தியமே எங்களுக்கு ஆதாரம். இதை நீ அறிவாயாக' என்று விடை கூறினான்.

ஆதிசேடன் என்னும் பாம்பின் தலையில் தங்கியிருக்கும் உலக மன்னர்கள், ஆண் யானைகளின் மேல் வந்து மணிபதித்த தம்முடிகளினால் வணங்குதலால் உண்டாகி அழுந்திய தழும்புகளை எம் தந்தையாகிய நளனின் திருவடிகளின் எல்லாப் பக்கங்களிலும் பார்க்கலாம்' என்றும் விடை கூறினான்.

7. நளன் தன் மைந்தனுக்குக் கூறிய நயவுரை யாது?

நளன் மனம் தளர்ந்து உருக்கத்தோடு தன்னுடைய கண்களில் இருந்து நீர் ஒழுகத் தலை வணங்கி, 'அரசர்களின் பெருமை சமையல்காரர்களுக்குத் தெரியுமா? உன்னைப்பற்றித் தெரிந்து கொள்ளாமல் பேசிய என்னைத் தயவு செய்து கோபிக்காதே!' என்று நயவுரை கூறினான்.

8. நளனின் தேர்ப்பாகன் வடிவு நீங்கியதற்குக் கவிஞர் கூறும் உவமையை விளக்குக?

நளனின் தேர்ப்பாகன் வடிவு நீங்கியதற்குக் கவிஞர், திருமாலின் உண்மையான திருவடிகளையே துணையாக அடைக்கலம் புகுந்த அடியவர்களின், நீங்குவதற்கியலாத பாவம் நீங்குவதை உவமையாகக் கூறியுள்ளார்.

கலி பிடித்த அந்தக் காலத்தில் மனைவியைக் காட்டில் விட்டு மறைந்து வாழும் நளனுடைய தேர்ப்பாகன் உருவம், மகாபலிச் சக்கரவர்த்திக்காக உலகளந்த திருமாலின் உண்மையான திருவடிகளையே துணையாக அடைக்கலம் புகுந்த அடியவர்களின் நீங்குவதற்கு இயலாத பாவம் நீங்குவதைப்போல நீங்கிற்று.

9. கலிபுருடன் நளனுக்கு அளித்த வரத்தை விளக்குக.

சனிபகவான் நளனின் முன்னே வந்து நின்று 'எனக்கு உரிய கலிகாலத்தில் உன்னுடைய வரலாற்றை விரும்பிக் கேட்டவரிடத்தே நான் சார்ந்து துன்புறுத்த மாட்டேன்; இஃது உண்மை' என்று உறுதி கூறி வரம் அருளினன்.

10. நளன் வருகையில் நகரத்தார் கொண்ட மகிழ்ச்சியைக் கவிஞர் எவ்வாறு வருணிக்கிறார்?

'தான் முன்பு தோற்ற நாடு, நகர் முதலியவற்றை மீட்டுக்கொண்டு தமயந்தியுடன் நளன் வருவதைக் கண்ட பெரிய மாவிந்த நகரத்துக்கு ஒப்பாக எதைத் துணிந்து சொல்லுவேன்? மேகத்தைக் கண்ட மயில் என்பேனே? இழந்த கண்களை மீண்டும் பெற்ற முகம் என்பேனே? நெடுங்காலம் எதிர் நோக்கிய நீரைப் பெற்று வளர்ந்த விளைச்சல் நிறைந்த வயல் என்பேனே? எதைச் சொல்லுவேன்?' என்று கவிஞர் நளன் வருகையால் நகரத்தார் கொண்ட மகிழ்வை வருணிக்கிறார்.

11. இடம் சுட்டிப் பொருள் கூறுக.

(1) 'வாக்கினால் மன்னவனை ஒப்பான்'

(2) 'மன்னர் பெருமை மடையர் அறிவாரோ?'

(3) 'எங்கோமான் வாய்மையே கண்டாய் வலி'

(1) 'வாக்கினால் மன்னவனை ஒப்பான்'

கூற்றும் இடமும் : வாக்கினால் மன்னவனை ஒப்பான் என்பது தமயந்தி நளனைத் தேட அனுப்பிய புரோகிதனின் கூற்று ஆகும். இது தமயந்தியை நோக்கிக் கூறியது.

பொருள் விளக்கம்: தமயந்தி நளனைக் கண்டுவருவதற்குப் புரோகிதனிடம், 'கரிய இருட்டில் பாழடைந்த மண்டபத்தில் தன் மனைவியைத் தூக்கத்தில் விட்டுப் பிரிதல் பெரிய மன்னனுக்கு நல்ல செயல் ஆகுமா? என்று நீ சொன்னால் அதைக் கேட்டுப் பதில் வார்த்தைகள் சொல்கின்றவரைப் போய்த் தெரிந்து வருக' என்றாள். புரோகிதன் அயோத்தியில் அவ்வாறே கேட்டான்; அதற்கு நளனின் பதிலைக் கேட்டான். பின் தமயந்தியிடம் வந்து, 'தமயந்தியே! அந்த உயர் குலத்தில் தோன்றிய தேரோட்டி தனது பேசும் மொழிகளால் நளனை ஒத்திருக்கிறான். மீண்டும் ஒருமுறை உடலைப் பார்த்தால் நளன் அல்லாதவனாகத் தோன்றுகிறான்' என்று தான் கண்ட உருவைப் பற்றி விளக்கும் போது, 'வாக்கினால் மன்னவனை ஒப்பான்' எனக் கூறினான்.

(2) 'மன்னர் பெருமை மடையர் அறிவரோ?'

கூற்றும் இடமும்: இது நளன் கூற்று ஆகும். நளன் தன் புதல்வன் இந்திரசேனனுடன் உரையாடும் போது, நளன் கூறிய சில வார்த்தைகளால் இந்திரசேனன் கோபமுற்றான். இந்திரசேனன் கோபத்தைத் தணிக்க நயவுரை கூறுங்கால் 'மன்னர் பெருமை மடையர் அறிவாரோ?' என்று நளன் கூறினான்.

பொருள் விளக்கம்: நளன் இந்திர சேனனைப் பார்த்து 'வளம்மிக்க நாட்டுக் குரியவனே! உங்கள் நாட்டை மற்றொருவன் ஆண்டு கொண்டிருக்க, நீங்கள் பயந்து ஓடி வந்து இந் நாட்டில் வாழ்ந்திடுதல் குற்றம் அன்றோ?' என்று விளக்கமாகக் கேட்டான். இதனால் கோபமுற்ற இந்திரசேனன் நளனை நோக்கிச், 'சமையல் தொழில் புரிகின்றவனே! கீழ்மையான தொழில்களைச் செய்பவனே! இந்தச் சொல்லைச் சொல்ல உன்னைத் தவிர வேறு அரசர்களும் கூசுவார்கள். எம் அரசனாகிய நளனின் சத்தியமே எங்களுக்கு ஆதாரம். இதை நீ அறிவாயாக!' என்று கோபமாகக் கூறினான். அப்போது நளன் மனந்தளர்ந்து உருக்கத்தோடு கண்களில் இருந்து நீர் ஒழுகத் தலைவணங்கி, அரசர்களின் பெருமை சமையற்காரர்களுக்குத் தெரியுமா? உன்னைப் பற்றித்தெரிந்துகொள்ளாமல் பேசிய என்னை அருள் கூர்ந்து கோபிக்காதே! என நயவுரை கூறும்போது, மன்னர் பெருமை மடையர் அறிவாரோ எனக் கூறினான்.

(3) 'எங்கோமான் வாய்மையே கண்டாய் வலி'

கூற்றும் இடமும்: இது நளனுடைய முதல் மகனான இளவரசன் இந்திரசேனனுடைய கூற்றாகும். நளன் தன் மகன் இந்திரசேனனுடன் உரையாடும் போது கூறிய வார்த்தைகளால் கோபமுற்ற இந்திர சேனன், நளனை இகழ்ந்து கூறிப் பிறகு, 'எங்கோமான் வாய்மையே கண்டாய் வலி!' என்று கூறுகிறான்.

பொருள் விளக்கம்: நளன் தன் மிக்க தவத்தால் பெற்ற இந்திரசேனனை நோக்கிச் 'சிவந்த கைகளைக் கொண்ட வளம் மிக்க நாட்டுக்கு உரியவனே! உங்களுக்குரிய நாட்டை மற்றொருவன் ஆண்டு கொண்டிருக்க நீங்கள் பயந்து ஓடிவந்து இந்த

நகரிலே வாழ்ந்து இருத்தல் குற்றம் அன்றே ?' என்று விளக்கமாகக் கேட்டான். நளன் கூறிய இவ் வார்த்தைகளால் மிக்க கோபமுற்ற இந்திரசேனன், 'சமையல் தொழில் புரிகின்றவனே! எப்பொழுதும் தவருமல் இழிவே கொண்ட கீழ்மையான செயல்களைச் செய்பவனே! எம்மை அவமதித்த இந்தச் சொல்லைச் சொல்ல உன்னைத் தவிர அரசர்கள் கூசுவார்கள். எம் அரசனுகிய நளனின் சத்தியமே எங்களுக்கு ஆதாரம். இதை நீ அறிவாயாக!' என்று கூறி நளனின் சத்தியச் சிறப்பைக் கூறும்பொழுது 'எங்கோமான் வாய்மையே கண்டாய் வலி' என்ருன்.

## ஆ. அரிச்சந்திர புராணம்

1. நும் பாடப் பகுதியில் வந்துள்ள அரிச்சந்திர புராணப் பகுதியின் கதையைப் முப்பது வரிகளில் எழுதுக.

அரிச்சந்திரன் சந்திரமதியைக் காசி நகரத்தின் தெருவழியே அழைத்துச் செல்கிருன். அதைக் கண்ட இரு மருங்கிலும் குழுமியிருந்த நகரமக்கள் தமக்குள் பலவாறு பேசிக்கொண்டனர். அரிச்சந்திரன் ஒழுக்கத்தாலும் வலிமையாலும் மிக்கவன்; திருமாலுக்கும் முருகனுக்கும் ஒப்பானவன் என்று சிலர் கூறினர். இவளா காசிராசனின் மகனைக் கொலைசெய்தாள்? 'யானை முன் இவளைப் போடுங்கள்; இவளை நம்படை கொல்லலாகாதோ என்று சிலரும், அது நீதிக்குக்குற்றம் எனச் சிலரும் பேசிக்கொண்டனர். காசி நகர மக்கள் மேலும் பலவாறு சந்திரமதியை வைதனர். 'அரசனுக்கு இவள் நிலையை யார் கூறுவது என்று சிலர் வருந்தினர்; பலர்

பலவாறு வருந்தினர். அரிச்சந்திரன் சந்திரமதியுடன் புறமதிலை அடைந்தான். மண்ணுலக நிகழ்ச்சியைக் காண இந்திரன், வசிட்டர், தெய்வ மாதர்கள், நாரதர் வித்யாதரர் முதலியோர் ஆகாயத்தில் வந்திருந்தனர். அரிச்சந்திரனிடம் விசுவாமித்திரன், 'நாட்டை நான் தரவில்லை' என்ற பொய் கூறி, நாட்டையும் இறந்தவர் களையும் மீண்டும் பெற்று இன்புறுக' என்று கூறினன். விசுவாமித்திரன் கூறியவற்றிற்கு அரிச்சந்திரன் இணங்கவில்லை. அரிச்சந்திரனும் சந்திரமதியும் வாய்மையின் சிறப்பை வலியுறுத்தினர். விசுவா மித்திரன் முயற்சியில் தோல்வி யடைந்தான். அரிச்சந்திரன், 'நீ வழிபடு கடவுளை வணங்கிக் கிழக்கு நோக்கி இருப்பாயாக, என்று சந்திரமதியை நோக்கிக் கூறினன். சந்திரமதி அரிச்சந்திரனை 'வாய்மை தவற வேண்டாம்' என்று கூறி வணங்கி வாழ்த்தினள். அரிச்சந்திரன் சில உண்மைகளைச் சொல்லி அவை யுண்மையானல் சந்திரமதி பிழைக்கட்டும்! இல்லை யென்றுல் இறக்கட்டும் என்று வாளை வீசினன். அவ் வாள் மாலையாகச் சந்திரமதியின் கழுத்தில் விழுந்தது.

2. சந்திரமதியைக் கொலைக்களத்திற்கு அழைத் துக்கொண்டு போகக் கண்ட நகர மாந்தர் கூறியவற்றை வரைக.

'இவளா காசிராசன் மகனைக் கொலை செய்தாள்' எனச் சிலரும், 'யானையின் முன் இவளைப் போடுங்கள்: எனச் சிலரும், 'இவளை நம் படை கொல்லலாகாதோ?' எனச் சிலரும், 'அது நீதிக்குக் குற்றம்' எனச் சிலரும் பேசிக்கொண்டனர். சந்திரமதியை, 'அநியாயமே செய்கிறவள்; தீயவள்; பழியைச் சுமந்தவள்; இவளை விட்டால் இவள் நம் சுற்றத்தார் பலரின் உயிரையும் குடிப்பாள்; கண்ணல் வெருட்டியும் நம் உயிரை வாங்கு

வாள்' என்று சிலரும், 'இவளைக் கொல்லாமல் விட்டால் தீங்கு நேரும்' என்று சிலரும் கூறினார்கள். 'இவ் இராட்சசி நம்முடைய கையிலுள்ள கயிற்றால் கட்டுண்டு மீண்டு வர வல்லவளோ? ஆகாயத்தில் மறைந்து விடுவாள்! அச் சிறுவனை அவளே கொன்றாளோ? பிறர் யாரேனும் கொன்றனரோ? என்று சிலரும், 'இறைவனே! உனக்கு நடுவுநிலைமையில்லையா?' என்று சிலரும் பேசிக்கொண்டார்கள். 'அரசனுக்கு இவள் நிலையை யார் கூறுவது' என்று சிலரும், 'அரசன் பழியைக் கொள்கிறான்' என்று சிலரும் பேசிக்கொண்டார்கள். பலர் பலவாறு வருந்தினார்கள்.

3. விசுவாமித்திரன் அரிச்சந்திரனைப் பொய் சொல்லத் தூண்டியது எவ்வாறு?

காசி நகர்க்குப் புறத்தே அரிச்சந்திரனும், சந்திரமதியும் இருந்த அந்தச் சமயத்தில் விசுவாமித்திர முனிவன் அரிச்சந்திரனிடம் வேகமாக வந்து, 'மன்னனே! நீ இந்தத் துன்பத்தை அடைவானேன்? நீ எனக்கு முன்னே கொடுத்த நாட்டை, 'நான் உனக்குக் கொடுக்கவில்லை, என்னும் பொய்யான சொல்லைக் கூறி உன் நாட்டையும், இறந்து போன உன் மகன், காசி மன்னன் மகன் உயிர்களையும் மீண்டும் உடலில் புகப் பெறுவாயாக' என்று கூறி அரிச்சந்திரனைப் பொய் சொல்லத் தூண்டினான்.

4. அரிச்சந்திரனும் சந்திரமதியும் கோசிகனுக்கு அளித்த மறுமொழி யாது?

'தொலைவிலும் அருகிலும் உயிருக்கு ஒப்பற்ற துணை என்று சொல்லும்படி உள்ள உண்மையால் மனம் தூய்மையாகும். வேறொன்றும் அவ்வாறு தூய்மை செய்வது இல்லை. அகமல்லாத வெளியுடலைத் தூய்மை

செய்வது தண்ணீர் ஆகும். துன்பம் செய்தாலும் கணவன் மனைவியாகிய எங்களுக்கு உண்மை பேசுதலே விரதம் ஆகும். இதை நீ அறிவாயாக!'

'எந்தக் கீழ் மகனும் உண்ணவிரும்பாத யாக்கையை அழியாதது என்று மயங்கி, அழியாத உயிரைவிட நெடுங்காலம் புகழுடன் இருக்கச் சிறந்த பண்பாகிய மூதன்மை பெற்ற பொய்பேசாமையிலிருந்து தவறி நடப்பதை நாங்கள் விரும்ப மாட்டோம். எல்லாக் கலைகளையும் உணர்ந்த நீ எங்களுக்கு இவ்வாறு பொய் சொல்லுமாறு வற்புறுத்திக் கூறுவது அழகாகாது.'

'இப்பிறப்பு, அடுத்த பிறப்பு, வீடு என்று வேதங்கள் அறிவு கொள்ளும்படி சொல்லும் மூன்றையும் தருகின்ற தன்மையை உடையது பொய்யாமை. அதற்கு மாறுபட்டு எங்களை ஆழமான வயிற்றில் அடக்கிக் கொண்டு மறுபடியும் வெளிவிடாத தீயை உடைய வெப்பம் மிகுந்த நரகத்தில் கொண்டு போய்ச் சேர்த்தாலும் உண்மை பேசுதலை விடமாட்டோம்.'

'உண்மையே பேசும் விரதத்தினுல் நாங்கள் நாட்டை இழந்தோம்; எங்கள் மகனை இழந்தோம். நாங்கள் பெற்றிருந்த செல்வத்தை இழந்தோம். மேலும் நமக்கு எஞ்சியதென்று நாங்கள் நினைக்கின்ற மோட்சத்தை இழக்கவேண்டி வந்தாலும் நாங்கள் மேலே சொன்ன உறுதிச் சொற்களிலிருந்து தவற மாட்டோம்' என்று அரிச்சந்திரனும் சந்திரமதியும் விசுவாமித்திர முனிவனிடம் கூறினர்..

5. இறுதியாக அரிச்சந்திரன் கூறிய சபத உரையைத் தருக.

'உலகில் தோன்றும் உயிர்களுக்கெல்லாம் சிவபெருமான் ஒப்பற்ற கடவுள் ஆனுல், அளவில்லாத சிறப்பையுடைய அக்கடவுள் சொல்லியதே வேதம்

என்ருல், அந்த வேதத்தில் இலங்குகின்ற அறங்கள் பலவற்றிலும் சத்தியமே ஒப்பு இல்லாதது என்ருல், தவருமல் அந்தச் சத்தியத்தையே நோன்பாக யான் கொண்டிருந்தால் நல்ல வழியில் செல்லும் என்னை விட்டு நீங்காத கற்பென்னும் பண்பு இச் சந்திரமதிக்கு இருக்குமாஞல் இவள் சாவாமையைப் பெறுக; இன்றேல் அழிவாளாக' என அரிச்சந்திரன் சபத உரை கூறினன்.

6. மயானத்தில் சந்திரமதிக்கும், அரிச்சந்திரனுக்கும் நடந்த உரையாடலைத் தருக.

'சந்திரமதியே! நீ வழக்கத்தால் வணங்கும் தெய்வத்தை வணக்கம் செய்து கிழக்குத் திசையைப் பார்த்தவாறு இங்கே இருப்பாயாக' என்று அரிச்சந்திரன் கட்டளை இட்டான். சந்திரமதி தான் தினமும் வணங்கிப் பழகிய அரிச்சந்திரனையே மனத்தால் துதித்து 'நான் என் உயிரை விடுதற்கு வருந்தி நீர் தருமத்திலிருந்து தவருதீர்' என்று கூறித் 'தலைவனே! வெள்ளத்தில் தோன்றும் நீர்க் குமிழி போன்ற நிலையற்ற வாழ்வை உண்மையானது என்று தவருகக் கருதி உம்முடைய அருமையான தவத்தினையும். தருமத்தையும், சத்தியத்தையும் கை விட்டு வருந்தாதே! மேலும் மேலும் சிறப்படைவாயாக!' என்று அரிச்சந்திரனை வாழ்த்தினள்.

7. இடம் சுட்டி விளக்குக:

1. அறைந்த காரணம் அறிந்துபோ. 2. நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பு எமக்கு அறிதி. 3. அறத்தையும் மெய்யையும் விடுத்து வருந்தல் மன்னவ

1. அறைந்த காரணம் அறிந்து போ

கூற்றும் இடமும்: இது இந்திரன் கூற்ருகும். இந்திரன், அரிச்சந்திரனைப் பொய் சொல்லுமாறு செய்ய முயன்று தோற்ற விசுவாமித்திரனை நோக்கிக் கூறியதாகும்.

பொருள் விளக்கம்: விசுவாமித்திரன் காசி நகரத்தில் அரிச்சந்திரனும் சந்திரமதியும் இருந்த அந்தச் நாயத்தில் 'மன்னனே! நீ எனக்குத் தந்த நாட்டை சமன் தரவில்லை என்று பொய் கூறினல் உங்களுடைய நாட்டையும் பெற்று இழந்த உயிர்களை உடலில் புகப் பெற்றும் இன்பம் அடைவாயாக' என்ருன். இதைத் தேவர்கள் மட்டுமே அறிந்தனர். இதைக் கேட்ட அரிச்சந்திரனும் சந்திரமதியும் உயிருக்குத் துணையாவது வாய்மையே. அதைப் பேசுவதே எங்கள் விரதம்; உடல் நிலையில்லாதது: உடலை வாழ வைக்கப் பொய் சொல்லத் தூண்டுதல் அழகன்று; எங்களை நரகத்தில் விட்டாலும் உண்மை பேசுதலைக் கைவிடமாட்டோம்; வாய்மையே பேசும் செயலினல் நாங்கள் நாடு, பிள்ளை, செல்வம் யாவும் இழந்தோம். இனி மோட்சமே போயினும் உறுதி தவருேம்' என்றனர். இதனல் தன் முயற்சியில் தோற்ற விசுவாமித்திரன் அவ்விடம் விட்டு மறைந்தான். அப்பொழுது விசுவாமித்திரனை இந்திரன் அழைத்து 'முன்பு நீ அரிச்சந்திரனைப் பொய்யன் என்று அறைந்த காரணம் தெரிந்து கொண்டு போ!' என்று கூறினன்.

2. நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெமக் கறிதி.

கூற்றும் இடமும்: இது அரிச்சந்திரன், சந்திரமதி ஆகியவரின் கூற்ருகும். இது விசுவாமித்திர முனிவனை நோக்கிக் கூறியதாகும்.

பொருள் விளக்கம்: விசுவாமித்திரன், காசி நகர்ச் சுடுகாட்டில் அரிச்சந்திரன் சந்திரமதி ஆகியோர் இருக்கும்போது விரைந்து சென்று, "மன்னவ, நீ, எனக்கு அளித்த நாட்டை நான் உனக்குத்தரவில்லை என்று கூறி

உங்களுடைய நாட்டையும் இறந்து போன உயிர்களை யும் மீண்டும் உடலில் புகப் பெறுவாயாக' என்ருன். விசுவாமித்திரன் கூறிய இச் சொற்களைக் கேட்ட அவர்கள், 'தொலைவிலும் அருகிலும் உயிருக்கு ஒப்பற்ற துணை என்று சொல்லும்படியான உண்மையால் மனம் தூய்மை ஆகும். வேருென்றும் அவ்வாறு தூய்மை செய்வதில்லை; உடல், தண்ணீரால் தூய்மை அடையும்; துன்பம் செய்தாலும், எங்கட்கு உண்மை பேசுதலே விரதம் ஆகும்' என்றனர். அப்போது 'நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெமக்கு அறிதி' என்றனர்.

3. அறத்தையும் மெய்யையும் விடுத்து வருந்தல் மன்னவ!

கூற்றும் இடமும்: இது சந்திரமதியின் கூற்ருகும். சந்திரமதி சுடுகாட்டில் அரிச்சந்திரனை நோக்கிக் கூறியது ஆகும்.

பொருள் விளக்கம்: அரிச்சந்திரன் 'நீ வழக்கமாக வணங்கும் கடவுளை வழிபட்டுக் கிழக்குத் திசையைப் பார்த்தவாறு இங்கே இங்கே இருப்பாயாக!' என்று சந்திரமதியை நோக்கிக் கூறினுன். சந்திரமதி வழக்கப் படி தன் கணவனுகிய அரிச்சந்திரனை வணங்கித் துதித்து, என் உயிரை விடுவதற்கு வருந்தி நீ தருமத் திலிருந்து தவருதே! தலைவனே! வெள்ளத்தில் தோன்றும் நீர்க்குமிழி போன்ற நிலையற்ற வாழ்வை உண்மையானது எனக் கருதி உம்முடைய அருமை யான தவத்தினையும் அறத்தையும் சத்தியத்தையும் கைவிட்டு வருந்தாதீர்! மேலும் மேலும் சிறப்படை வீராக!' எனக் கூறும்போது 'அறத்தையும் மெய்யை யும் விடுத்து வருந்தல் மன்னவ' என்ருள்.

---

# IV. பல்சுவைப் பகுதி

## 1. கல்விச் சிறப்பு

இத் தலைப்பில் பாடமாக வந்துள்ள செய்யுள் புறநானூறு என்ற நூலிலிருந்து எடுத்து அமைக்கப் பட்டது.

### புறநானூறு

இது பதினெண்மேற்கணக்கு நூல்களில் ஒன்று, பதினெண்மேற்கணக்கு நூல்களை எட்டுத் தொகை, பத்துப்பாட்டு என இரண்டாகப் பிரித்துள்ளனர். அவையாவன :

1. எட்டுத்தொகை : நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித் தொகை, அகநானூறு, புறநானூறு என்ற எட்டு நூல்கள்.

2. பத்துப்பாட்டு : திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, சிறு பாணாற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம் என்ற பத்து நூல்கள்.

பெயர்க்காரணம் :

புறம் + நானூறு எனப்பிரிக்கலாம். புறத்தைப் பற்றிய ஒழுக்க நெறிகளைக் கூறும் நானூறு பாக்களைக் கொண்ட நூல் என்பது பொருள். கணவன், மனைவி கூடிவாழும் வாழ்வை அகம் என்றும், அரசர், வீரர், வள்ளல் முதலியவர்களின் செயல்களும் நிகழ்ச்சிகளும் புறம் என்றும் கூறப்படும். புறம் பற்றிய பாடல்களைச் சமூக வரலாற்றுப் பாடல்கள் என்றே கூறலாம்.

புறநானூற்றில் பல காலத்தவர்களும், பல இனத் தவர்களும் பாடிய பாடல்கள் உள்ளன. இந்நூல் கி.பி. இரண்டாம் நூற்றுண்டில் தொகுக்கப்பட்டது என்பர்.

இங்குப் பாடமாக வந்துள்ள 'உற்றுழி உதவியும்' எனத்தொடங்கும் செய்யுள் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்ற அரசனுல் இயற்றப் பட்டது; கல்வியின் சிறப்பைக் கூறுவது.

### ஆசிரியர் வரலாறு

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாண்டிய மன்னன்; கோவலனை ஆராயாது கொன்ற தவற்றினுக்காகத் தன் உயிரையே தந்து நீதியை வாழவைத்த உத்தமன்; கற்றவர்களிடம் மிக்க மதிப்பு உடையவன்; கற்றலையே பெரும் பயனாக எண்ணியவன்.

## 1. கல்விச் சிறப்பு

### சொற் பொருள்

உற்ற உழி-(தன் ஆசிரியருக்குப் பொருள் முட்டுப்பாடு) நேர்ந்த பொழுது

உதவியும்-உதவி புரிந்தும்

உறு பொருள் கொடுத்தும்-அவருக்கு மிகுந்த பொருளைக் கொடுத்தும்

பிற்றை நிலை-வழிபட்டு நிற்றலை

முனியாது(ம்)-வெறுக்காதும்

கற்றல்-கல்வி கற்பது

நன்று-மாணவனுக்கு நன்மை பயக்கும் (ஏனென்றால்)

பிறப்பு ஓர் அன்ன-பிறப்பில் ஒரு தன்மையர் ஆகிய

உடன் வயிற்றுள்ளும்-உடன் பிறந்தவர் பலருள்ளும்

சிறப்பின் பாலால்-கல்விச் சிறப்பின் காரணமாக

தாயும் மனம் திரியும்-தாயும் மனம் மாறுவாள்

ஒரு குடிப்பிறந்த-ஒரு குடும்பத்தில் பிறந்த

பல்லோருள்ளும்-பலருள்ளும்

மூத்தோன் வருக என்னாது-வயதால் மூத்தவனை வருக என்று சொல்லாது

அவருள்-அக்குடும்பத்தினருள்

அறிவு உடையோன் ஆறு-கல்வி அறிவுஉடையவன் சென்ற வழியிலே

அரசும் செல்லும்-அரசனும் செல்வான்

வேற்றுமை தெரிந்த-வேறுபாடு தெரியப்பட்ட

நாற்பாலுள்ளும்-(அரசர், அந்தணர், வணிகர், வேளாளர்என்ற) நான்கு குலத்தினருள்ளும்

கீழ்ப்பால் ஒருவன் கற்பின்-கீழ்க் குலத்தில் பிறந்த ஒருவன் கற்பானாயின்

மேற்பால் ஒருவனும்-மேற்குலத்தில் பிறந்த ஒருவனும்

அவன் கண் படும்-அக் கற்றவனிடம் சென்று வழிபடுவான்.

### பொழிப்புரை

தன் ஆசிரியருக்குப் பொருள் முட்டுப்பாடு நேர்ந்த பொழுது உதவிபுரிந்தும், அவருக்கு மிகுந்த பொருளைக் கொடுத்தும், வழிபட்டு நிற்றலை வெறுக்காதும் கல்வி கற்பது மாணவருக்கு நன்மை பயக்கும். ஏனென்றால் பிறப்பில் ஒரு தன்மையர் ஆகிய உடன் பிறந்தவர் பலருள்ளும் கல்விச் சிறப்பின் காரணமாகத் தாயும் மனம் மாறுபடுவாள். ஒரு குடும்பத்தில் பிறந்த பலருள்ளும் வயதால் மூத்தவனை வருக என்று அழைக்காது கல்வி அறிவுடையோன் சென்ற வழியிலேயே அரசனும் செல்வான். வேறுபாடு தெரியப்பட்ட அரசர் அந்தணர் வணிகர் வேளாளர் என்ற நான்கு குலத்தினருள்ளும் கீழ்க்குலத்தில் பிறந்த ஒருவன் கற்பினால் மேற்குலத்தில் பிறந்த ஒருவனும் அக்கற்றவனிடம் சென்று வழிபடுவான்.

### கருத்துரை

தாய் அரசன் ஆகியவர்களிடம் நன்மதிப்பைப் பெற்றுத் தரவல்லதும, குலவேறுபாட்டைப் போக்க வல்லதும் கல்வியே. எனவே, ஆசிரியருக்கு உதவி செய்து பொருள் கொடுத்து, வழிபட்டுக் கல்விபெற வேண்டும்.

### இலக்கணம்

முனியாது என்னாது – எதிர்மறை வினையெச்சங்கள்
கற்றல் – தொழிற் பெயர்
உறு பொருள் – உறு – உரிச்சொல்
வருக—வியங்கோள் வினைமுற்று
தெரிந்த – பெயரெச்சம்
நான்கு + பால் = நாற்பால்
கற்பின் – வினையெச்சம்
அவன் கண் – என்பதிலுள்ள கண் - எழாம் வேற்றுமை உருபு

## 2. நாரை விடு தூது

'நாராய் நாராய்' என்று தொடங்கும் இப் பாடலை இயற்றியவர் சத்திமுற்றப் புலவர். இப் புலவர் இப் பாடலில் நாரையைத் தம் மனைவிக்குத் தூதுவிட்ட செய்தியைக் கூறுகிறார்.

பாடல் எழக்காரணம்: சத்திமுற்றம் என்ற ஊரிலிருந்து சத்திமுற்றப் புலவர் பாண்டிய மன்னனைக் கண்டு தம்வறுமையைக் கூறிக் கவிபாடிப் பரிசில்பெற்று மீளலாம் என்று புறப்பட்டார். மதுரையை அடைந்த அவர் அங்கே ஒரு பொது இடத்தில் தங்கினார். ஆடை இல்லை. வாடைக் காற்று வீசியது. புலவர் குளிரால் துன்புற்றார். அப்போது தென் திசையிலிருந்து இரு நாரைகள் வடக்கு நோக்கிச்சென்று கொண்டிருந்தன. மதுரைக்கு வடக்குத் திசையில் சத்திமுற்றம் என்ற தம் ஊர் இருப்பதால் அந் நாரையைத் தம் நிலையை விளக்கித் தூது போகுமாறு வேண்டிப் பாடல் பாடினார்.

நகர்ச்சோதனைக்காக அவ்வழியேவந்தபாண்டியன் எதிர்பாராதவிதமாக அப்பாடலைக் கேட்டான். புலவர், நாரையின் வாய்க்குப் பிளந்த பனங்கிழங்கை உவமையாகக் கூறியது மன்னனை மிகவும் கவர்ந்தது, இதனைக் கூறியவர் யார்? என்று பார்த்தான், புலவர் நிலையைக் கண்டு வருந்தினான். புலவரை அரண்மனைக்கு அழைத்துச் சென்று பொன்னும் பொருளும், அணியும், மணியும், அனைத்தும் தந்து ஆதரித்து ஊருக்கு அனுப்பிவைத்தான்.

### ஆசிரியர் வரலாறு

இவர் தஞ்சை மாவட்டம், கும்பகோணம் வட்டம் சத்திமுற்றம் என்ற ஊரினர்; இவரைப் பற்றிய பிற செய்திகள் தெரியவில்லை.

## சொற் பொருள்

நாராய் நாராய்! - நாரையே! நாரையே!
செங்கால் நாராய் - சிவந்த கால்களையுடைய நாரையே!
பழம் படுபனையின் - பனையின் பழத்தில் இருந்து முளைத்து எழுகின்ற
கிழங்கு பிளந்து அன்ன - நீண்ட கிழங்கினைப் பிளந்தது போல
கூர் - கூர்மையான
பவளவாய் - பவளம் போலச் சிவந்த வாயினையும்
செங்கால் நாராய் - சிவந்த கால்களையும் உடைய நாரையே
நீயும் நின்மனையும் - நீயும் உன்னுடைய மனைவியும்
தென் திசைக் குமரி ஆடி - தெற்குத் திசையில் உள்ள கன்னியா குமரித் துறையில் குளித்து
வட திசைக்கு - வடக்குப் பக்கத்திற்கு
ஏகுவீர் ஆயின் - செல்வீர் களானால்
எம் ஊர் - எம் ஊராகிய
சத்தி முத்தம் - சத்தி முற்றத்தில் உள்ள
வாவியுள் தங்கி - குளத்தில் தங்கி
நனைசுவர்க் கூரை - மழை நீரால் ஈரமான சுவர்களின் மேல் வேயாத கூரையில் உள்ள
கனை குரல் பல்லி - ஒலிக்கின்ற குரலையுடைய பல்லி
பாடுபார்த்திருக்கும் - சொல்வதை ஆராய்ந்தபடியே என் வருகையை எதிர்பார்த்து இருக்கும்
என் மனைவியைக்கண்டு -
எம் கோன் - எம் அரசனாகிய
மாறன் வழுதி - மாறன் என்னும் பாண்டியன்
கூடலில் - மதுரையில்
ஆடையின்றி - உடுக்கும் ஆடையில்லாமல்
வாடையின் மெலிந்து - வாடைக் காற்று வீசுவதால் உடல் மெலிந்து
கையது கொண்டு - கைகளினால்
மெய்யது பொத்தி - உடலை மூடி
காலது கொண்டு - கால்களினால்
மேலது தழீஇ - உடலின் மேலே தழுவி
பேழை உள் இருக்கும் - பெட்டிக்குள் இருக்கும்
பாம்பு என உயிர்க்கும் - பாம்பைப் போலச் சுருண்டு பெருமூச்சு விடும்
ஏழையாளனை - உன் வறிய கணவனை
கண்டனம் எனும் - (நாங்கள்) பார்த்தோம் என்று கூறுங்கள்.

## பொழிப்புரை

நாரையே! நாரையே! சிவந்த கால்களை உடைய நாரையே! பனையின் பழத்திலிருந்து முளைத்தெழுகின்ற நீண்ட கிழங்கினைப் பிளந்தது போலக் கூர்மையான சிவந்த கால்களையுடைய நாரையே! நீயும் உன்னுடைய மனைவியும் தெற்குத் திசையில் உள்ள கன்னியாகுமரித் துறையில் குளித்து வடக்குப் பக்கத்திற்குச் செல்வீர் களானல் எம் ஊராகிய சத்திமுற்றத்தில் உள்ள குளத்தில் தங்கி, மழைநீரால் ஈரமான சுவர்களின் மேல் வேயாத கூரையிலேயுள்ள ஒலிக்கின்ற குரலையுடைய பல்லி சொல்வதை ஆராய்ந்தபடியே என்வருகையை எதிர்பார்த்து இருக்கும் என் மனைவியைக் கண்டு, எம் அரசனாகிய வழுதிமாறன் என்னும் பாண்டியனின் மதுரையில், உடுக்கும் ஆடையில்லாமல் வாடைக் காற்று வீசுவதால் உடல்மெலிந்து, கைகளினால் உடலை மூடிக் கால்களினால் உடலின் மேலே தழுவிப் பெட்டிக் குள் இருக்கும் பாம்பைப் போலச் சுருண்டு பெரு மூச்சு விடும் உன்வறிய கணவனை நாங்கள் பார்த்தோம் என்று கூறுங்கள்.

## கருத்துரை

நாரையே நீயும் உன்மனைவியும் சத்திமுற்றத்துக் குச்சென்று அங்கே என்னை எதிர்பார்த்து இருக்கும் என்மனைவியிடம் மதுரையில் ஏழையாளனாகிய உன் கணவனைப் பார்த்தோம் என்று சொல்லுங்கள்.

## இலக்கணம்

நாராய் – விளி, நாரை – முதல் வேற்றுமை; இதில் இறுதியில் உள்ள ஐகாரம் ஆய் ஆகத்திரிந்து விளியுருபு ஏற்றது

செம்மை + கால் = செங்கால்

கால்—ஆகு பெயராய் உடம்பின் ஒரு பகுதியாகிய உறுப்பைக் குறித்தது

அன்ன = உவமை உருபு இடைச்சொல் நீயும் நின் மனைவியும் என்பவற்றிலுள்ள உம் இடைச்சொல்

தெற்கு + திசை = தென்றிசை

வடக்கு + திசை = வடதிசை

தழுவி என்பது தழீஇ என்று அளபெடை ஆயிற்று

கண்டனம்—தன்மைப் பன்மை இறந்த கால வினைமுற்று;

காண்—பகுதி

பயிற்சி

வாவியுள், கூடலில், பேழையுள், ஏழையாளனை— இவற்றிலுள்ள வேற்றுமை உருபுகளை எடுத்துக்கூறி இன்ன வேற்றுமை உருபு என்றும் எழுதுக.

## 3. சீதக்காதியின் வள்ளன்மை

'ஈயாத புல்லர்' எனத் தொடங்கும் இப் பாடல் வள்ளல் சீதக்காதியின் மேல் படிக்காசுத் தம்பிரானால் பாடப்பட்டது.

ஆசிரியர் வரலாறு

பெயர் : படிக்காசுத் தம்பிரான்.

ஊர் : பொன் விளைந்த களத்தூர். (செங்கற்பட்டு மாவட்டம்)

சமயம் : சைவம்

பெயர்க் காரணம் : சிதம்பரம் கோவிலில் பஞ்சாக்கரப் படியில் நடராசப் பெருமான் அருளால் ஐந்து

பொற்காசுகள் பெற்றமையால் படிக்காசுப் புலவர் ஆனார். தருமபுர ஆதீன அடியார் கூட்டத்தில் சேர்ந்தமையால் படிக்காசுத் தம்பிரான் எனப்பட்டார்.

இவர் ஆசிரியர்: திருவாரூர் வைத்தியநாத தேசிகர்.

இவரை ஆதரித்தவர்: சிவந்தெழுந்த பல்லவரையன்

இவர் இயற்றிய நூல்கள்: புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம், தொண்டை மண்டல சதகம் முதலியன.

சிறப்பு: இவர் சந்தப் பாடல்கள் பாடுவதில் வல்லவர்.

சொற் பொருள்

எட்டிமரம்–,
காயாது இருந்து என்ன– காய்க்காவிட்டால் என்ன இழப்பு ஏற்படும்
காய்த்துப் பயன் என்ன– காய்த்தால்தான் என்ன பயன் ஏற்படும் (ஒன்றும் இல்லை) (அதைப்போல)
ஈயாத புல்லர்–தருமம் செய்யாத அற்பர்கள்
இருந்து என்ன–வாழ்ந்தால் என்ன பயன்
போய் என்ன–இறந்து போனால் தான் என்ன இழப்பு ஏற்படும் (ஒன்றுமில்லை)
கைபரப்பிப் போய்– கைவிரித்துச் சென்று
யாசகம் என்று – பிச்சை தாருங்கள் என்று
உரைப்போர்க்கு – கேட்பவர்களுக்கு
செம்பொன் – செம்மையான பொன்னை
பிடிபிடியாய் – (தன் கையில் இருந்து) ஒவ்வொரு பிடியாக
ஓயாமல் ஈபவன் – இடைவிடாமல் கொடுப்பவன்
வேள் – அரசனாகிய
சீதக்காதி – சீதக்காதி என்னும்
ஒருவனுமே – ஒருவனே (இவ்வுலகத்தில் உள்ளான்.)

பொழிப்புரை

எட்டிமரம் காய்க்காவிட்டால் என்ன இழப்பு ஏற்படும்? காய்த்தால் தான் என்ன பலன் ஏற்படும்? ஒன்றுமில்லை; அதைப்போலத் தருமம்செய்யாத

அற்பர்கள் வாழ்ந்தால் என்ன பயன்; இறந்துபோனுல் தான் என்ன இழப்பு! ஒன்றுமில்லே; கைவிரித்துச் சென்று 'பிச்சை தாருங்கள்' என்று கேட்பவர்களுக்குச் செம்மையான பொன்னேத் தன் கைகளிலிருந்து ஒவ்வொரு பிடியாக இடைவிடாமல் கொடுப்பவன் அரசனுகிய சீதக்காதி என்னும் ஒருவனே இவ்வுலகத்தில் உள்ளான்.

### கருத்துரை

எட்டி பழுத்தும் ஈயாதார் வாழ்ந்தும் பயனில்லே. அள்ளிக் கொடுக்கும் வள்ளல் சீதக்காதியே.

### விளக்கவுரை

'எட்டி பழுத்தென்ன ஈயாதார் வாழ்ந்தென்ன' என்ற பழமொழி இப்பாடலில் உள்ளது.

சீதக்காதி : இப் பாடலில் குறிக்கப்பட்டுள்ள சீதக்காதி என்பவன் பதினேழாம் நூற்ருண்டின் பிற்பகுதியிலும், பதினெட்டாம் நூற்ருண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த சிறந்த கொடை வள்ளல்; அவனுடைய இயற் பெயர் ஷைகு அப்துல் காதிறு என்பதாகும். அவருடைய தந்தை பெயர் மல்லா சாகிபு எனப்படும் பெரியதம்பி மரைக்காயர். தாயார் பெயர் சையது அகமது நாச்சியார். ஊர் : கீழக்கரை (இராமநாதபுரம் மாவட்டம்.) வழங்கும் பழமொழி: 'செத்துங் கொடுத்தான் சீதக்காதி' என்பதாகும். இவனேப் பாடிய புலவர்கள் : நமச்சிவாயப் புலவர், கந்தசாமிப் பிள்ளே படிக்காசுப் புலவர்.

### இலக்கணம்

ஈயாத—எதிர்மறைப் பெயரெச்சம்

காய்ந்து; ஓயாமல்— வினையெச்சங்கள்

போய் + யாசகம் + என்று + உரைப்போர்க்கு=
போயாசக்மென் றுரைப்போர்க்கு

செம்மை + பொன் = செம்பொன்

## 4. திருக்குற்றால மலையின் வளம்

'வானரங்கள்' எனத்தொடங்கும் பாடல் குற்றாலக் குறவஞ்சி என்னும் இலக்கியத்தில் உள்ளது. அந்நூலை இயற்றியவர் திரிகூட ராசப்பக் கவிராயர் என்பவர்.

### நூற் குறிப்பு

குற்றாலக்குறவஞ்சி என்பது திருக்குற்றாலம்என்னும் தென்பாண்டி நாட்டுத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் குற்றாலநாதர் என்ற சிவபெருமானைக் குறித்துப் பாடப் பட்ட உயர்ந்த இலக்கியம். குறவஞ்சி என்பது குறி சொல்லும் குறத்தியின் பாட்டு.

### ஆசிரியர் வரலாறு

திரிகூட ராசப்பக் கவிராயர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த தென்காசி வட்டத்திலிருக்கும் மேலகரம் என்னும் ஊரினர். சுமார் 250 ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர். மதுரை மன்னன் முத்துவிஜயரங்க சொக்கலிங்கநாயக்கர், இப்புலவருக்குத் 'திருக்குற்றாலக் கோயில் வித்துவான்' என்ற பட்டமும் நிலமும் அளித்துச் சிறப்பித்தான். திருக்குற்றால மாலை என்ற நூலையும் இப்புலவரே இயற்றினர்.

# வசந்தவல்லி என்பவளிடம் குறத்தி குறி சொல்வதற்கு முன்பு தன் மலையின் வளத்தைக் கூறியது

## சொற்பொருள்

வானரங்கள்–ஆண் குரங்குகள்
கனி கொடுத்து–பழங்களைக் கொடுத்து
மந்தியொடு கொஞ்சும்–பெண் குரங்குகளோடு இனிமையாகக் கொஞ்சும்
மந்தி–அப் பெண் குரங்கு
சிந்து கனிகளுக்கு–கீழே சிந்தும் பழங்களுக்காக
வான் கவிகள்–விண் உலகில் உள்ள குரங்குகள்
கெஞ்சும் – வருந்திக் கேட்கும்
கானவர்கள் – குறவர்கள்
விழிஎறிந்து– பார்வையைச் செலுத்தி
வானவரை அழைப்பார் – தேவர்களைக் கூப்பிடுவார்கள்
கவனசித்தர் – வான வழியில் செல்லும் சித்தர்கள்
வந்து வந்து–அடிக்கடி வந்து
காயசித்தி –(வாழவைக்கும் ஆற்றல் படைத்த) பல வகைச் சித்திகளை
விளைப்பார்– (மூலிகைகளைக் கொண்டு) செய்வர்
தேன் அருவி-தேன் அருவி என்ற நீர் வீழ்ச்சியின்
திரை எழுந்து–அலை உயர்ந்து
வானின் வழி - ஆகாயத்தின் வழியிலே
ஒழுகும்–பாயும்
செங்கதிரோன்–(அது அவ்வாறு பாய்வதனால்) சூரியனது
பரிக்காலும்-தேர்க் குதிரையின் கால்களும்
தேர்க்காலும்–தேரின் ஒற்றைச் சக்கரமும்
வழுக்கும்-சறுக்கும் (இவ்வாறான வளங்களைக் கொண்ட
கூனல்-வளைவினையுடைய
இளம் பிறை முடித்த–இளைய சந்திரனை அணிந்த
வேணி அலங்காரர்–சடையழகினை உடைய குற்றால நாதரின்
குற்றாலம்-திருக்குற்றாலத்திலுள்ள
திரிகூடமலை-திரிகூடம் என்னும் மலையே
எங்கள் மலை-எங்களுடைய மலை ஆகும்.

### பொழிப்புரை

ஆண்குரங்குகள் பழங்களைக் கொடுத்துப் பெண் குரங்குகளோடு இனிமையாகக் கொஞ்சும். அப்பெண் குரங்குகள் கீழே சிந்தும் பழங்களுக்காக, விண் உலகில் உள்ள குரங்குகள் வருந்திக் கேட்கும். குறவர்கள் பார்வையைச் செலுத்தித் தேவர்களைக் கூப்பிடுவார்கள். வானவழியில் செல்லும் சித்தர்கள் அடிக்கடி வந்து வாழவைக்கும் ஆற்றல்படைத்த பல்வகைச் சித்திகளை மூலிகைகளைக் கொண்டு செய்வர். தேன் அருவி என்னும் நீர்வீழ்ச்சியின் அலை உயர்ந்து ஆகாயத்தின் வழியிலே பாயும்; அது அவ்வாறு பாய்வதனுல் சூரியனது தேர்க் குதிரையின் கால்களும் தேரின் ஒற்றைச் சக்கரமும் சறுக்கும். இவ்வகையான வளங்களைக் கொண்ட வளை வினையுடைய பிறைச்சந்திரனை அணிந்த சடையழகினை யுடைய குற்ருலநாதரின் திருக்குற்ருலத்தில் உள்ள திரிகூடம் என்னும் மலையே எங்களுடையது ஆகும்.

### கருத்துரை

குற்ருலமலை குரங்குகளும் பழங்களும் நிறைந்தது; வேடர்களும் தேவர்களும் வாழ்வது; சிறந்த அருவிகளை உடையது.

### இலக்கணம்

மந்தியொடு – என்பதிலுள்ள ஒடு மூன்ரும் வேற்றுமை உருபு

வானவரை – என்பதிலுள்ள ஐ இரண்டாம் வேற்றுமை உருபு

செம்மை + கதிரோன் = செங்கதிரோன்

### பயிற்சி

இப்பாடலில் உள்ள ஆறு வினை முற்றுக்களை எழுதுக.

# 5. இரட்டுற மொழிதல்

இரண்டுற மொழிதல் (இரட்டு+உற+மொழிதல்) என்றால் இருபொருள் படுமாறு பாடுதல். இதனைச் 'சிலேடை' என்பர்.

'ஆடிக்குடத் தடையும்' எனத் தொடரும் இப் பாடலை இயற்றியவர் காளமேகப் புலவர் ஆவார்.

### ஆசிரியர் வரலாறு

ஆசிரியர்– காள மேகப் புலவர்

இயற்பெயர்– வரதன்

பெயர்க் காரணம் : சூல் கொண்ட மேகம் போலக் கவிமழை பொழிவதால் காளமேகம் எனப்பட்டார்

சமயம் – தொடக்கத்தில் வைணவம்; பிறகு சைவம்

சிறப்பு – 'வசை பாடக் காளமேகம்' என்ற புகழ் பெற்றவர்

காலம் – கி. பி. 15 ஆம் நூற்றாண்டு

## பாம்புக்கும் எள்ளுக்கும் சிலேடை

### பாம்பு

#### சொற்பொருள்

பாம்பு – பாம்பானது

ஆடி – படமெடுத்து ஆடி

குடத்து அடையும் – குடத்துள் (பெட்டியுள்) புகும்

ஆடும்போதே – அவ்வாறு படம் எடுத்து ஆடும் போதே

இரையும் – சீறும்

மூடித்திறக்கின் – குடத்திலிட்டு மூடிப் பின் அதைத் திறந்து பார்த்தால்

முகம் காட்டும் – தனது தலையைத் தூக்கிக் காட்டும்

ஓடி – அதன்விடம் ஓடிச் சென்று

மண்டைபற்றில் – தலைக்கு ஏறுமானால்

பரபரெனும் – ஒருவித பரபரப்பு உண்டாகும்

பிள்நாக்கும் உண்டாம் – பிளவுபட்ட நாக்கும் அதற்கு உண்டு.

## எள்

எள்–எள்ளானது

ஆடிக் குடத்தடையும்–செக்கில் ஆட்டப் பட்டு (எண்ணெய் ஆக்கி)க் குடத்திலே அடைக்கப் படும்

ஆடும் போதே - செக்கிலே ஆட்டும்போதே

இரையும் – இரைச்சல் ஒலியை உண்டாக்கும்

மூடித்திறக்கின்–(எண்ணெய் வைத்திருக்கும்) குடத்தின் மூடியை (அசையாமல்) திறந்தால்

முகம் காட்டும்–பார்ப்பவர் களின் முகத்தை அது காட்டும்

ஓடி மண்டை பற்றில்–தலையில் ஊற்றப்படுமானல்

பரபரெனும்–பர பர என்று தேய்க்கப்படும்

பிண்ணுக்கும் உண்டாம்–(எள்) பிண்ணுக்கும் கிடைக்கும்,

(ஆகையினல்)

பாரில் – உலகில்

உற்றிடும் – பொருந்தி இருக்கும்

பாம்பு – பாம்பானது

எள் எனவே – எள் என்றே

ஓது – சொல்லுக.

பொழிப்புரை

பாம்பானது படமெடுத்து ஆடிக் குடத்துள் புகும். அவ்வாறு படமெடுத்து ஆடும் போதே சீறும். குடத்திலிட்டு மூடிப் பின் அதைத் திறந்து பார்த்தால் தனது தலையையெடுத்துக்காட்டும். அதன் விடம் ஓடித் தலைக்கு ஏறுமானல் ஒருவிதப் பரபரப்பு உண்டாகும். பிளவு பட்ட நாக்கும் அதற்கு உண்டு.

எள்ளானது செக்கில் ஆட்டப்பட்டு எண்ணெய் ஆக்கிக் குடத்திலே அடைக்கப்படும். செக்கிலே ஆட்டும் போதே இரைச்சல் ஒலியை உண்டாக்கும். எண்ணெய் வைத்திருக்கும் குடத்தின் மூடியை அசையாமல் திறந்தால் பார்ப்பவர் முகத்தைக் காட்டும். தலையில் ஊற்றிப் பரபர என்று தேய்க்கப்பெறும். (எள்) பிண்ணாக்கும் கிடைக்கும்.

ஆகையினால்

உலகில் பொருந்தி இருக்கும் பாம்பினை எள் என்றே சொல்லுக.

விளக்கவுரை

சிலேடை என்பது மாறுபட்ட இருவேறு பொருள்களை ஒன்றென்பது போலச் சாமர்த்தியமாகக் கூறுவது. இப்பாடலில் பாம்பு, எள் என்ற இருவேறு பொருள்களைக் காளமேகப்புலவர் சாமர்த்தியமாக ஒன்று என்பது போலக் கூறுகிறார்.

இலக்கணம்

ஓது - முன்னிலை ஒருமை ஏவல்வினைமுற்று

குடம் + அத்து + அடையும் = குடத்தடையும்

போது + ஏ + இரையும் = போதேயிரையும்

பாம்பு + எள் + எனவே = பாம்பெள்ளெனவே

பயிற்சி

இப்பாட்டில் உள்ள வினைமுற்றுக்களை எழுது.

## 6. சீட்டுக் கவி

கவிதை வடிவிலே எழுதப்படும் கடிதம் சீட்டுக் கவி எனப்படும்.

திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் சீலத்திரு சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அவர்களைத் தரிசித்து மீண்ட மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளை அவர்கள் எழுதிய 'சூர்வந்து' எனத் தொடங்கும் கவிதைக் கடிதம் இங்குப் பாடமாக உள்ளது.

## ஆசிரியர் வரலாறு

வேதநாயகம் பிள்ளை அவர்கள் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த மாயூரம் என்ற ஊரில் நீதி மன்றத்து நடுவர் (முன்சீப்) வேலை பார்த்தவர். இவர் கத்தோலிக்க கிறித்தவ சமயத்தைச் சார்ந்தவர். சர்வ சமய சமரசக் கீர்த்தனை, நீதி நூல் முதலிய நூல்களை இயற்றியவர்.

## சொற்பொருள்

சூர் வந்து வணங்கும் – சூரபன்மன் முதலிய அசுரர்களும் வந்து வணங்கும்
மேன்மைசிறப்பினையுடைய சுப்பிரமணிய தேவே – சுப்பிரமணியக் கடவுள் போன்றவரே
நேர்வந்து – நேராகவந்து
நின்னைக்கண்டு – தங்களைத் தரிசித்து
நேற்றுராத்திரியே – நேற்றிரவே
மீண்டேன் – திரும்பினேன்
ஊர் வந்து சேர்ந்தேன் – ,
என்றன் உளம் – என்மனம்
வந்து சேரக்காணேன் – (தங்களிடம் தங்கிவிட்டபடியால்) வந்துசேரவில்லை
ஆர் வந்து சொல்லினும் – (அதுஇங்கே இருப்பதாக) யார் வந்து சொன்னாலும்
கேளேன் – நான் ஒப்புக் கொள்ள மாட்டேன் (ஆகையால்)
அதனை இங்கு அனுப்புவாயே – அம்மனத்தை இங்கே என்னிடம்அனுப்பி அருள வேண்டுகிறேன்.

## பொழிப்புரை

சூரபன்மன் முதலிய அசுரர்களும் வந்து வணங்கும் சிறப்பினைஉடைய சுப்பிரமணியக்கடவுள்போன்றவரே! நேராக வந்து தங்களைத் தரிசித்து நேற்றிரவே திரும்பினேன். ஊர்வந்து சேர்ந்தேன். என்மனம் தங்களிடம் தங்கிவிட்டபடியால் வந்து சேரவில்லை. அது இங்கே இருப்பதாக யார் வந்து சொன்னாலும் நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். அம்மனத்தை இங்கே என்னிடம் அனுப்பி அருள வேண்டுகிறேன்.

## கருத்துரை

சுப்பிரமணியக் கடவுள் போன்றவரே! என் மனம் தங்களிடம் மிகவும் ஈடுபாடு கொண்டுள்ளது.

### விளக்கவுரை

திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் அவர்கள் சுப்பிரமணியக் கடவுளைப் பெயராலும், அருளாலும் ஒத்திருப்பவர். எனவே, 'சூர்வந்து வணங்கும் மேன்மைச் சுப்பிரமணிய தேவே!' என விளித்துக் கவிஞர் பாடியுள்ளார்.

கடிதங்கள் எழுதும் போது முதலில் விளி இருக்கும். இக் கடிதத்தில் 'தேவே!' என்பது விளி.

### இலக்கணம்

தேவே - விளி வேற்றுமை; தேவு முதல் வேற்றுமை

மீண்டேன்; சேர்ந்தேன் - தன்மை ஒருமை இறந்த கால வினைமுற்றுக்கள்

காணேன்; கேளேன் - எதிர்மறை வினைமுற்றுக்கள்

## 7. சொல் நயம்

'இம்பர்வான்' என்று தொடங்கும் இப்பாடலை இயற்றியவர் அந்தகக் கவி வீரராகவர். இப் பாடல் பாணனும் (இசைப் பாடல் பாடும் இனத்தவனும்) பாணியும் உரையாடுவதாக அமைந்தது.

### ஆசிரியர் வரலாறு

பெயர்: அந்தகக் கவி வீரராகவ முதலியார்
தந்தை: வடுக நாத முதலியார்
ஊர்: பூதூர் (செங்கற்பட்டு மாவட்டம்)
கல்வி கற்ற ஊர்: பொற்களந்தை
மரபு: சைவ வேளாளர்

இயற்றிய நூல்கள்: திருக்கழுக்குன்றப் புராணம், திருக்கழுக்குன்ற உலா, கீழ் வேளூருலா, திருவாரூர் உலா, சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ் முதலியன

காலம்—கி. பி. 16 ஆம் நூற்றுண்டு

குறிப்பு—இவர் குருடராகவே இருந்து கவிதைகள் பாடியமையால் அந்தகக் கவி எனப்பட்டார்.

(அந்தகம்—குருடு)

## சொற்பொருள்

பாணி - பாணன் மனைவி யானவள்

பாணு நீ-பாணனே ! நீ

இம்பர், வான் - இவ்வுலகத்தையும் வான் உலகத்தையும்

எல்லை-தனது புகழுக்கு எல்லையாக உடைய

இராமனையே பாடி-இராமவள்ளலையே பாடி

என் கொணர்ந்தாய்-என்ன பரிசில் கொண்டு வந்தாய்

என்ருள்-என்று கேட்டாள்

வம்பதாம் களபம் என்றேன்-(பாணனுகிய நான், யானை என்பதைக் குறிப்பதற்கு) புதிதாகிய களபம் என்றேன்

பூசும் என்ருள்-(அவள் சந்தனம் என்று பொருள் கொண்டு) உடம்பிலே பூசிக்கொள்ளுங்கள் என்ருள்

மாதங்கம் என்றேன்-(பிறகு நான் யானையைக் குறிக்கும் சொல்லாகிய) மாதங்கம் என்று சொன்னேன்

யாம் வாழ்ந்தேம் என்ருள்-(அவள் மிக்க பொன் என்று பொருள் கொண்டு) நாம் வறுமையிலிருந்து தப்பித்தோம் என்ருள்

பம்பு சீர்வேழம் என்றேன்-(யானையைக் குறிக்கும் வேருெரு சொல்லாகிய) மிக்க சிறப்பை உடைய வேழம் என்று சொன்னேன்

தின்னும் என்ருள்-(அவள் கரும்பு என்று பொருள் கொண்டு) சாப்பிடுங்கள் என்ருள்

பகடு என்றேன் - (யானையைக் குறிக்கும் பிறிதொரு சொல்லாகிய) பகடு என்று சொன்னேன்

பழனந் தன்னை உழும் என்ருள் (அவள் எருது என்றுபொருள கொண்டு) வயலை உழுங்கள் என்ருள்

கம்பமா என்றேம்-(யானையைக் குறிக்கும் இன்னெரு சொல்லாகிய) கம்பமா என்று சொன்னேன்

நல்களி ஆம் என்ருள்-(அவள் கம்புமாவு) என்று பொருள்கொண்டு) நல்ல களி ஆக்கலாம் என்ருள்

கைம்மா என்றேன்-(யானையை மட்டும் குறிக்கும் சொல்லாகிய)கைம்மா என்று சொன்னேன்

சும்மாக் கலங்கினுளே -(அச் சொல்லுக்கு வேறு பொருள் இன்மையினல் பெற்ற பரிசிலை உணர்ந்து) ஒன்றும் பேசாது மனக்கலக்கம் அடைந்தாள்.

## பொழிப்புரை

பாணி, பாணனே! நீ இவ்வுலகத்தையும் வானுலகத்தையும் தனது புகழுக்கு எல்லையாகவுடைய இராமவள்ளலைப் பற்றிக் கவிதை பாடி, என்ன பரிசில் கொண்டு வந்தாய்? என்று கேட்டாள். பாணனாகிய நான், யானை என்பதைக் குறிப்பதற்குப் புதியதாகிய களபம் என்றேன். அவள் சந்தனம் என்று பொருள் கொண்டு, உடம்பிலே பூசிக்கொள்ளுங்கள் என்றாள். பிறகு நான் யானையைக் குறிக்கும் மற்றொரு சொல்லாகிய மாதங்கம் என்று சொன்னேன். அவள் மிக்க பொன் என்று பொருள் கொண்டு, நாம் வறுமையிலிருந்து பிழைத்தோம் என்றாள். நான் யானையைக் குறிக்கும் வேறொரு சொல்லாகிய வேழம் என்று சொன்னேன். அவள் கரும்பு என்று பொருள் கொண்டு, சாப்பிடுங்கள் என்றாள். நான் யானையைக் குறிக்கும் பிறிதொரு சொல்லாகிய பகடு என்று சொன்னேன். அவள் எருது என்று பொருள்கொண்டு வயலை உழுங்கள் என்றாள், நான் யானையைக் குறிக்கும் மற்றொரு சொல்லாகிய கம்பமா என்று சொன்னேன். அவள் கம்பு என்ற தானியத்தின் மாவு என்று பொருள் கொண்டு நல்ல களி ஆக்கலாம் என்றாள். நான் யானையைமட்டும் குறிக்கும் சொல்லாகிய கைம்மா என்று சொன்னேன். அச் சொல்லுக்கு வேறு பொருள் இல்லாமையால் பெற்ற பரிசிலை உணர்ந்து பாணி மனக்கலக்கமடைந்தாள்.

## விளக்கவுரை

இராமன் என்ற வள்ளலைப் பாடிய பாணன் யானையைப் பரிசிலாகப் பெற்றான். அவன் மனைவி 'என்ன பரிசில் பெற்றாய்' என்று கேட்டாள். களபம்,

மாதங்கம், வேழம், பகடு, கம்பமா என்ற சொற்களால் தான் பெற்ற பரிசிலைக் கூறினன். அவள் அவற்றிற்கு உரிய வேறு பொருள்களையே எண்ணி மகிழ்ந்தாள். கடைசியில் கைம்மா என்றான். அச்சொல்லுக்கு வேறு பொருள் எதுவும் இல்லை. யானை என்பதே பொருள். உடனே கணவன் பெற்ற பரிசில் யானை என்பதை உணர்ந்து கொண்டாள். வீட்டிலே வறுமை மிக்கிருக்கும் போது யானையை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று அவள் திகைத்தாள்.

பாணன் கூறிய சொற்களுக்கெல்லாம் அவன் மனைவி வேறு பொருள் கூறிக் கொண்டு வருகிறாள். இதிலிருந்து அவள் மிக்க அறிவு படைத்தவள் என்று அறியலாம்.

## இலக்கணம்

கொணர்ந்தாய் — முன்னிலை ஒருமை வினைமுற்று

பாண — விளி வேற்றுமை; பாணன் என்னும் முதல் வேற்றுமையின் ஈறுகெட்டு அயல் நீண்டு விளி வேற்றுமை ஆயிற்று

பாணன்—ஆண்பால்; பாணி— பெண்பால்

வாழ்ந்தோம் — தன்மைப் பன்மை இறந்த கால வினைமுற்று

கலங்கினள் — பெண்பால் ஒருமை இறந்த கால வினைமுற்று

பூசும் — முன்னிலை ஏவல் வினைமுற்று.

## பயிற்சி

பூசும் — என்பது போன்று இப்பாடலில் உள்ள வினைமுற்றுக்கள் இரண்டினை எடுத்துக் கூறு.

## 8. மடக்கு அணி

மடக்கணி என்பது வந்த சொல்லும் வந்த சீரும் மடக்கி வரும் அணி.

இப்பாடலை இயற்றியவரும் அந்தகக் கவி வீர ராகவ முதலியார் ஆவார். ஆனால் பாடபுத்தகத்தில் கவித்தலம் வேலையர் என்றிருக்கிறது.

### சொற் பொருள்

சோனையும் காத்து - கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்து மழையையும் தடுத்து
நல் ஆனையும் காத்து - அதனால் நல்ல பசுக்களையும் காப்பாற்றி
துரோபதைதன்- (துரியோதனாதியர் துகில் உரிந்து மானபங்கம் செய்தபோது) திரௌபதியினுடைய
தானையுங்காத்து-சேலையையும் காப்பாற்றி
அடைந்தானையும் காத்து - சரணாகதியடைந்த விபீஷணனையும் காப்பாற்றி
தடத்து - மிதிலைக்குச் செல்லும் வழியிலே
அகலிமானையும் காத்து - அகலிகை என்றபெண்ணையும் சாபம் தீர்த்துக் காப்பாற்றி
அனுமானையுங் காத்து - அனுமானையும் காப்பாற்றி
மடுவில்வீழும் - முதலை வாயில் அகப்பட்டுக்குளத்தில் வீழ்ந்த
ஆனையும் - கஜேந்திரன் என்ற யானையையும்
காத்தவனே -காப்பாற்றிய இறைவனே (இவ்வாறெல்லாம் காத்த உனக்கு)
எனைக் காப்பது - என்னைக் காப்பாற்றுவது
அரிது அல்லவே - கடினமானது அன்று.

### பொழிப்புரை

கோவர்த்தனகிரியைக் குடையாகப்பிடித்து மழையையும் தடுத்து அதனால் நல்ல பசுக்களையும் காப்பாற்றித் துரியோதனாதியர் துகிலுரிந்து மானபங்கம் செய்தபோது திரௌபதியினுடைய சேலையையும் காப்பாற்றிச் சரணாகதியடைந்த விபீஷணனையும் காப்பாற்றி மிதிலைக்குச் செல்லும் வழியிலே அகலிகை என்னும்

பெண்ணைச் சாபந்தீர்த்துக் காப்பாற்றி அனுமானையுங் காப்பாற்றி, முதலை வாயில் அகப்பட்டுக் குளத்தில் வீழ்ந்த கஜேந்திரன் என்ற யானையையும் காப்பாற்றிய இறைவனே! என்னைக் காப்பாற்றுவது உனக்குக் கடினமானது அன்று.

கருத்துரை

பசுவையும், துரோபதையையும், விபீஷணனையும், அகலிகையையும், கஜேந்திரன் என்னும் யானையையும் காத்தவனே! உனக்கு என்னைக் காப்பது எளிதே!

விளக்கவுரை

1. ஆனைக்காத்தது : இது கண்ணனாகத் திருமால் அவதரித்தபோது நடந்த நிகழ்ச்சி. கண்ணன் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்தான். மழை வந்து விட்டது. பசுக்களின் மேல் மழைநீர் படாமல் இருப்பதற்காகக் கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்தான்.

2. துரோபதையின் தானையைக் காத்தது: இதுவும் கண்ணனாகத் திருமால் அவதரித்த போது நடந்த நிகழ்ச்சி. பஞ்ச பாண்டவர்களின் மனைவியாகிய துரோபதையைக் கௌரவர்கள் எனப்படும் துரியோதனாதியர் மானபங்கப் படுத்துவதற்காக அரசவையில் அவள் ஆடையை உரியத் தொடங்கினர். அவள் கோவிந்தா, கோவிந்தா என்று அரற்றினாள். அப்பொழுது கண்ணன் பகைவர்கள் துகிலை உரிய உரிய அவளுக்குத் துகில் தந்து அவள் மானத்தைக் காத்தான்.

3. அடைந்தானைக் காத்தது : இது திருமால் இராமனாக அவதரித்தபோது நடந்த நிகழ்ச்சி. இராமனுக்கும் இராவணனுக்கும் போர் தொடங்கியது.

இராவணனின் உடன்பிறந்தவர்களுள் ஒருவனுகிய விபீடணன் போருக்கு வந்தான். ஆனுல் அவன் போர் செய்யாமல் அறத்தின் பக்கமே நிற்பேன் என்று கூறி இராமனை அடைக்கலம் அடைந்தான். அவ்வாறு அடைக்கலம் அடைந்த விபீடணனை இராமன் காத்தான்.

4. அகலிகையைக் காத்தது : இதுவும் இராமாவதார நிகழ்ச்சியே. அகலிகை ஒருமுனிவரின் சாபத்தால் கல்லாகக் கிடந்தாள். இராமபிரான் மிதிலைக்குச் செல்லும் வழியிலே, அவன் பாதத்தூசுபட்டு அவள் மீண்டும் பழையபடி பெண்ணுருவம் அடைந்தாள்.

5. அனுமானைக் காத்தது : இதுவும் இராமாவதார நிகழ்ச்சியே. இராமன் வாயுமகனுகிய அநுமானைத் தன் மீளா அடிமையாகக் கொண்டு, அவனுக்கு அழியா வரம் கொடுத்தான்.

6. ஆனையைக் காத்தது : இது திருமாலாகவே செய்த அருள் விளையாடல். கஜேந்திரன் என்னும் யானை முதலையால் இழுக்கப்பட்டு மடுவில் ஆழ்ந்து கொண்டு இருக்கும்பொழுது, 'நாராயணு!' என்று பலமுறை விளித்தது. உடனே திருமால் அம்முதலையைக் கொன்று, கஜேந்திரனைக் காத்தார்.

மடக்கு : இப்பாடலில் நல்லானை, ஆனை எனவும், தானை, அடைந்தானை எனவும், மானை, அனுமானை எனவும், வந்த சொல்லும் சீரும் மடக்கி வந்தமையால் இது மடக்கணியாயிற்று.

இலக்கணம்

காத்தவனே – விளி; காத்தவன் – முதல்வேற்றுமை
காத்தவன் – வினையாலணையும் பெயர்

# வினா-விடை

## 1. கல்விச் சிறப்பு

1. கல்வியின் சிறப்பை ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் எவ்வாறு விளக்குகிறான் ?

'பிறப்பில் ஒரேதன்மையினர் ஆகிய உடன் பிறந்தவருள்ளும் கல்விச்சிறப்பின் காரணமாகத் தாயும் மனம் மாறுவாள்; ஒரு குடும்பத்தில் பிறந்த பலருள்ளும் வயதால் மூத்தவனை 'வருக' என்று சொல்லாமல் அக்குடும்பத்தினருள் கல்வி அறிவுடையவன் சென்ற வழியிலேயே அரசனும் செல்வான்; வேறுபாடு செய்யப்பட்ட அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற நாற் குலத்தினருள்ளும் கீழ்க் குலத்தில் பிறந்தவன் ஒருவன் கற்பானாயின் மேற்குலத்தில் பிறந்த ஒருவனும் அக்கற்றவனிடம் சென்று வழிபடுவான்' என்று கல்வியின் சிறப்பை ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் விளக்குகிறான்.

2. கல்வி கற்கும் முறை பற்றி ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்ன கூறுகிறார் ?

'தன் ஆசிரியருக்குப் பொருள் முட்டுப்பாடுநேர்ந்த பொழுது உதவிபுரிந்தும், அவருக்கு மிகுந்தபொருளைக் கொடுத்தும், வழிபட்டு நிற்றலை வெறுக்காமலும் கற்றல் நன்று' என ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன் கூறுகிறார்.

## 2. நாரை விடுதூது

நாரையிடம் தம் மனைவிக்குச் சத்தி முற்றப் புலவர் விடுத்த செய்திகள் யாவை?

'நாரையே! நாரையே! சிவந்த கால்களை உடைய நாரையே! பனையின் பழத்திலிருந்து முளைத்து எழு

கின்ற நீண்ட கிழங்கினைப் பிளந்ததுபோலக் கூர்மை யான பவளம்போலச் சிவந்த வாயினைஉடையநாரையே! நீயும் உன்னுடைய மனைவியும் தெற்குத் திசையில் உள்ள குமரித்துறையில் குளித்து வடக்குப் பக்கத்திற் குச் செல்வீர்களானால் எமது ஊராகிய சத்திமுத்தத் தில் உள்ள குளத்தில் தங்கி, மழை நீரால் ஈரமான சுவர்களின் மேலுள்ள வேயாத கூரையிலே பல்லி சொல் வதை ஆராய்ந்தபடியே என் வருகையை எதிர்பார்த்து இருக்கும் என் மனைவியைக் கண்டு, 'எம் அரசனாகிய வழுதி மாறன் என்னும் பாண்டியனின் மதுரையில் உடுக்கும் உடையில்லாமல், வாடைக் காற்று வீசுவதால் உடல் மெலிந்து, கைகளினால் உடலை மூடிக் கால்களி னால் உடலின் மேலே தழுவிப் பெட்டிக்குள் இருக்கும் பாம்பைப்போலப் பெருமூச்சு விடும் உன் வறிய கணவனை நாங்கள் பார்த்தோம் என்று கூறுங்கள்' என்று நாரையிடம் தம் மனைவிக்கு இச் செய்திகளைச் சத்திமுற்றப் புலவர் விடுக்கிறார்.

## 3. சீதக் காதியின் வள்ளன்மை

'எட்டி பழுத்தென்ன? ஈயாதார் வாழ்ந்தென்ன?' என்னும் பழமொழியைத் தழுவிப் படிக்காசுப் புலவர் பாடிய பாடலைத் தெளிவுபடுத்துக.

'எட்டி மரம் காய்க்காவிட்டால் என்ன இழப்பு ஏற்படும்? காய்த்தால் தான் என்ன பயன் ஏற்படும்? ஒன்றும் இல்லை. அதைப் போலத் தருமம் செய்யாத அற்பர்கள் வாழ்ந்தால் என்ன பயன்? இறந்துபோனால் தான் என்ன?' என்பதே, 'எட்டி பழுத்தென்ன? ஈயாதார் வாழ்ந்தென்ன?' என்னும் பழமொழியின் கருத்தைத் தழுவிப் படிக்காசுப் புலவர் பாடிய பாடலின் கருத்தாகும்.

## 4. திருக்குற்றால மலைவளம்

குற்றால மலைவளத்தைக் குறத்தி எவ்வாறு கூறுகிறாள் ?

'ஆண் குரங்குகள் பழங்களைக் கொடுத்துப் பெண் குரங்குகளோடு இனிமையாகக் கொஞ்சும். அப்பெண் குரங்குகள் கீழே இறைக்கும் பழங்களுக்காக விண் உலகில் உள்ள குரங்குகள் வருந்திக் கேட்கும். குறவர்கள் பார்வையைச் செலுத்தித் தேவர்களைக் கூப்பிடுவார்கள். வான வழியில் செல்லும் சித்தர்கள் அடிக்கடி வந்து வாழ வைக்கும் ஆற்றல் படைத்த பல்வகைச் சித்திகளை மூலிகைகளால் செய்வர். தேன் அருவி என்னும் நீர்வீழ்ச்சியின் அலை உயர்ந்து ஆகாயத்தின் வழியிலே பாயும். அது அவ்வாறு பாய்வதனால் சூரியனது தேர்க்குதிரையின் கால்களும் தேரின் ஒற்றைச் சக்கரமும் சறுக்கும். இவ்வகையான வளங்களைக்கொண்ட இளைய சந்திரனை அணிந்த சடை அழகினை உடைய குற்றால நாதரின் திருக்குற்றாலத்தில் உள்ள திரிகூடம் என்னும் மலை எங்களுடைய மலை ஆகும்' என்று குற்றாலமலையின் வளத்தைக் குறத்தி கூறுகிறாள்.

## 5. இரட்டுற மொழிதல்

உற்றிடும் பாம்பு எள் எனவே ஓது – எவ்வாறு ?

உலகில் பாம்பானது எள்ளுக்குச் சமமாகும் என்று காளமேகப்புலவர் சிலேடையாகக் கூறுகிறார்.

பாம்பானது படமெடுத்து ஆடிக் குடத்துள் (பெட்டியுள்) புகும். அவ்வாறே படம் எடுத்து ஆடும்போதே சீறும். குடத்திலிட்டு மூடி பின் அதைத்திறந்து பார்த்

தால் தனது தலையை எடுத்துக் காட்டும். அது ஓடி தலைப்பகுதியை அடையுமானால் ஒருவிதப் பரபரப்பு உண்டாகும். பிளவுபட்ட நாக்கும் அதற்கு உண்டு.

எள்ளானது செக்கில் ஆட்டப்பட்டு எண்ணெய்க் குடத்திலே அடைக்கப்படும். செக்கிலே ஆட்டும் போதே இரைச்சல் ஒலியை உண்டாகும். எண்ணெய் வைத்திருக்கும் குடத்தின் மூடியை அசையாமல் திறந் தால் பார்ப்பவர்கள் முகம் அதில் தெரியும். தலையில் ஊற்றினால் பரபர என்று தேய்க்கப்பெறும். (எள்) பிண்ணாக்கும் கிடைக்கும்.

ஆகையால் பாம்பானது எள்ளுக்குச் சமமான தென்றே சொல்லுக எனக் காளமேகப்புலவர் கூறுகிறார்.

## 6. சீட்டுக் கவி

சீலத்திரு சுப்பிரமணிய தேசிகருக்கு மாயூரம் வேதநாயகம் பிள்ளை எழுதிய கவிதைக் கடிதத்தின் பொருளை வரைக.

'சூரபன்மன் முதலிய அசுரர்களும் வந்துவணங்கும் சிறப்பினை உடைய சுப்பிரமணியக் கடவுள் போன்ற வரே! நேராக வந்து தங்களைத் தரிசித்து நேற்று இரவே திரும்பினேன்; ஊர் வந்து சேர்ந்தேன்; என் மனம் தங்களிடம் தங்கி விட்டபடியால் அது என்னுடன் வந்து சேரவில்லை. அது இங்கே என்னுடன் வந்து இருப்பதாக யார் சொன்னாலும் நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். அம்மனத்தை இங்கே அனுப்பியருள வேண்டுகிறேன்' என்பது சுப்பிரமணிய தேசிகருக்கு மாயூரம் வேதநாயகம் பிள்ளை எழுதிய கவிதைக்கடிதத் தின் பொருளாகும்.

## 7. சொல் நயம்

யானையைப் பரிசில் பெற்ற பாணனுக்கும் அவன் மனைவி பாணிக்கும் நிகழ்ந்த உரையாடலை வரைக.

பாணி, பாணனை நோக்கிப் 'பாணனே! இராம வள்ளலைப் புகழ்ந்து பாடி என்ன பரிசில் கொண்டு வந்தாய்' என்றாள். பாணன் யானையைக் குறிப்பதற்குக் 'களபம் பெற்றுவந்தேன்' எனப் பதில் கூறினான். அவள் களபம் என்பதற்குச் சந்தனம் என்று பொருள் கொண்டு, 'உடம்பிலே பூசிக் கொள்ளுங்கள்' என்றாள். பிறகு பாணன் யானையைக் குறிக்கும் மற்றொரு சொல் லாகிய 'மாதங்கம்' என்றான். பாணி அச்சொல்லுக்கு 'மிக்க பொன்' என்று பொருள் கொண்டு 'நாம் வறுமையிலிருந்து பிழைத்தோம்' என்றாள். பாணன் யானையைக் குறிக்கும் வேறொரு சொல்லாகிய 'வேழம்' என்றான், பாணி அச் சொல்லுக்குக் 'கரும்பு' என்று பொருள் கொண்டு 'சாப்பிடுங்கள்' என்றாள், பாணன் யானையைக் குறிக்கும் சொல்லாகிய 'பகடு' என்றான். பாணி அச் சொல்லுக்கு 'எருது' என்று பொருள் கொண்டு 'வயலை உழுக' என்றாள். பின்னர்ப் பாணன் யானையைக் குறிக்கும் இன்னொரு சொல்லாகிய 'கம்பமா' என்றான். பாணி அந்தச் சொல்லுக்குக் 'கம்பு' என்ற தானியத்தின் மாவு என்று பொருள் கொண்டு 'நல்ல களி ஆக்கலாம்' என்றாள். இறுதியில் பாணன் யானையை மட்டும் குறிக்கும் 'கைம்மா' என்றான். அச் சொல்லுக்கு வேறு பொருள் இல்லை. எனவே பாணி தன் கணவன் யானையைப் பரிசில் பெற்று வந்தான் என அறிந்து ஒன்றும் பேசாது திகைத்தாள்.

## 8. மடக்கு

திருமால் காத்தவை யாவை?

திருமால், கிருஷ்ணுவதாரத்தில் கோவர்த்தன மலையைக் குடையாகப்பிடித்து மழையைத் தடுத்து அதனுல் நல்ல பசுக்களைக் காத்தான்; துரியோதனுதியர் துரோபதையின் துகில் உரிந்து மானபங்கம் செய்யும் பொழுது அவள் சேலையைக் காப்பாற்றினுன்; இராமாவதாரத்தில் சரணுகதி அடைந்த வீபிஷணனைக் காப்பாற்றினுன்; மிதிலைக்குச் செல்லும் வழியிலே அகலிகையையும் சாபம் தீர்த்துக் காப்பாற்றினுன்; அனுமானையும் காப்பாற்றினுன்; திருமாலாகவே, நின்று முதலைவாயில் அகப்பட்ட கஜேந்திரன் என்னும் யானையையும் காப்பாற்றினுன்.

---

# உரைநடைப் பகுதி

## [ வினு விடையும் பிற குறிப்புக்களும் ]

---

### 1. அமரர் நேருவின் அமுத வாக்கு

அருஞ் சொல் விளக்கம்: சுதந்தர வாழ்வு—உரிமை யுடன் வாழ்தல்; விதி–ஊழ்வினை; நள்ளிரவு–நடு இரவு; பழைமை × புதுமை; யுகம்—நீண்டதொரு காலம்; புனிதமான–தூய்மையான, உயர்ந்த; தருணம்–சமயம்; அர்ப்பணம்–உரிமையாக வழங்குதல்; இலட்சியம்–குறிக்கோள்; நூறு + ஆண்டு — நூற்றாண்டு, வெற்றி × தோல்வி.

வழுவுதல்–தவறுதல். ஆற்றல்–சக்தி; அடிப்படை–காரணம்; சாதிப்பது–நிறைவேற்றுவது; வாய்ப்பு–அனுகூலம்; இன்னல்–துன்பம்; சிந்தனை செலுத்து வோம்–எண்ணுவோம்; நல்லது × கெட்டது.

அயராது – சோர்வு அடையாமல்; சூளுரைக்கும்–சபதம் கூறும்; அகற்ற–நீக்க; பணி–தொண்டு; கனவு × நனவு; இயலாதபடி–முடியாதபடி;

பிணைந்துள்ளது–சேர்ந்துள்ளது; போர் × அமைதி; நிறைவு × குறைவு; மகத்தான–மிகப்பெரிய; வளமாகும்–செழுமை மிகுந்த.

தழைக்க–செழிக்க, வளர; ஜனதிபதி–குடியரசுத் தலைவர்.

#### வினு—விடை

1. சுதந்தர வாழ்வைப் பற்றி நேரு கூறியவை யாவை ?

நெடுங்காலம் அடிமைப்பட்டிருந்த இந்திய நாடு இன்று புத்துயிர் பெற்றுப் புது வாழ்வு பெறுகின்றது. இந் நிகழ்ச்சி வரலாற்றில் மிக அரியதொரு நிகழ்ச்சி யாகும்.

இந்நாளில் நாம் கொள்ளவேண்டிய உறுதி "இந்திய நாட்டிற்கும் இந்திய மக்களுக்கும் தொண்டு செய்யவும், உலக மக்கட் சமுதாயத்திற்கு உழைக்கவும் நம்மை அர்ப்பணம் செய்வோமாக" என்று கூறுகிறார்.

**2. வரலாறு தொடங்கிய காலத்திற்கு முற்பட்ட இந்தியாவைப்பற்றி நேரு வெளியிட்ட கருத்துக்கள் யாவை ?**

வரலாறு தொடங்கிய காலந்தொட்டே இந்தியா தன் இலட்சிய வாழ்க்கையைத் தொடங்கியது. வெற்றி தோல்வி, நல்லது, கெட்டது முதலான நிகழ்ச்சிகள் நிகழ்ந்த பொழுதும் இந்தியா தன் நல்வழியிலிருந்து — இலட்சியப் பாதையிலிருந்து தவறியதில்லை; உறுதியும் ஆற்றலும் அளித்த உயர்ந்த குறிக்கோள்களை மறந்ததில்லை.

**3. சுதந்தரம் பெற்ற இந்திய மக்கள் ஆற்றவேண்டிய கடமைகளை நேரு எவ்வாறு விளக்குகிறார் ?**

சுதந்தரம் பெற்ற இந்திய மக்கள் வறுமை, அறியாமை, நோய் நொடிகள், ஏற்றத் தாழ்வுகள் ஆகியவற்றை அகற்றப் பாடுபடவேண்டும். இந்தியர் ஒவ்வொருவரின் துன்பத்தையும் துயரத்தையும் போக்குவதையே நாம் நமது இலட்சியமாகக் கொள்ள வேண்டும். துன்ப துயரங்கள் உள்ள வரையில் நம் பணிகள் தொடர்ந்து நடைபெறவேண்டும்.

அரும்பாடுபட்டு உழைத்து நம் கனவுகளை நனவாக்க வேண்டும். இந்தியாவின் நலனுக்கு மட்டுமின்றி, அனைத்துலக நலனுக்காகவும் நாம் உழைக்க வேண்டும் என்று அமரர் நேரு விளக்குகின்றார்.

**4. நேரு இந்திய மக்களை வேண்டிக் கொள்வது யாது?**

நம்பிக்கையுடனும் மனவுறுதியுடனும் ஒத்துழைக்க வேண்டும் என வேண்டிக்கொள்கிறார்.

**5. அரசியல் நிர்ணய சபை உறுப்பினர் எடுத்துக் கொள்ள வேண்டிய உறுதி மொழியை எழுது.**

'இந்திய மக்கள் அல்லற்பட்டுப் பல தியாகங்களைச் செய்து, சுதந்தரம் அடைந்த இந்த நல்ல நேரத்தில் இந்திய அரசியல் நிர்ணயசபை உறுப்பினனாகிய நான்......... பழைமையான இந்நாடு உலகில் தனக்குரிய இடத்தைப் பெறுதல், உலக அமைதியும் மனித குல நலன்களும் தழைக்கப் பணி புரிதல் ஆகிய உயர்ந்த இலட்சியங்களோடு இந் நாட்டுக்கும் இம் மக்களுக்கும் தொண்டு செய்ய என்னை யானே பணிவோடு ஆளாக்கிக் கொள்கிறேன்' என்பதே அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்கள் எடுத்துக் கொள்ளும் உறுதிமொழி யாகும்.

## 2. மனந்திருந்திய மைந்தன்

**அருஞ்சொல் விளக்கம் :** இளமை தொட்டு – இளம் பருவம் தொடங்கி; தன்னலம் – சுய நலம்; பறித்து – பிடுங்கி; பரந்த–பரவிய; துய்ப்பதற்கு–அனுபவிப்ப தற்கு; கிணற்றுத் தவளை–(வெளி உலகைப்பற்றி அறியாமல்) கிணற்றில் வாழும் தவளை; கெடுமதி– கேடு அடைவதற்கு உரிய புத்தி; சிறை–சிறைச்சாலை.

கேளிக்கை–விளையாட்டு; அற்ற குளத்தின்–நீர் வற்றிய குளத்திலிருந்து; அறும் – நீங்குகின்ற; அறிவீனம்–புத்தி இல்லாத்தனம்.

மதியிழந்து–அறிவு இழந்து; தவறு–குற்றம்; மன்றாடுவேன்–கெஞ்சிக் கேட்பேன்: ஏவலர்–வேலை ஆட்கள்; பணியாள்–வேலைக்காரன்.

சேய்மை–தூரம்; கசிந்து–வருந்தி; மார்புற– மார்புடன் பொருந்தும்படி; இழைத்துவிட்டேன்– செய்துவிட்டேன்; கதறிய–வாய்விட்டு அழுத.

நீராடு–தன் வினை; நீராட்டு–பிறவினை.

## வினு-விடை

**1. செல்லப்பன் என்பவன் யார்? அவன் வீட்டை விட்டு வெளியேறக் காரணமென்ன?**

செல்வக் குடியில் பிறந்தவன் செல்லப்பன் ஆவான். அவன் தன் தந்தையாரால் செல்வமாக வளர்க்கப் பட்டான். அவன் தன்னலம் மிகுந்தவனுய்த் தான் விரும்பியபடியே எந்தக் காரியத்தையும் செய்து வந்தான். தன் விருப்பம்போல வாழ்வதற்குத் தன் தந்தை தடையாக இருப்பதாகக்கருதினுன். மேலும் தீய நண்பர்கள் பலர் அவனுக்குக் கெடுமதி கற்பித்தனர். அதனுல் செல்லப்பன் வீட்டைச் சிறை என்று கருதி வீட்டை விட்டு வெளியேறினுன்.

**2. செல்லப்பனின் நண்பர்கள் அவனுக்குக் கூறிய கெடுமதி என்ன?**

செல்லப்பனின் நண்பர்கள் தீயகுணம் உடைய வர்கள். அளவுக்கு மீறி அவனைப் பாராட்டிப் பணம் பறித்தனர். தந்தைக்கு அடங்கி வாழும் வாழ்வு வாழ்வு ஆகாது என்றும், இப் பரந்த உலகம் தாம் விரும்பியபடி இன்பம் துய்ப்பதற்கேஎன்றும், கிணற்றுத் தவளைபோல் வாழ்வது கூடாது என்றும் கெடுமதி கற்பித்தனர்.

**3. செல்லப்பன் சீரழிந்து வறியவனுனதற்குக் காரணம் என்ன?**

வீட்டை விட்டு வெளியேறிய செல்லப்பன், தீய நண்பர்களுடன் சேர்ந்து மனம்போன போக்கில் வாழத் தொடங்கினுன். அவன் கேளிக்கைகளிலும், தீய வழிகளிலும், வீண் ஆடம்பரத்துடன் கைப் பொருளைச் செலவழித்தான். அதனுல் வறியவன் ஆனுன்.

**4. சீரழிந்த செல்லப்பன் தன் தவறுகளையுணர்ந்து சிந்தித்ததென்ன ?**

சீரழிந்த செல்லப்பன் தன் தவறுகளை உணர்ந்தான். அவன் மனத்தில் தெளிவு பிறந்தது. "அந்தோ ! யான் தீயவர் சேர்க்கையால் மதியிழந்து கெட்டேன் ! என் தந்தையார் இல்லத்தில் ஏவலர் பலர் இன்புற்று வாழ, யான் பசியால் வாடுகிறேன் ! இனி என் தந்தையிடம் செல்வேன்; நான் செய்த பெருந்தவற்றை மன்னித்தருளும்படி மன்றுடுவேன்; அவரிடம் பணியாளாக அமர்ந்து காலங்கழிப்பேன்" என்று சிந்தித்து உறுதி பூண்டான்.

**5. திரும்பிவந்த செல்லப்பன் தன் தந்தையின் கால்களில் வீழ்ந்து மன்றுடியதென்ன ?**

திரும்பிவந்த செல்லப்பன் தன் தந்தையின் கால்களில் வீழ்ந்து, " தந்தையீர், யான் என் கெடுமதியால் கடவுளுக்கும் தங்களுக்கும் தவறிழைத்து விட்டேன். என் மனம்போனபடி திரிந்து கெட்டேன்! அருள்கூர்ந்து என்னை மன்னியுங்கள்! என்னைத் தங்கள் மைந்தனென்று எண்ணவும் யான் தகுதியற்றவன். என்னைப் பணியாளனுகவே ஏற்றுக்கொள்ளுங்கள் " என்று கண்ணீர்விட்டு மன்றுடினுன்.

**6. தம் காலடியில் வீழ்ந்து கதறிய செல்லப்பனுக்குத் தந்தையார் கூறிய ஆறுதல் மொழிகளை எழுதுக.**

தம் காலடியில் வீழ்ந்து கதறிய செல்லப்பனைத் தந்தையார் கை கொடுத்து எழுப்பி " மகனே, காணுமற்போன நீ திரும்பிவந்ததே போதும்! இனி வருந்தாதே! வா" என்று அன்புடன் ஆறுதல் கூறி அணைத்துக்கொண்டார். பின்னர் தம் ஏவலாளரைக்கொண்டு செல்லப்பனை நீராட்டி, நல்லுடை அணிவித்துப் பெருவிருந்து செய்தார்.

## 3. மகாதேவ கோவிந்த ரானடே

**அருஞ்சொல் விளக்கம் :** எய்தி–அடைந்து; அத்தகைய–அப்படிப்பட்ட; இணையிலா–ஒப்பில்லாத; பதி–ஊர்; பேறு – செல்வம்; இயைய – பொருந்தும்படி; இன்னல்–துன்பம்; சமயத்தோர்–மதத்தினர்; சீரிய–சிறந்த; (சீறிய – கோபித்த); நீத்தார்–நீக்கினர்; (இறந்தார்.)

**பிரித்தெழுதுதல் :** வடவிந்தியா–வடக்கு + இந்தியா; கருத்தூன்றி–கருத்து + ஊன்றி; நல்லாசிரியர்-நன்மை + ஆசிரியர்; (நல்ல + ஆசிரியர்); வழக்கறிஞர்-வழக்கு + அறிஞர்; நுண்ணறிவு–நுண்மை + அறிவு; சட்டக்கலை–சட்டம் + கலை. பேரூக்கம்–பெருமை + ஊக்கம்.

| தன் வினை — பிற வினை | தன் வினை — பிற வினை |
|---|---|
| கற்றார் —கற்பித்தார் | எழுதி—எழுதுவித்து |
| நடந்து—நடத்தி | நீக்கு —நீக்குவித்து |
| செய்து —செய்வித்து | வாழ்ந்தாள்— வாழ்வித்தள் |

### வினா-விடை

**1. மகாதேவ கோவிந்த ரானடே என்பவர் யார்? அவர் வரலாற்றைச் சுருக்கி வரைக.**

உலகில் தோன்றிய நன் மக்கள் பலருள் கல்வி அறிவு ஒழுக்கங்களில் தலைசிறந்து விளங்கித் தமக்கென வாழாமல் பிறர்க்கென வாழ்ந்து பெரும்புகழ் எய்தியவர் மகாதேவ கோவிந்த ரானடே யாவார்.

இவர், வட இந்தியாவில் 'நாசிக்கு மாவட்டத்தில்' 'நியாத்து' என்னும் பதியில் 18—1—1842 இல் பிறந்தவர்; இவருடைய பெற்றோர்கள் கோவிந்த ராவ்—கோபிகா பாய் ஆவர்.

இவர் இளமையில் கல்வியில் கருத்தூன்றிக் கற்றுவந்தார். பின்னர் 1862 ஆம் ஆண்டில் பி. ஏ. பட்டம் பெற்றுத் தாம் பயின்ற கல்லூரியிலேயே ஆசிரியர் பணி ஆற்றி வந்தார். ஆசிரியத் தொழில் புரிந்து கொண்டே எம்.ஏ. பட்டமும் பெற்ருர். பின்னர் சட்டக் கலையில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ருர். அதனுல் நீதிபதி பதவி ஏற்ருர்.

இரானடே நாட்டுப்பற்று மிகக் கொண்டு நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்கு உழைத்தார். விதவை மணத்தை ஆதரித்துப் பேசினுர். இந்திய தேசியக் காங்கிரசை ஏற்படுத்தப் பெரிதும் முயன்ருர். இன்னல்கள் பல தோன்றிய பொழுதும் சளையாது உழைத்தார். இவர்; கடவுள் ஒருவரே என்ற கொள்கையினை யுடையவர்.

இவர் எழுதிய பல நூல்களுள் 'மராட்டியர் வரலாறு' பாராட்டுதலுக்கு உரியதாகத் திகழ்கிறது. இவர் 1901ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்தார்.

2. இரானடேயின் குணநலன்களை எழுதுக.

இரானடே தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த பெரியார் ஆவார்; நாட்டுப்பற்று மிகவும் கொண்டவர்; விதவை மணத்தை ஆதரிப்பவர்; ஏழை எளியவர்களுக்கு வாய்த்த நண்பர்; அவர்களிடம் அன்புடன் பழகும் பண்புடையவர்; மதக்கொள்கையில் பொது நோக்குடையவர்; கடவுள் ஒருவரே என்ற கொள்கையுடையவர்; சமூக சீர்திருத்தத்தில் அக்கறை கொண்டவர்; நாட்டு முன்னேற்றத்திற்காக அரும்பாடு பட்டவராவார்.

# 4. குதிரைகள் புலம்பல்

**அருஞ்சொல் விளக்கம் :** மானிடர்–மனிதர்; திருவுளங் கொள்வீர் - எண்ணிப் பாருங்கள்; செவிசாய்த்தல் – கேட்டல். பெரும்புவி – பெரிய உலகம்; பேதை – அறிவில்லாதவன்; பிழை–குற்றம். வம்பு–வீண் பேச்சு; இழைப்பது–செய்வது; சேணம்–குதிரை மேல் பூட்டுதற்குரிய மெத்தை; வேதனை – துன்பம்; ஆவி – உயிர்; திண்ணிய – உறுதியான; சாத்திரம் - நீதிநூல்; மாட்டுதல்– பூட்டுதல்; வெருட்டுதல் – அச்சுறுத்துதல்; வேனில் – வெயிற்காலம்; காணம் – கொள்ளு; சித்தம் – மனம்; போதனை – கற்பனை; கடன் – கடமை.

## வினா-விடை

**1. குதிரைகள் புலம்புதலை உரைநடையில் எழுதுக.**

உலகத்தில் துன்புற்ற குதிரைகள் வருந்திப் புலம்பிக் கூறியதாகக் கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் கற்பனை செய்து கூறுகின்றார்.

1. நூல்களைக் கற்றுத் தெளிவடைந்த நல்ல மக்களே எங்களைக் காப்பதற்காகவே இவ்வுலகில் தோன்றிய பெரியோர்களே சிறிதும் அறிவில்லாத நாங்கள் கூறும் மொழியைச் செவி சாய்த்துக் கேட்குமாறு உங்களை வேண்டிக் கொள்கிறோம்.

2. எங்களுக்கு இறைவன் எல்லோரையும் போலவே வாயைப் படைத்துள்ளான். ஆனால் எங்களுக்கு மட்டும் நீங்கள் இரும்புக் கடிவாளங்களை வாயில் பூட்டுகின்றீர்களே. இப்பெரிய உலகில் உங்களுக்கு எளியவர்களாகிய நாங்கள் செய்த குற்றந்தான் என்ன?

3. வம்புகள் பேசும் வாயைப் பூட்டி வைப்பது முறையாகும். ஆனால் உங்களையே நம்பி இருக்கும் எங்களுக்குத் துன்பம் செய்வது நல்ல பெரியோர்களின் செயல் ஆகுமா ?

4. வெள்ளிப் பூண் கட்டப்பட்ட சேணத்தை எங்களுக்கு இட்டால் அது மனக் கவலையைக் கொடுக்காது இருக்குமா? நீங்கள் அள்ளிப்போடும் சிறு அளவு புல்லுக்காக எங்கள் உயிரைக் கொள்ளை கொள்ளுதல் அழகாகுமா ?

5. உறுதியான லாடங்களை எங்கள் குளம்புகளில் ஏன் அடித்தல் வேண்டும்? அந்த லாடம் பூமியில் பட்டு நெருப்புப் பொறி தோன்றும்படி எம்மை ஏன் ஓட்டுகின்றீர்கள் ? நீங்கள் வேறு புண்ணியம் எதுவும் செய்ய வேண்டாம். எங்கள் போக்கிலே விட்டு விட்டாலே அதுவே பெரும் புண்ணியமாகும்.

6. நீங்கள் எங்களைப் பிடித்து எங்கள் முதுகின் மேல் ஏறிக்கொண்டு எங்களைப் பறவைகள் போலப் பறக்கச் செய்கின்றீர்கள். நீங்கள் சிறிதும் இரக்க மில்லாதவர்களாய்க் கற்ற சாத்திரங்களின் பயன் இது தானு.

7. வண்டியிலே கொண்டுபோய் எங்களைக் கட்டிக் காலை முதல் மாலை வரையிலும் எங்களைத் தட்டி ஓட்டுகின்றீர்கள் எங்களுள் யாரேனும் கால் காயம்பட்டு நொண்டினாலும் எம்மைவிடாமல் ஏன் உடல் புண்படும்படி, வண்டியில் பூட்டித் துன்பம் படும்படி, அடித்து ஓட்டுகின்றீர்கள் ?

8. நாங்கள் மேடுபள்ளமானாலும் ஓடவேண்டும். கொடிய வெயிலிலும் மழையிலும் ஓடவேண்டும். காடு, செடிகளில் ஓடவேண்டும். இந்தத் துன்பங்களை நாங்கள் யாரிடம் போய்ச் சொல்லுவது ?

9. எங்களுக்குத் தினமும் நீங்கள் ஓர் உழக்குக் கொள்ளு கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக ஆயிரம் வேலைகள் எம்மிடம் வாங்குகின்றீர். 'ஏழைக்கு இரங்கு' என்ற நீங்கள் படித்த நீதிமொழியை ஏன் மறந்து விட்டீர்கள்?

10. ஆகையால் நீங்கள் எம்மிடம் மனம் இரங்க வேண்டும். எம்மை நன்றாகக் காக்கவேண்டும். புத்தர் பெருமான் அருள் புரிந்த போதனையை என்றும் போற்றிக் காக்கவேண்டும் என்று உங்களை நாங்கள் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறோம்.

## 5. சேக்கிழார்

**அருஞ்சொல் விளக்கம் :** மரபு – குலம்; மண்டலம் – ஒருநாட்டின்பிரிவு; பாலறாவாயர்-திருஞானசம்பந்தரின் பெயர்; ஐயம்தீர – சந்தேகம் நீங்க; வேழம் - யானை; மேதக்க – மேன்மை பொருந்திய; பூழியர் கோன் – பாண்டியன்; தெள் + நீர் = தெண்ணீர்; தெளிந்த நீர்; அவகாசம் – ஓய்வு; முறி – ஓலைத்துண்டு; ஞாலம் – உலகம்; தூக்கார் – கருதாதவராய்; நயம் – நன்மை; வேணி – சடை; அம்பலம் - சபை.

**பிரித்து எழுதுக :**

தென்னாடு = தெற்கு + நாடு
வயற்றொண்டை = வயல் + தொண்டை
நன்னாடு = நன்மை + நாடு
சிலம்படி = சிலம்பு + அடி

### வினா-விடை

**1. சேக்கிழாரின் பெற்றோர் யார் ?**

சேக்கிழாரின் பெற்றோர் வெள்ளியங்கிரி முதலியார், அழகாம்பிகை அம்மையார் ஆவார்.

**2. சேக்கிழாரின் இயற்பெயர் யாது? அவர் தம் இளமைப் பருவ நிகழ்ச்சிகளை விவரி.**

சேக்கிழாரின் இயற்பெயர் அருண்மொழித் தேவர் என்பது ஆகும். இவர் இளமையில் சிறந்த ஆசிரியரை யடுத்துத் தமிழ் இலக்கியங்களையும், இலக்கணங்களை யும் ஐயம்தீரப் பயின்று தமிழ்ப் புலமையில் சிறந்து விளங்கினர்.

**3. சோழ மன்னருக்கு உண்டான ஆவல் யாது? அதற்கு அவர் என்ன செய்தார்?**

தொண்டை நன்னடு சான்றோர்களை உடையது என்ற ஔவையாரின் கருத்தின் உண்மையை ஆராய வேண்டும் என்று ஆவல் கொண்டார்.

அதற்காக அவர் ஓர் ஓலை முறியில் "இவ்வுலகத் தைக் காட்டிலும் மிகப் பெரியது எது? கடலினும் பெரியது எது? மலையைக் காட்டிலும் மிகப் பெரிய தோற்றமுடையது எது?" என்ற மூன்று வினுக்களை எழுதி அவற்றிற்கு விடை பெற்று வரும்படி தூது வனைத் தொண்டைமண்டல மன்னரிடம் அனுப்பி வைத்தார்.

**4. அருண் மொழித் தேவர் அரசன் வினுக்களுக்கு அளித்த விடை யாது?**

(i) "காலத்தினல் செய்த நன்றி சிறிது எனினும் ஞாலத்தின் மானப் பெரிது"

(ii) "பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின் நன்மை கடலின் பெரிது"

(iii) "நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம் மலையினும் மாணப்பெரிது" என்பன அரசன் வினவிய வினுக்களுக்கு உரிய விடை ஆகும்.

5. சேக்கிழார் பெரிய புராணம் இயற்றக் காரணம் என்ன ?

அருண்மொழித் தேவர் சோழ மன்னரின் முதல் அமைச்சராகப் பணி புரிந்து சோழ நாட்டைச் சீரும் சிறப்பும் உடையதாகச் செய்து வந்தார். அக்காலத்தில் அநபாய சோழ மன்னன் சமண மதப் பெருங் காப்பிய மாகிய சீவக சிந்தாமணியைப் பெரிதும் விரும்பிப் படித்துப் பாராட்டி வந்தான். இதனை உணர்ந்த அருண்மொழித்தேவர் மன்னருக்குச் சைவ நூல்களில் விருப்பம் உண்டாக்கக் கருதி சைவப் பெரும் தொண்டர்களாகிய நாயன்மார்களின் வரலாறு களை நாள்தோறும் சொல்லி வந்தார். அவ்வரலாறு களைக் கேட்டு மகிழ்ந்த மன்னவன் நாயன்மார்களின் வரலாற்றைப் புராணமாகப் பாடி அருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். சேக்கிழாரும் அரசன் விருப்பப்படி சிதம்பரத்தை அடைந்து நடராசப் பெருமானை வணங்கிச் சிவனடியார்களின் வரலாற்றைப் பாடி முடித்து அதற்குத் திருத்தொண்டர் புராணம் என்று பெயர் சூட்டி அரங்கேற்றினர். மன்னவன் அருண்மொழித் தேவரைப் பாராட்டினன். அறிஞர் அனைவரும் 'தொண்டர் சீர் பரவுவார்' என்று பெயர் சூட்டிச் சிறப்பித்தனர்.

6. அருண்மொழித்தேவர் பெற்ற சிறப்புப் பெயர்கள் யாவை ?

அருண்மொழித்தேவர் அரசரால் அமைச்சர் பதவி அளிக்கப்பெற்றுச் சிறப்பிக்கப்பட்ட பொழுது 'உத்தம சோழ பல்லவன்' என்று சிறப்பிக்கப்பட்டார். பெரிய புராணம் பாடியபொழுது மக்களால் அவர் 'தொண்டர் சீர்பரவுவார்' என்று பாராட்டப்பட்டார். சேக்கிழார் குடியைச் சிறப்புறச் செய்தமைக்காக அவரை அனைவரும் குடிப்பெயரால் 'சேக்கிழார்' என்று அழைத்தனர்.

**7. பெரியபுராணம் இயற்றுதற்கு உதவியாய் இருந்த நூல்கள் யாவை?**

பெரியபுராணம் பாடுதற்கு உதவியாய் இருந்த நூல்கள் 1. சுந்தரமூர்த்தி சுவாமிகள் இயற்றிய திருத்தொண்டத் தொகை 2. நம்பியாண்டார் நம்பி இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதி. 3. மூவர் இயற்றிய தேவாரங்கள் முதலியன.

## 6. நான் கண்ட குற்றாலம்

**அருஞ்சொல் விளக்கம்:** சுற்றுலா- சுற்றுப்பயணப்; துயில் கொண்டோம் – தூங்கினேம்; நிவந்து- உயர்ந்து; வையம் – உலகம்; மலை முகடு – மலையுச்சி; கவின்–அழகு.

### வினு-விடை

**1. மாணவர்கள் குற்றால மலையில் கண்ட காட்சிகளைச் சுருக்கி எழுதுக.**

விண்ணை முட்டுவது போல உயர்ந்து நிற்கும் திருக்குற்றாலமலை மாணவர்கள் கண்களுக்கு இன்ப விருந்து அளித்தது. அம்மலையில் ஓங்கி வளர்ந்துள்ள மரங்களும் பச்சைப்பசேலெனச் செழித்து வளர்ந்துள்ள செடிகொடிகளும் கண்ணைக்கவரும் வண்ணத்துடன் நன்மணம் கமழும் மலர்களும் மாணவர்களை இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தின.

வானரங்கள் மரக்கிளைகளில் தாவித்தாவி விளையாடின. வானம்பாடிகள் இசைபாடித் திரிந்தன. கருமேகங்கள் மழைமுகட்டில் தவழ்ந்து சென்றன. இவற்றை மாணவர்கள் கண்டும் கேட்டும் களிப்புற்றனர். இம்மலையிலிருந்து நீர்வீழ்ச்சியாய் 60 மீ. உயரத்திலிருந்து விழும் வடவருவியின் நீர் சித்ராநதி என்னும் பெயரோடு பாய்ந்து சென்று பொருநை ஆற்றுடன் கலக்கின்றது. இவ்வருவியின் நீரில் குளிப்

பது மாணவர்களுக்குப் பெரும் மகிழ்ச்சியைத் தந்தது. குற்ருலத்தில் காணப்படும் ஏனைய சண்பக அருவி, தேனருவி, ஐந்தருவி என்னும் அருவிகளும் கண்ணுக்குப் பெருவிருந்து அளித்தன.

இங்கு இளந் தென்றல் சாரல் மழையை இன்பமாகத் தூற்றிக்கொண்டு இருக்கிறது. இங்கு வெப்பம் என்பதே இல்லை. இக் காட்சிகளைக் கண்டு களித்த மாணவர்கள் "வையந் தன்னில் ஈதன்றி வாழும் சொர்க்கம் வேறு உண்டோ" என்று அடிக்கடி பாடிக் களித்தனர்.

### 2. குற்ருல மலையில் உள்ள அருவிகள் யாவை?

குற்ருல மலையில் உள்ள அருவிகள் வட அருவி, சண்பக அருவி, தேனருவி, ஐந்தருவி என்பனவாம்.

### 3. குற்ருலநாதர் ஆலய வரலாறு :

குற்ருலத்தில் திருமால் கோயில் இருந்ததாகவும் அதனை அகத்தியர் வழிபாடு செய்யும்பொழுது திருமால் உருவத்தைச் சிவலிங்கமாக மாற்றி அமைத்தார் என்றும் புராண வரலாறு கூறுகிறது.

### 4. குற்ருலக் குறவஞ்சி-இது யாது?

குற்ருலமலையில் எழுந்தருளி இருக்கும் இறைவன் மீது திரிகூடராசப்பக்கவிராயர் என்ற புலவர் இயற்றி உள்ள நூல் குற்ருலக் குறவஞ்சி ஆகும். இது, மலை நாட்டு மக்களாகிய குறவர்களைப் பற்றிய செய்திகளை இறைவன் புகழோடு அமைத்துக் கூறப்படுவதாகும். சந்த நயத்தோடு எளிதில் பாடி மகிழ்வதற்கு உரிய ஒரு நூலாகும்.

### பயிற்சி

நீ கண்டுவந்த ஓர் இயற்கைக் காட்சிகள் நிறைந்த இடத்தைப் பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுதுக.

## 7. உழைப்பின் உயர்வு

[சொற்பொழிவு]

### வினா-விடை

**1. உழைப்பு எத்தனை வகைப்படும் ? அவை யாவை ?**

உழைப்பு உள உழைப்பு, உடல் உழைப்பு என இரண்டு வகைப்படும்.

**2. உள உழைப்பின் சிறப்பினைப் புலப்படுத்துக.**

இவ்வுலகில் காணும் அரிய படைப்புக்களுக்கு எல்லாம் உள உழைப்பே காரணமாகும். உள உழைப்பால் தான் இயல், இசை, நாடகம் உள்ளிட்ட நூல்கள் அனைத்தும் இவ்வுலகில் மலர்ந்துள்ளன. அறிவுலக மேதைகள் எனப்படும் பெருமக்கள் உள உழைப்பால் தான் உயர்ந்தவர்கள் ஆவார்கள். அவர்களின் புகழ்க் கொடியை உயர்த்தியது அவர்களது உள உழைப்பே ஆகும்.

**3. உடல் உழைப்பால் விளையும் நன்மைகளைத் தொகுத்து வரைக.**

உடல் உழைப்பு உலக வாழ்வை இன்ப வாழ்வாக விளங்கச் செய்கிறது. ஒவ்வொரு நாளும் நமக்குப் புதுமை புதுமையான நலங்களைக் கணக்கின்றிச் செய்து தருவது உடல் உழைப்பே ஆகும்.

காடுகளை அழித்து நாடாக்கியதும், சதுப்பு நிலத்தை விளை நிலம் ஆக்கியதும், உணவுப்பொருளை உண்டாக்கி உணவை அளித்ததும் உடல் உழைப்பே ஆகும். மக்களின் நாகரிக வாழ்வை மலரச்செய்வதும் உடல் உழைப்பே.

மண்ணாலும், மரத்தாலும், உலோகங்களாலும் தட்டு முட்டுச் சாமான்களைச் செய்து தருவது உடல்

உழைப்பே. விலங்குகள் போல் குகைகளில் வாழ்ந்த மக்களை உயர்ந்த மாளிகையில் வாழச் செய்ததும் உடல் உழைப்பே.

நிலத்தை அகழ்ந்து நிலக்கரியை எடுத்துத் தொழிற் சாலைகளுக்குத் துணைபுரிவதும் உடல் உழைப்பே. பொன், வெள்ளி முதலான கனிச்செல்வங்களை அகழ்ந்து எடுத்து அவற்றை மக்களுக்குப் பயன்படச் செய்ததும் உடல் உழைப்பே.

காட்டிலுள்ள மரங்களை வெட்டிக் காகிதம் முதல் கப்பல் வரை ஆக்கி உதவுவதும் உடல் உழைப்பே ஆகும். ஆறுகளைக் கடக்கப் பாலம் அமைப்பதும் நீரை தேக்கிவைத்துப் பயன்படுத்த நீர்த்தேக்கங்கள் உண்டாக்கி மக்களுக்கு நலம் புரிவதும் உடல் உழைப்பே ஆகும். சுருக்கமாக, ஆக்கவும் அழிக்கவும் வல்ல அணுவின் ஆற்றலை உலகிற்கு அளித்ததும் உடல் உழைப்பே ஆகும். உழைப்பினுல் மக்களுக்கு உண்டாகாத நன்மைகள் எதுவும் இல்லை என்றே கூறலாம்.

**4. உழைப்பைச் சிறப்பிக்க வந்த பழமொழிகளைக் குறிப்பிடுக.**

(i) உழைப்பு என்னும் நாலெழுத்து மந்திரமே உலகை உயர்த்துவது.

(ii) 'ஆக்கம் அதர்வினுய்ச் செல்லும் அசைவிலா, ஊக்கம் உடையான் உழை.' (குறள்)

(iii) 'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ' என்பன உழைப்பின் சிறப்பை விளக்க வந்த பழமொழிகள் ஆகும்.

**பயிற்சி**

**வாக்கியங்களில் அமைக்க :**

கருத்தூன்றி, ஆக்கம், தட்டு முட்டு, மேதை

1. மாணவர்கள் நாளும் தங்கள் பாடங்களைக் கருத்தூன்றிப் படித்து வந்தால் மேன்மை அடைவார்கள்.

2. கலங்காத ஊக்கம் உடையவன் இடத்தில் ஆக்கம் பலவும் தாமே வந்து அடையும்.

3. வீட்டில் இருக்கும் தட்டுமுட்டுச் சாமான்கள் அனைத்தும் உழைப்பினால் ஏற்பட்டவை ஆகும்.

4. நம் தமிழ் நாட்டில் அறிவுலக மேதைகள் பலர் தோன்றி இருக்கின்றனர்.

## 8. சத்திரபதி சிவாஜி

[இப்பாடலைப் பாடியவர் தேசிய கவி சுப்பிரமணிய பாரதியார் ஆவார். இவர் எட்டையபுரத்தில் பிறந்தவர். பெற்றோர் சின்னசாமி அய்யர். இலக்குமி அம்மை. காலம் கி. பி. 19 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி ஆகும்.]

**அருஞ்சொல் விளக்கம்:**

சத்திரபதி – அரசன்; வந்தேமாதரம் – என்தாய் நாடே வணங்குகிறேன்; துணுக்குற–அஞ்சும்படி; இடித்திடும் – தாக்குகின்ற; பதாதி – காலாள் வீரர்; செற்றிடும் – அழிக்கும்; திறல் – ஆற்றல், வல்லமை; தறுகண்–அஞ்சாமை, கொடுமை; மிலேச்சர்–நாகரிக மற்றவர்; நவை – குற்றம்; புலையர் – கீழ்மக்கள்; மொக்குள்–நீர்க்குமிழி; பதம்–வீரபதவி, வீரசுவர்க்கம்.

### வினா-விடை

**சத்திரபதி சிவாஜியின் ஊக்க உரைகளை உரைநடையில் எழுதுக.**

சேனைத் தலைவர்களே! மதியிற் சிறந்த அமைச்சர் களே! பகைவர்கள் அஞ்சும்படியாக எதிர்த்துத்தாக்கும் தரைப்படை வீரர்களே! மேலும் பலவகையிலும் பகை வர்களைப்பற்றி அழிக்கும் வீரத்திலகங்களே! நீங்கள் அனைவரும் வாழ்வீர்களாக! உங்களுக்கு அன்னை பவானி அருள் புரிவாளாக.

பாரத நாடு, நம் பழம் பெரு நாடு. நீவிர் அனைவரும் அதன் புதல்வர் ஆவீர்கள். இந் நினைப்பை நீங்கள் என்றும் மறவாதிருத்தல் வேண்டும். நம் தாய்த் திருநாட்டைக் கொடுமை வாய்ந்த நாகரிக மற்ற அயல் நாட்டினராம் பேய்த் தன்மை கொண்ட வர்கள், நமது பெருந்தன்மையும், ஈகைக் குணமும், ஞானமும் அறியாதவர்களாய்க் குற்றமே செய்யும் தன்மையுடையவர்களாய், அக் காலத்தில் தேவர்களை அடக்க எழுந்த அரக்கர்களைப் போன்று, இப்பொழுது படைகளுடன் வந்து நமக்குத் துன்பம் செய்கின்றார்கள்.

நாம் இதைப் பொறுத்துக்கொண்டு வாழ்வது வாழ்க்கையாகுமா? நம்மை அடக்கி ஆளும் இக் கீழ் மக்களின் அடிகளைப் பணிந்துதான் நீங்கள் வாழப் போகிறீர்களா? தோன்றியழியும் நீர்க்குமிழிபோன்று மக்களாகப் பிறந்தவர்கள் மடிவது உறுதி. நம் தாய்த் திருநாட்டை அழிக்கத்தோன்றிய இம் மிலேச்சர் களை அழித்திட விரும்பாமல் வாழ்கின்ற வாழ்வும் வாழ்வாகுமா? போர்க்களத்தில் மடிந்து வீரசுவர்க்கம் அடைய விரும்பாத கீழ்மக்கள் என் கண்முன் நில்லா மல் சென்றுவிடுவீர்களாக. என் தாய்நாடே! உன்னை யான் வணங்குகின்றேன்.

## 9. ஆறடி நிலம்

### வினா-விடை

**1. கயற்கண்ணி, கோமளம் இவர்கள் வாழ்க்கை முறையினை விவரி.**

கயற்கண்ணி தமக்கை; கோமளம் தங்கை. இருவரும் எளிய குடும்பத்தில் பிறந்தவர்கள்; எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்கள். கயற்கண்ணி குணசீலர் என்ற செல்வரை மணந்து நகரத்தில் செல்வ வாழ்க்கை நடத்தி வந்தாள்.

கோமளம் ஒரு சிற்றூரில் மணவழகர் என்ற உழவருக்கு மனைவியாகி, ஆடம்பரமின்றி அமைதியான வாழ்க்கை நடத்தி வந்தாள்.

**2. கயற்கண்ணி கோமளம் - இவர்களின் உரையாடலைத் தொகுத்து எழுதுக.**

கயற்கண்ணியும் கோமளமும் ஒரு நாள் கீழ்க் கண்டவாறு உரையாடிக் கொண்டிருந்தனர்.

கயற்கண்ணி: கோமளா! உன் வாழ்க்கை மிக வருந்துதற்குரியது. நாங்களோ விதம் விதமான உணவுகளை உண்கிறோம்; அழகான உடைகள் உடுத்துகிறோம்; அருமையான அணிகளை அணிகின்றோம்; மாடிவீட்டில் செல்வ வாழ்க்கை நடத்தி வருகிறோம். இப்பட்டிக் காட்டில் உனக்கு அந்த வசதிகள் இல்லை. உன் வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா?

கோமளம்: அக்கா! எங்கள் வாழ்க்கை எளியதாயினும் கவலையற்ற வாழ்க்கையாகும். ஆடம்பர வாழ்க்கை அல்லல் தரும் ஆதலின் இவ்வாழ்க்கையே எனக்கு இன்பந்தருவதாகும். ஆடம்பர வாழ்க்கை நடத்துபவர் தமது செல்வத்தை வீண் வழிகளில் செலவிட்டு வறியவராகி வருந்துவர். தேவைக்கு ஏற்ற உணவும், உடையும், இருக்க இடமும், இருப்பதால் எனக்கு இவ் வாழ்க்கையே மிகவும் பிடித்தமாக உள்ளது.

கயற்கண்ணி : தங்காய்! நீ வாழ்க்கை இன்பம் அறியாதவள். வருங்கால வாழ்க்கைக்கு ஏற்றவாறு பொருள் தேட வேண்டும். அதற்கு உங்களுக்குள்ள ஒரு காணி நிலம் போதுமானது அன்று; நிறைய நிலம் சேர்க்கவேண்டும்.

**3. மணவழகர் பேராசை கொண்டதற்குக் காரணத்தை விளக்கி வரைக :**

மணவழகர் தம் மனைவி கோமளமும் அவள் தமக்கை கயற்கண்ணியும் உரையாடிக் கொண்டிருந்ததைக் கேட்டார். தாமும் மிகுந்த நிலங்களை வாங்கிப் பயிர் செய்து சிறப்புற்று வாழவேண்டும் என்று எண்ணினார். அத்துடன் அவர் வீட்டிற்கு வந்த விருந்தினரின் சொல்லைக் கேட்டுப் பேராசைகொண்டு தம் வீட்டையும் நிலத்தையும் மாடுகளையும் விற்று அயலூரில் சில காணி நிலங்களையும் ஒரு வீட்டையும் குறைந்த விலைக்கு உழவுமாடுகளையும் வாங்கினார்; இன்ப வாழ்க்கை நடத்தினார்.

ஓராண்டு பருவ மழை தவறியது, ஊரில் பஞ்சம் ஏற்பட்டது. மணவழகர் குடும்பமும் வருந்தியது. அச்சமயம் அவர் வீட்டிற்கு வந்த விருந்தினர் ஒருவர் பேச்சைக் கேட்டு அயலூரில் குறைந்த விலைக்கு நிறைந்த நிலம் வாங்கலாம் என்ற பேராசையால் அயலூர் சென்றார்.

அங்கு அவ்வூர்த் தலைவர் கூறியவாறு அவரிடம் ஐம்பது ரூபாய் கொடுத்துவிட்டு 'ஒரு நாள் நிலம்' பெற விரும்பினார். பேராசையால் நிலத்தை மண்வெட்டியால் நீண்ட தூரம் வெட்டி அடையாளம் செய்து கொண்டே போய்த் திரும்பிவர இயலாமல் விரைந்து ஓடி வந்து, மூச்சுத் திணறிக் கீழே வீழ்ந்து உயிர் துறந்தார். இவ்வாறு பேராசையால் பெருநிலம் பெற முயன்று முடிவில் ஓரடி நிலமும் இல்லாமல் உயிர் துறந்தார்.

4. ஒரு நாள் நிலம் - விளக்கி வரைக.

ஒருவர் காலையில் புறப்பட்டு மாலைக்குள் எவ்வளவு நிலத்தைச் சுற்றி வர முடியுமோ அவ்வளவு நிலமே ஒரு நாள் நிலமாகும். சூரியன் புறப்பட்டு மறைவதற்குள் ஒருவன் வந்து சேர்கின்ற விரைவைப் பொறுத்தது அந்த நிலத்தின் பரப்பு.

5. 'ஆறடி நிலம்' என்று இப்பாடத்திற்குத் தலைப்பு வரக் காரணம் என்ன ?

இவ்வுலகில் மனிதன் கொள்ளும் ஆசைக்கு அளவே இல்லை. அவன் இவ்வுலகம் முழுவதையுமே தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ள முயல்கின்றான். என்றாலும் அவன் இறக்கும்பொழுது அவனுக்குச் சொந்தமாக இருப்பது அவனை அடக்கம் செய்தற்குரிய ஆறடி நிலமே ஆகும். ஆதலின் இவ்வுலகில் ஒவ்வொருவருக்கும் சொந்தமானது ஆறடி நிலமே என்பதைக் குறிக்கவே இப்பாடத்திற்கு 'ஆறடி நிலம்' என்ற தலைப்பு இடப்பட்டது.

6. எதிர்ப் பதம் [தெரிந்துகொள்]:

எளிய வாழ்வு × செல்வ வாழ்வு
சிற்றூர் × பேரூர்
ஆடம்பரம் × அமைதி
இன்பம் × துன்பம்
குறைந்த × நிறைந்த
நாகரிகம் × அநாகரிகம்
விரித்து × சுருட்டி

7. தன்வினைகளைப் பிறவினையாக்குதல்:

விரிந்து—விரித்து புகுந்து—புகுத்து
வருந்து—வருத்து நடந்து—நடத்து
வளைந்து—வளைத்து மயங்கு—மயக்கு

# 10. ஹென்றி போர்டு

## வினு—விடை

**1. ஹென்றி போர்டின் இளமை வாழ்க்கையை விளக்கு.**

ஹென்றி போர்டு அமெரிக்க நாட்டில் தியர்பார்ன் என்னும் ஓர் ஊரில் எளிய குடும்பத்தில் 30–7–1863 இல் பிறந்தார். குடும்பம் எளிய நிலையில் இருந்தமையால் ஹென்றி போர்டால் உயர் கல்வி கற்க இயலவில்லை. என்றாலும் இவர் இளமையிலேயே பொறிகளை இயக்கு வதில் பேரார்வங் கொண்டார்.

இளமையில் இவர் பாதையைச் செப்பம் செய்யும் பொறி ஒன்றைக் கண்டார். அது முதல் இவர் உள்ளத்தில் 'மோட்டார்' என்னும் உந்து வண்டியைப் பற்றிய எண்ணம் உருவாயிற்று. பழுது பட்ட கடிகாரங்களைச் சீர்படுத்துவதிலும் முயன்று அவர் வெற்றி கண்டார். பொறிகளை ஆராயும் பெருவிருப்பத் தால் அவர் பள்ளியை விட்டு விலகினர்.

பின்னர், அவர் பொறிகளை உண்டாக்கும் தொழிற்சாலை ஒன்றில் சேர்ந்து தொழிற் கல்வி பயின்றார். இரவில் கடிகாரங்களைப் பழுது பார்த்துச் செப்பனிட்டுக் கொடுத்தார்.

16ஆம் வயதில் ஹென்றி போர்டு பாதையைச் சீர் படுத்தும் பொறியை இயக்கும் பணியில் அமர்ந்தார். நாளடைவில் அப்பொறியைப் பழுது பார்க்கவும் சுற்றுக் கொண்டார். அதனை நீராவியால் இயக்க முயன்று அது கைகூடாமையால் பெட்ரோலால் இயங்கக் கூடிய பொறி யொன்றைக் கண்டு பிடித்தார்.

தம் தந்தையார் விருப்பப்படி பொறிகளை இயக்கும் தொழிலைக் கைவிட்டுத் தந்தையார் தந்த மரங்களடர்ந்த நிலப்பரப்பைப் பெற்று, மரம் அறுக்கும் பொறியொன்றால் அந்நிலத்திலிருந்த மரங்களை அறுக்கத் தொடங்கினார்.

மின்சாரக் கம்பெனித் தலைவர் ஒருவர் போர்டின் திறமையை உணர்ந்து அவரைத் தம் கம்பெனியில் திங்கள் ஒன்றுக்கு 45 டாலர் சம்பளத்தில் அமர்த்திக் கொண்டார். போர்டு அத் தொழிற் சாலையில் திறம் பெற உழைத்து வந்தார்.

**2. ஹென்றி போர்டின் முயற்சியால் விளைந்த நலங்களை எழுதுக.**

i. நான்கு குதிரைச் சக்தி உடைய ஒரு மோட்டார் வண்டி 1892 ஆம் ஆண்டு செய்து முடிக்கப்பட்டது.

ii. அடுத்த ஆண்டில் அவர் விருப்பத்திற்கு ஏற்றவாறு மற்றுமொரு வண்டி செய்யப்பட்டது.

iii. குறைந்த விலைக்குப் பல மோட்டார் வண்டிகள் செய்யப் பெற்று விற்கப் பெற்றன.

iv. 1916ஆம் ஆண்டில் ஹென்றிபோர்டு தொழிற் சாலை ஏற்படுத்தப் பட்டு அதில் ஏழை மாணவர் பலரும் தொழிற்கல்வி பயின்று வருகின்றனர்.

v. இப்பொழுது அத் தொழிற்சாலையில் பல வண்டிகள் மின்னல் வேகத்தில் உருவாகி வருகின்றன.

**3. ஹென்றி போர்டின் குண நலன்கள் யாவை?**

ஹென்றி போர்டு எளிய குடும்பத்தில் பிறந்தவரானாலும் சலியாத முயற்சியுடையவர். இளமையிலே பொறிகளை இயக்குவதில் பேரார்வங் கொண்டவர். தந்தையார் சொல்லுக்கு அடங்கி நடப்பவர். தம்

முயற்சிக்குத் தடையேற்படின், அது எவ்வளவு சிறந்த வேலையாக இருந்தாலும் வேண்டாது விலகும்தன்மை வாய்ந்தவர். தம் நாட்டு ஏழை மாணவர்கள் தம்மைப் போன்றே தொழிலறிவு பெற்று உயர்வடைவதில் பெரு விருப்பங்கொண்டவர். அதன்பொருட்டாகத் தொழிற்பள்ளி ஒன்று அமைத்தவர். பொதுமக்கள் நன்மையைப் பெரிதும் கருதுபவர். அதற்காகக் குறைந்த விலையில் மோட்டார் வண்டிகளை அமைத்து வழங்கினர். மேலும் பொதுமக்களுக்காக மருத்துவ நிலையம் ஒன்று அமைத்தும், அறங்கள் பல செய்தும் வந்தார்.

## 11. தெய்வத் திருவருள்

**அருஞ்சொல் விளக்கம் :**

ஓச்சி-செலுத்தி; பரிவு-அன்பு; இருமை-இப்பிறப்பு; மறு பிறப்பு; தணல்–நெருப்பு; கயற்கணி–மீன் போன்ற கண்ணையுடையவள் (மீனட்சியம்மன்); ஆழி–மோதிரம், ஐம்படைத்தாலி-(திருமாலின் ஐந்துபடைகளாகியசங்கு, சக்கரம், வில், வாள், கதை உருவம் அமைந்த) ஆபரணம்; கசிந்தான்–வருந்தினன்; நாத்தூண் நங்கை–கணவனுக்குத் தங்கை; கடிந்து–கோபித்து; புலர்ந்ததும்–விடிந்ததும்; இறுமாப்பு–கர்வம்; கண்டிகை-மணிமாலை; மிடுக்கு-மனவுறுதி; கரந்தனர்–மறைந்தனர்; குறி-பெயர்; ஆணை–கட்டளை.

### வினா–விடை

**1. ஓரரசன் கீழிருக்கும் மக்களுக்கு எவ்வெவ்வகைகளில் துன்பங்கள் நேரிடலாம் ?**

ஓரரசன் கீழிருக்கும் குடிகளுக்கு அம்மன்னனுலும், அவன் அமைச்சர்களாலும், பகைவர்களாலும், கள்வராலும், விலங்குகளாலும் துன்பங்கள் நேரிடலாம்.

2. தனபதி கானேகக் காரணம் என்ன ?

மதுரையில் தனபதி என்னும் வணிகன் சுசீலை என்பாளை மணம் புரிந்து வாழ்ந்துவந்தான். அவன் பெருஞ்செல்வனாக இருந்தும், தனக்கு மக்கட்செல்வம் இல்லாமையால் தன் தங்கை மகனைத் தத்துப்பிள்ளை யாகக் கொண்டு அவனைச் சீராட்டி வளர்த்து வந்தான்.

தனபதியின் தங்கைக்கும், மனைவி சுசீலைக்கும் அடிக்கடி சச்சரவு நிகழ்ந்தது. தனபதி மனைவிக்குப் பரிந்து உடன்பிறந்தவளைக் கடிந்து பேசினான். அவள் தன் தமையனைச் சினந்து "பிள்ளைப்பேறு அற்ற பாவி யாகிய உனக்கு இச்செருக்கு ஏன் ? உனக்கு இரு மைக்கும் நலம் தர யான் என் மைந்தனைத் தத்துக் கொடுத்ததை இதற்குள் மறந்துவிட்டாயா ?" என்று ஏசினாள்.

தனபதி இதைக் கேட்டு மறுபிறவியிலாவது மைந்தனைப் பெறும் தவத்தைச் செய்வேன் என்று மனங் கசிந்து, மனைவியுடன் காட்டிற்குச் சென்றான்.

3. தனபதியின் தத்துப் பிள்ளைக்குப் பங்காளிகள் இழைத்த தீமை யாது ?

தனபதியின் பங்காளிகள் வல்வழக்குத் தொடுத்து, அவன் செல்வம் முழுவதையும் கவர்ந்துகொண்டார்கள்.

4. தனபதியின் தங்கை இறைவனிடம் என்ன விண்ணப் பித்து வந்தாள் ?

தனபதியின் தங்கை பங்காளிகள் இழைத்த கொடுமையை எண்ணி வருந்தியவளாய்த் திக்கற்ற வருக்குத் தெய்வமே துணை என்ற முதுமொழியை நினைந்துச் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோவிலை அடைந்து, இறைவரை வணங்கி. "அனைத்துயிர்க்கும்

இரக்கங் காட்டும் அண்ணலே, பங்காளிகள் இழைத்த இன்னலை நீக்கி எங்களைப் பாதுகாப்பது உனது கடன்'' என்று விண்ணப்பித்து வந்தாள்.

**5. இறைவர் தனபதியின் தங்கைக் கனவில் தோன்றிக் கூறியதென்ன ?**

இறைவர் தனபதியின் தங்கைக் கனவில் தோன்றி, 'அம்மையே, வருந்தாதே! பொழுது புலர்ந்ததும் அப்பங்காளிகளை நீதிமன்றத்திற்கு அழைத்து வா. யாம் நேரில் வந்து உன் வழக்கைத் தீர்ப்போம்' என்று கூறி மறைந்தனர்.

**6. இறைவன் செய்த திருவிளையாடல் யாது ?**

தனபதியின் தங்கை இறைவர் தனக்குக் கனவில் அருளியபடி பங்காளிகளை மறித்து அறங்கூறும் அவையினர் முன் அழைத்தனள். பங்காளிகள் தனபதி தன் தங்கை மகனுக்குப் பொருள் அளிக்கவில்லை என்று கூறினர். அப்பொழுது இறைவர் தனபதியின் வடிவு கொண்டு அறங்கூறவையை அடைந்தனர்.

இறைவரைத் தனபதியே என மருண்ட பங்காளிகள் மனந்தடுமாறித் திகைத்து நின்றனர். அவையை அடைந்த இறைவர் தனபதியின் தங்கையையும் மைந்தனையும் நோக்கி "அந்தோ! உங்களை இந் நிலையில் காணநேரிட்டதே! வருந்த வேண்டாம். யான் அற வழியில்தேடிய பொருளுக்கு அழிவு வாராது'' என்று கூறினர்.

பின்னர் அவையினரை நோக்கி, 'அறிஞர்களே! நீங்கள் நடுவுநிலையில் நின்று வழக்கை நன்கு ஆராய்ந்து, குற்றவாளிகளை ஒறுக்க வேண்டும். என்று வேண்டினர். அவையினரும் வழக்கை ஆராய்ந்து பங்காளிகள் குற்றவாளிகள் என்று தீர்ப்புக் கூறினர்.

பங்காளிகள், 'இவர் தனபதி அல்லர்; ஆதலின் இவர் கூற்றை நம்புதல் கூடாது' என்று வாதாடினர். அதைக் கேட்ட இறைவர், பங்காளிகள் ஒவ்வொரு வரையும் விரலாற் சுட்டி, அவரவர் குடிப்பெயரும், பட்டமும், சுற்றத்தார் பெயரும், குணங்குறி செயல் களும் கூறி விளக்கினர். கேட்ட பங்காளிகள் நடுக் குற்று, ஒவ்வொருவரும் ஒவ்வொரு போக்குக் காட்டி ஓடி ஒளிந்தனர். இறைவரும் திருவுருக் கரந்தார்.

பாண்டிய மன்னனும் தெய்வத் திருவருளை வியந்து பாராட்டினுன். வணிக மைந்தனுக்கு உரிய பொருள் களை அவனிடம் சேர்ப்பிக்குமாறு பங்காளிகளுக்கு ஆணைவிடுத்தனன். தனபதியின் தங்கையும் மைந்தனும் இழந்த பொருளைப் பெற்று இன்புற்று வாழ்ந்தனர்.

7. எதிர்ச் சொல்:

பொறுமை × பொருமை, பகை × நட்பு, கடிந்து × மகிழ்ந்து, அறம் × மறம், செங்கோல் × கொடுங்கோல், மறைதல் × தோன்றுதல்.

| பிழை திருத்தம் : | பிழை | திருத்தம் |
|---|---|---|
| | தரார் | தாரார் |
| | வராது | வாராது |

முதுமொழிகளை வாக்கியத்தில் அமைத்தல்

(i) 'இருதலைக் கொள்ளி எறும்புபோல்'

(ii) 'திக்கற்றவருக்குத் தெய்வமே துணை'

(i) தனபதி தங்கைக்கும் கூற இயலாமல் மனைவி பக்கமும் பேச முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பு போலத் தவித்தான்.

(ii) தெய்வத்திருவருள் என்ற கதையால் 'திக்கற்ற வருக்குத் தெய்வமே துணை' என்பது புலனுகின்றது.

# 12. ஒட்டகத்தை அழித்த காகம்

[இச் செய்யுட் பகுதி பஞ்ச தந்திரத்தில் உள்ளது. இதனை இயற்றியவர் வீரமார்த்தாண்ட தேவர். இவர் காலம் கி. பி. 19ஆம் நூற்றுண்டு.]

## கருத்துரை

1. மணம் வீசுகின்ற மலர்கள் நிறைந்த மரங்கள் அடர்ந்து இருண்டு விளங்கும் ஒரு காட்டில் மதோற் கடன் என்ற சிங்கம் ஆண்டு வந்தது. அதற்கு அமைச்சர்களாக ஒரு நரியும், புலியும், காக்கையும் அமைந்திருந்தன.

2. ஒரு நாள் ஓர் ஒட்டகம் வழிதவறி அக் காட்டை அடைந்தது. அதைக் கண்ட அக் காகம், 'நீ யார்?' எனக் கேட்கவும் ஒட்டகம் தன் வரலாற்றைக் கூறியது. காகம் அதற்கு உறுதி கூறி அதை அழைத்துச் சென்றது.

3. காகம் அவ் வொட்டகத்தை மன்னவனுன மதோற்கடன் முன் கொண்டுபோய்விட்டது. சிங்கமும் அதற்கு அபயங் கொடுத்து 'மந்தானகன்' என்று பெயர் சூட்டி அமைச்சர்களோடு அதனை வைத்துக் கொண்டது.

4. நரியும், புலியும், காகமும் அவ் வொட்டகத் தைத் தம்மை நம்புமாறு கூறி அதனோடு சில நாட்கள் சகோதரர்கள் போல உலகம் போற்ற ஒன்றி வாழ்ந்தன.

5. ஒரு நாள் சிங்கம் நோயுற்று வேட்டை மேற் செல்ல விருப்பமின்றித் தான் இருந்த இடத்திலேயே உணவினைப் பெறத் தன் அமைச்சர்களை நோக்கி அன்புடன் கூறத் தொடங்கியது.

6. 'அமைச்சர்களே! மிகுந்த என் பசிக்கு ஏற்ற இரைதேடிக் கொண்டு வருவீர்களாக' என்று கூறவும் அந்த நான்கும் காடெலாந்திரிந்து, 'எங்கும் இரை கிடைக்க வில்லை' என்று திரும்பி வந்தன.

7. அந் நான்கனுள் காகம் ஒட்டகத்தை நீக்கி, மற்றைய இரண்டையும் தான் கற்ற இரகசிய மொழியில் அழைத்துக் கொண்டு சிங்கத்தை அடைந்தது.

8. 'அரசே! இக்காடெலாம் சுற்றித்திரிந்து துயருற்றோம். தங்களுக்குத் தேவையான இரை கிடைக்க வில்லை. உன்னருளைக்கொண்டு பிழைப்போம் என்று கருதி இங்கு வந்தோம்' என்று மொழிந்தது.

9. அதைக் கேட்ட சிங்கம், 'உங்கள் கருத்து என்ன?' என்று கேட்க, அது, 'ஒட்டகத்தைக் கொன்றால் போதும்' என்று கூறவும், சிங்கம், 'சிவ சிவ! இது மிகவும் பாவமானது' என்று காதுகளைப் பொத்திக் கொண்டது.

10. காகம் அதைக்கண்டு, 'வெற்றி பொருந்திய மன்னவ! இதனைக் கேளுங்கள். மன்னர்களுக்குரிய செயல் இதுவே யாகும். இதுவே நீதியென்றும் யான் கூறுவேன். முன்னர்க் கண்ணபிரான் கூறிய உண்மையும் இது ஆகும்' என்று மேலும் கூறத்தொடங்கியது.

11. 'ஒருவனைக் கெடுத்து ஒரு குடியைக் காக்கலாம்; ஒரு குடியைக் கெடுத்து ஒரு நகரைக் காக்கலாம்; ஒரு நகரைக்கெடுத்து ஒரு பெரிய நாட்டைத் துன்புறாது காக்கலாம்'.

12. 'என்று பாண்டவர்களுக்கு அக் காலத்தில் கண்ணன் நன்றாக எடுத்துச் சொல்லவும், தருமர் அதற்கு இசைந்து, தன் நல்ல மகனைக் களப்பலி யிட்டுப் போரில் வெற்றிபெற்றனர்' என்று கூறியது.

13. அடைக்கலமாக ஏற்றருள வேண்டும் என்று வேண்டி வந்ததற்கு 'அடைக்கலங் கொடுத்துக் காத்த ஒன்றை அதற்கு மாருக அழிப்பது 'நன்றன்று' என்று சிங்கம் கூறவும், காகம், அபயங்கொடுத்த உன்ஞல் அது இறந்துபடாமல்' உன்ஞல் காக்கப்படும் மற்றென்ருல் அதனைக் கொல்வோம்.'

14. என்று காகம் கூறவும் சிங்கம் அதற்கு ஒன்றும் மறுமொழி கூருமல் இருந்தது. அதனை நல்லதாகக் கருதிக் காகம், ஒட்டகம் இருந்த இடத்தை அடைந்தது.

15. நரி 'அரசன் கொடும் பசியால் வருந்துகின்ருர். இனி இங்கு இரை எதுவும் கிடைக்காது. இவ்வுண்மையை நாம் சென்று கூறுவோம்' என்று கூற, அவை நான்கும் சிங்கத்தினிடம் சென்று அடிவணங்கி நின்றன.

16. காகம் சிங்கத்தை நோக்கி, 'அரசே, இக் கானகத்தில் வேறு இரை கிடைக்கவில்லை. ஆதலின் என்னைக் கொன்று நீ உண்பாயாக' என்று சொல்லவும், சிங்கம் அதனைப் பார்த்து, 'என்ன? உன் உடல் மிகச் சிறியது' என்று கூறியது.

17. அப்பொழுது நரி 'அப்படியாஞல் என்னைச் சாப்பிடுங்கள்' என்று கூற, சிங்கம் அதனையும் அவ்வாறே கூறி மறுத்தது. பின்னர், புலி தன்னை அருந்தும்படி கூறியது. அதற்குச் சிங்கம், 'நீயும் என் பசிக்குப் பொருந்திய உணவோ?' என்று மறுத்தது.

18. கலக்கமடைந்த ஒட்டகம் 'நம்மைக் கொல்ல இவர்கள் சூழ்ச்சி செய்துள்ளனர்' என்று கருதி, அதன் முன் விரைந்து சென்று, 'நான் உடல் தசை மிகுந்துள்ளவன்; ஆதலின் என்னை உண்ணுங்கள்' என்று கூறிய அளவில் புலி விரைந்து பாய ஒட்டகம் இறந்தது.

19. சிங்கம் இதன் உண்மையை ஆராய்ந்து அறிந்து சென்று அதன் இரத்தத்தைக் குடித்தது; சிறந்த புலி அதன் மூளையைச் சாப்பிட்டது; நரி ஈரலைச் சுவைத்து உண்டது; எஞ்சியிருந்த காகம் அதன் தசையைத் தின்றது.

20. 'கொடியவர்களோடு யார் கூடி நட்புச் செய்தாலும் அவர் அழிவது உறுதி. ஆதலின் கொடிய வேந்தர்கள் கையால் கொலையுறுவதைவிடப் பெரும் போரில் போரிட்டு உயிர் விடுதல் நீதியாகும்' என்று அவர் கூறுவாரானர்.

## வினு-விடை

1. இக் கதையை உரை நடையில் எழுது.

விடை: கருத்துரையில் அமைந்துள்ளது.

2. இடஞ் சுட்டிப் பொருள் கூறு:

(i) 'பொங்கு வெம்பசியேற் கிரை நல்குமின்'

இடம்: ஒரு காட்டில் மதோற்கடன் என்ற சிங்கம் விலங்குகளுக்கெல்லாம் அரசாய்த் திகழும் நாளில், ஒட்டகம் ஒன்று அங்கு வந்து அடைக்கலம் புகுந்தது. சிங்கம் அதற்கு அபயங்கொடுத்து அதனை அமைச்சர் களில் ஒன்ருக ஏற்றது. அச்சிங்கம் ஒருநாள் நோயுற்று வேட்டைமேற் செல்ல விருப்பம் இல்லாமல் இருந்த இடத்திலேயே இரை வேண்டியது. அப்பொழுது அது தன் அமைச்சர்களை நோக்கி, 'பொங்கு வெம் பசியேற் கிரை நல்குமின்' என்று கூறியது.

பொருள்: 'மிகுந்த பசியால் வருந்தும் எனக்கு ஏற்ற இரை கொடுங்கள்' என்பதாகும்.

(ii) 'மந்தானகற் கொன்றிடின் போதும்'

இடம்: சிங்கத்தின் கட்டளைப்படி இரைதேடச் சென்ற நான்கும், காட்டில் எங்கும் தகுந்த இரை

கிடைக்காமையால் திரும்பிவந்தன. காகம் சிங்கத்தினிடம் தனியே சென்று, 'அரசே, காட்டில் எங்கும் இரை கிடைக்கவில்லை.' என்று தெரிவிக்கச் சிங்கம், 'உங்கள் கருத்துத்தான் யாது' என்று வினவியது. அப்பொழுது காகம், 'மந்தானகற் கொன்றிடின் போதும்' என்று கூறியது.

பொருள் : 'மந்தானகன் என்ற ஒட்டகம் பேருருவம் கொண்டது. ஆகையால் அதனைக் கொன்றால் உங்கள் பசிக்கு அது போதுமானதாகும்' என்பதாகும்.

(iii) 'ஒருவனைக் கெடுத்து ஓர்குடி காக்கலாம்'

இடம் : 'மந்தானகனைக் கொன்றால் போதும்' என்ற காகத்தின் உரையைக் கேட்ட சிங்கம், 'சிவ சிவ! இது மிகவும் கொடியது: அடைக்கலம் கொடுத்துக் காப்பாற்றப் பட்டவரைக் கொல்வது கொடிது' என்று கூறவும், காகம், 'அரசே! இஃது அறநீதியே யாகும். முன்னர்க் கண்ணபிரான் பாண்டவர்களைப் பார்த்து, 'ஒருவனைக் கெடுத்து ஓர் குடியாக்கலாம்' என்று கூறியுள்ளார்' என்று கூறியது.

பொருள் : 'ஒரு குடியைக் காப்பதற்கு அக்குடியில் பிறந்த ஒருவனைக் கொன்றாலும் கேடில்லை. ஆதலின், இவனைக் கொன்று நம் குலத்தைக் காக்கலாம்' என்பது பொருளாகும்.

(iv) நீயும் எற்கு நிரம்பு இரையோ

இடம் : காகத்தின் சூழ்ச்சிப்படி சிங்கத்தினிடம் காகமும் நரியும் தங்களைத் தின்று பசியாறும்படி சிங்கத்தைத் தனித்தனியே வேண்டின. அவற்றைச் சிங்கம் பார்த்து 'நீங்கள், உருவத்திற் சிறியவர்கள்; என் பசிக்குப்போதுமானவர்கள் அல்லர்' என மறுத்து விட்டது. அப்பொழுது புலி எழுந்து, தன்னைத்

தின்று பசியைப் போக்கிக்கொள்ளும்படி கூறியது. அதற்குச் சிங்கம், 'நீயும் எற்கு நிரம்பிரையோ?' என்று கேட்டது.

பொருள் : காகமும் நரியும் எவ்வாறு என் பசிக்கு ஏற்ற இரையாக மாட்டார்களோ, அஃதே போன்று நீயும் எனக்குத் தகுந்த இரையாக மாட்டாய் என்பது பொருளாகும்.

1. 'நமைக்கொல விதனம் வைத்தனர்'

இடம் : சிங்கத்தினிடம் காகத்தின் சூழ்ச்சிப்படி காகமும், நரியும், புலியும் தனித்தனியே தங்களை இரையாகக் கொள்ளும்படி வேண்டின. சிங்கம் அவ்வொவ்வொன்றையும் தன் பசிக்கு ஏற்ற இரையன்று என்று தள்ளிவிட்டது. அதனைக் கண்ட ஒட்டகம், இனி நமது முறைதான். இவர்கள் கூடி, 'நமைக் கொல விதனம் வைத்தனர்' என்று எண்ணியது.

பொருள் : 'காகமும், நரியும், புலியும் சேர்ந்து நம்மைக் கொன்று புசிப்பதற்குச் சூழ்ச்சி செய்துள்ளன' என்று ஒட்டகம் கருதியது.

2. கண்ணபிரான் கூறிய அறமுறையாகக் காகம் கூறியது என்ன?

'ஒருவனைக் கெடுத்து ஒரு குடியைக் காக்கலாம்; ஒரு குடியைக் கெடுத்து ஒரு நகரத்தைக் காக்கலாம்; ஒரு நகரத்தை அழித்து ஒரு நாட்டை அடைந்துள்ள துன்பத்தைப் போக்கலாம்' என்பது கண்ணன் கூறிய அறமுறை யாகும்.

3. பிரித்து எழுதுதல் : நன்மலர்—நன்மை + மலர்; அழைத்தேகி—அழைத்து + ஏகி; வேறிருந்திரைசெய்—வேறு + இருந்து + இரை + செய்; வெம்பசி–வெம்மை +

பசி; பசியேற்கிரை—பசியேற்கு + இரை; அடவியெலாம் —அடவி + எலாம்; திரிந்தின்னலுற்று — திரிந்து + இன்னல் + உற்று; நுங்கருத்து— நும் + கருத்து; செய்கையிதாகும்–செய்கை + இது + ஆகும்; துன்புருவகை—துன்பு + உரு + வகை; நன்றிது—நன்று + இது; இரைமற்றியாதும்—இரை + மற்று + யாதும்; விருந்துண—விருந்து + உண.

4. வேறு பெயர்கள்: காகம்–வாயசம், கொடி. நரி–சம்புகன், கோமாயு. புலி–வேங்கை.

## 13. நட்பின் பயன்

### வினு—விடை

1. இலகுபதனன்–இஃது யார்? இது கூர்ந்து கவனித்த செயல் யாது?

இலகுபதனன் என்பது கோதவரி நதிக் கரையிலிருந்த வன்னி மரத்தில் வாழ்ந்து வந்த காகம் ஆகும்.

ஒரு நாள் ஒரு வேடன் கையில் தடியும், தோளில் கூடும் வலேயும் தாங்கி அங்கு வந்தான். அவனைக் கண்டு காகம், 'இக் கொடியவன் யாது செய்வானே, தெரியவில்லேயே!' என்று அவன் செய்கையைக் கவனித்துக் கொண்டிருந்தது.

2. புருவரசு சித்திரக்கிரீவன் அங்குத் தூவப்பட்டிருக்கும் நெல்லேக்கண்டு கூறியதென்ன?

'மனிதர் நடமாட்டமில்லாத இக் காட்டில் நெல் எப்படி வரும்? யாராகிலும் கொணர்ந்து தூவியிருக்க வேண்டும். இதன் காரணம் நமக்குத் தெரிந்தாலன்றி நாம் இந்த நெல்லேத் தின்னலாகாது; எதையும் எண்ணிப் பார்த்தே செய்யவேண்டும். அப்படிச் செய்தால் ஒரு தீங்கும் நேரிடாது' என்று கூறியது.

3. துன்பமே அடையக் கூடிய அறுவர் யாவர் ?

வெட்கப்படுகிறவன், பொருமையுடையவன், களிப் படையாதவன், கபடன், தீராத ஐயமுடையவன், பிறர் பொருளால் வாழ்பவன் என்ற அறுவரும் துன்பமே அடைவர்.

4. வலையிற் சிக்கிய புருக்கள் எவ்வாறு உய்ந்தன ?

தங்கள் அரசின் சொல்லைக் கேளாத புருக்கள் வேடன் விரித்திருந்த வலையிற் சிக்குண்டு தங்கள் அறியாமைக்காக வருந்தின. பின்னர், சித்திரக்கிரீவன் கூறியபடியே ஒருமனப்பட்டுப் பறந்து சென்று கண்டகி ஆற்றங்கரையிலிருந்த எலியரசனான இரணிய கனிடம் அடைந்தன. புருவரசன் கேட்டுக்கொண்டதற்கு இணங்கி அதன் நண்பனான இரணியகன் வலையைத் தன் பற்களால் கத்தரித்துப் புருக்களை விடுவித்தது.

5. இவ்வுலகில் மகிழ்ச்சி யளிப்பது எது?

ஒத்த நண்பனுடன் அளவளாவுவதே இவ்வுலகில் மகிழ்ச்சியளிக்கும் செயலாகும்.

6. எப்போதும் இன்புற்று வாழ்பவர் யார்?

தலைவனிடத்தில் அன்புடைய வேலையாளும், ஏவல னிடத்தில் அன்புள்ள தலைவனும் எப்பொழுதும் இன்புற்று வாழ்வர்.

7. இப்பாடத்தினுள் காட்டப்படும் சில உண்மைகளை எழுதுக.

i. எதையும் எண்ணிப் பார்த்துச் செய்தல் வேண்டும்.

ii. வெட்கப்படுகிறவன், பொறுமையுடையவன் முதலான அறுவரும் துன்பமே அடைவர்.

iii. உளம் ஒத்த நண்பர்களுடன் கூடி மகிழ்வதே இவ்வுலகில் மகிழ்ச்சி தரும் செயலாகும்.

iv. யானையும் பறவையும் பாம்பும் கட்டுப் படுவதும் அறிஞர் வறுமையடைவதும் இயல்பு.

v. தலைவனிடத்தில் அன்புடைய வேலையாளும் ஏவலனிடம் அன்புள்ள தலைவனும் என்றும் இன்புற்று வாழ்வர்.

vi. தன்னைக் காப்பாற்றிக் கொண்ட பிறகே தன் கூட்டத்தாரைக் காப்பாற்ற முயல வேண்டும்.

8. பிரித்து எழுதுக:

ஆற்றங்கரை—ஆறு+அம்+கரை. அறிவிலி—அறிவு+இலி; வேற்றிடம்—வேறு+இடம்; அரசனுக்கினர்கள்—அரசன்+ஆக்கினர்கள்; நெடுந்தொலைவு—நெடுமை+தொலைவு; வியப்படைந்து —வியப்பு+அடைந்து.

9. பயிற்சி: இவ்வரலாற்றை இலகுபதனன் கூறுவதுபோல் எழுதுதல்.

நான் ஒரு காகம். என் பெயர் இலகுபதனன். நான் கோதாவரி யாற்றங்கரையில் உள்ள வன்னி மரம் ஒன்றில் கூடு கட்டி வாழ்ந்து வந்தேன். ஒரு நாள் ஒரு வேடன் கையில் தடியுடன் தோளில் கூடும் வலையும் ஏந்தி அங்கு வந்தான். அவனைக் கண்டு நான் ஐயங் கொண்டு அவன் செய்கைகளைக் கவனிக்கத் தொடங்கினேன். அந்த வேடன் ஆங்கோர் இடத்தில் வலையைப் பரப்பி அதன் மீது நெல் மணிகளைத் தூவி யிருந்தான். அவன் அங்கே ஒரு செடி மறைவில் மறைந்திருந்தான்.

அப்போது அங்கே ஒரு புருக் கூட்டம் பறந்து வந்து நான் இருக்கும் மரத்தின் மீது தங்கின. அக் கூட்டத்தின் அரசனுன சித்திரக்கிரீவன் மனித நட மாட்ட மில்லாத இவ்விடத்தில் நெல் மணிகள் வரக் காரணம் இல்லே. யாராவது கொணர்ந்து தூவி யிருத்தல் வேண்டும். ஆதலின் நாம் இதை அறிந்தா லன்றித் தின்னலாகாது என்றது. அதைக் கேட்ட அப் புருக்களுள் ஒன்று செருக்குற்று, மற்றையவற்றை நோக்கி நாம் இவ்வாறு ஆராய்ச்சி செய்துகொண் டிருந்தால் நமக்கு இரை கிட்டாது என்று கூறவும் எல்லாப் புருக்களும் அதனைக் கேட்டு நிலத்தில் இறங்கி வலேயிற் சிக்குண்டன. அரசப் புரு அதைப் பார்த்து வருந்தித் தானும் வலேயிற் சிக்குண்டது.

புருக்கள் தங்கள் தலேவன் சொல்லே மதியாமல் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டமைக்குப் பெரிதும் வருந்தின. அப்பொழுது புருவரசு மற்றவற்றைப் பார்த்து, "நாம் ஒரு மனத்துடன் பறந்து வேற்றிடம் செல்வோம்" என்று கூறவும், அனைத்தும் ஒரு மனத் துடன் உயர்ந்து பறந்து சென்றன. வேடன் சிறிது தூரம் ஓடிவந்து பார்த்துப் பின் ஏமாற்றத்துடன் திரும்பிச்சென்ருன். நானும் அப் புருக்களுடன் பறந்து சென்றேன்.

அப்புருவரசு அப்புருக்களைக் கண்டகி நதிக் கரையில் வாழும் தன் நண்பனுன இரணியகன் என்ற எலியரசனிடம் இட்டுச் சென்றது. இரணியகன் தன் நண்பனைக் கண்டதும் மகிழ்ச்சியுற்று, முதலில் அவனை விடுவிப்பதாகக் கூறவும் புருவரசு அதற்கு உடன்படா மல் தன் கூட்டத்தாரை முதலில் விடுவிக்குமாறு வேண் டிற்று. எலியரசனும் தன் நண்பன் விருப்பப்படியே வலேயைக் கத்தரித்துப் புருக்களை விடுவித்து முடிவில் புருவரசையும் விடுவித்தது; அவற்றிற்கு த்தான்

சேர்த்து வைத்திருந்த நெல்லைக் கொண்டு பெரு விருந்தும் அளித்தது. இதனைக் கண்ட யானும் அந்த எலியரசனை என் நண்பனாகக் கொண்டு மகிழ் வுற்றேன்.

## 14. உடைந்த பாலம்

### வினு-விடை

**1. பயணத்தில் நேர்ந்த இரண்டு இடையூறுகள் யாவை?**

மாரிக்காலத்தில் ஒருநாள் தலைவர் ஏதோ ஓர் அலுவல் காரணமாக நெடுந்தொலைவிற்குப் பயணம் செய்யக்கருதிக் கறுப்பழகன் என்ற தமது குதிரையை வண்டியில் பூட்டி, வண்டியைத் தாமே ஓட்டிச் சென்றார். வண்டிக்காரன் முனியனும் வண்டியின் பின்புறத்தில் ஏறிக்கொண்டான்.

அன்று பெருமழை பெய்ததால் வழியெங்கும் வெள்ளக்காடாக இருந்தது. வழியில் உள்ள ஆற்றில் வெள்ளம். அவ்வாற்றைக் கடக்க அமைக்கப்பட்டிருந்த மரப்பாலத்தின் மீதும் நீர் வழிந்து கொண்டிருந்தது. தலைவர் விழிப்புடன் குதிரையை ஓட்டிச் சென்று தாம் அடைய வேண்டிய இடத்தை அடைந்தார்.

அங்கே தலைவர் வேலையை முடித்துக் கொண்டு மாலையில் ஊர் திரும்பினர். அப்போது காற்று வேகமாக வீசியது. சிறிது தூரம் சென்றதும் புளிய மரம் ஒன்று காற்றால் வேருடன் பெயர்ந்து வீழ்ந்து பாதை முழுவதையும் அடைத்து விட்டது. கடவுள் அருளால் அவர்கள் இந்த முதல் இடையூற்றிலிருந்து தப்பினர்கள்.

பின்னர்க் குறுக்கு வழியாகப் பாலத்தை அடைந்தார்கள். அப்பொழுது இருட்டிவிட்டது. குதிரை பாலத்தின் மீது அடியைவைத்ததும் அப்பாலத்தில் ஏதோ பழுது ஏற்பட்டது போன்ற உணர்ச்சி அதற்கு ஏற்பட்டது.

அதனால் அது கல்லைப்போல் அசையாமல் நின்று விட்டது. தலைவரும் முனியனும் அக்குதிரையை எவ்வளவோ சமாதானப்படுத்தி ஓட்டியும் அஃது அசையவில்லை. அதனால் முனியன் ஐயமுற்று அப்பாலத்தின் நிலையை அறிய முன்னே சென்றான். அப்பொழுது பாலத்தின் காவற்காரன் "பாலம் பழுதுபட்டு இருக்கிறது; ஆகையால் வண்டியை ஓட்டி வர வேண்டாம்" என்று கத்திக் கொண்டே ஓடிவந்தான். பின்னர் தலைவர் குதிரையின் அறிவை மெச்சி வேறு வழியாக வண்டியை ஓட்டிச்சென்று இரண்டாவது விபத்திலிருந்தும் இறைவன் அருளால் உயிர் தப்பினார். பயணத்தில் ஏற்பட்ட இரண்டு விபத்துக்கள் இவையே ஆகும்.

2. இடையூற்றிலிருந்து தலைவரும், முனியனும் தப்பிப் பிழைத்தற்குக் காரணம் யாது?

இடையூற்றிலிருந்து அவர்கள் தப்பிப் பிழைத்தற்குக் காரணம் குதிரையின் நுண்ணறிவே ஆகும். பாலம் உடைந்ததை உணர்ச்சியினால் அறிந்த குதிரை எவ்வளவோ தன்னைத் தலைவர்கள் மேலே போகுமாறு தூண்டியும் அது செல்லவில்லை. அதனால்தான் அவர்கள் தப்பிப் பிழைத்தனர்.

3. இந்தக் கதையினால் நீ அறியும் கருத்துக்களை எழுது.

1. குதிரை பாலம் உடைந்திருப்பதை ஒலிக் குறிப்பால் அறிந்து மேலே செல்ல மறுத்தமையால், விலங்குகளுக்கும் இறைவன் நுண்ணறிவைப் படைத்துள்ளார் என்பதை அறிகின்றோம்.

2. துன்பங்கள் நாம் எதிர்பாராமலேயே நம்மை வந்து அடைகின்றன என்றும், இறைவன் அருள் இருக்குமானுல் எத்தகைய இடையூறுகளும் நமக்குத் துன்பம் செய்யமாட்டா என்றும் அறிகின்ருேம்.

3. கருப்பழகனைப் பணியாள் பாராட்டிப்போற் றினமையால் பிறர் செய்த நன்மையை நாம் மறக்காமல் போற்றவேண்டும் என்று அறிகின்ருேம்.

4. பயிற்சி: (i) சொற்பொருள்:

மாரி-மழை; வெள்ளக்காடு—நீர்ப் பெருக்கு; விழிப்புடன்—கவனமாக; ஊடே—இடையே; புயல் காற்று—மழைக் காற்று; கடிவாளம்—குதிரை வாயில் மாட்டப்படும் இரும்புக் கருவி; வழிமேல் விழி வைத்து—வழியைப் பார்த்துக் கொண்டு; வயிற்றில் பாலை வார்த்தல்—மகிழ்ச்சியை உண்டாக்குதல்: அலைத்து விட்டன—வருத்தி விட்டன.

(ii) வினையை மாற்றுதல்:

| | செய்வினை | செயப்பாட்டு வினை. |
|---|---|---|
| 1. | குதிரை வண்டியை இழுத்துச் சென்றது | வண்டி குதிரையால் இழுத்துச் செல்லப் பட்டது |
| 2. | தலைவர் என்னை விழிப்புடன் ஓட்டினுர் | நான் தலைவரால் விழிப்புடன் ஓட்டப் பட்டேன் |
| 3. | எங்களைக் கடவுள் காப்பாற்றினுர் | நாங்கள் கடவுளால் காப்பாற்றப் பட்டோம் |
| 4. | விலங்குகளுக்கும் கடவுள் அறிவை அளித்திருக்கிறுர் | விலங்குகளும் கடவுளால் அறிவு அளிக்கப்பட்டு இருக் கின்றன. |

## 15. ஒட்டகச் சிவிங்கி

### வினா-விடை

**1. ஒட்டகத்தின் உடல் அமைப்பையும் அதற்கு வழங்கும் வேறு பெயரையும் எழுது.**

உலகத்தில் வாழும் விலங்குகளில் உருவத்தில் பெரியது ஒட்டகம். அது நீண்ட கால்களையும் நெடுங் கழுத்தையும் கூன் பொருந்திய முதுகையும் உடைய தாய் விளங்குகிறது.

மணற் காடான பாலைவனத்தில் கடலைப் போலப் பரந்து காணப்படும் மணல் வெளியில் பயணம் செய்யும் வணிகருக்கும் மற்றவர்களுக்கும் அஃது ஊர் தியாகப் பயன்படுவதால் அது பாலைவனக் கப்பல் எனப் பெயர் பெறும்.

**2. ஒட்டகச் சிவிங்கி–அது ஏன் அப் பெயர் பெற்றது?**

ஒட்டகத்தைப் போன்று நீண்ட கால்களையும் நெடுங் கழுத்தையும் சிவிங்கியைப் போன்ற புள்ளிகள் அமைந்த தோலையும் உடைய விநோதமான விலங்காக இருத்தலால் அது ஒட்டகச் சிவிங்கி எனப் பெயர் பெற்றது.

**3. ஒட்டகச் சிவிங்கியின் உடல் அமைப்பினைக் குறிப்பிடுக.**

ஒட்டகச் சிவிங்கி சற்றேறக் குறைய 6 மீட்டர் உயரம் இருக்கும். இதன் கால்கள் மிக நீளமானவை; ஒரே அளவுடையவை. ஆயினும் பார்வைக்கு முன்னங் கால்கள் பின்னங் கால்களை விட நீளமானவை போலத் தோன்றும். அதன் உடல் முழுவதும் இலைகளைப் போன்ற புள்ளிகள் அமைந்திருக்கும். அதன் கால்கள் ஒவ்வொன்றிலும் இவ்விரண்டு குளம்புகள் உள்ளன.

அதன் தலையில் குஞ்சம் போன்ற மயிர் அடர்ந்த இரு சிறு கொம்புகள் உள்ளன. அதன் கண்கள் பளபளப்புடன் அழகாகக் காட்சி அளிக்கும். முகம் சற்றேறக் குறைய ஒட்டகத்தின் முகத்தை ஒத்திருக்கும். அது தீனியைத் தின்னும் போதும் மணற் காற்ருகிய சூருவளி வீசும் போதும் தன் நாசித் துவாரங்களை மூடிக் கொள்ளும் இயல்புடையது. அதன் நாக்கு நீளமானது. இதன் வால் நுனியில் மயிர் குஞ்சமாகப் அடர்ந்திருக்கும்.

**4. ஒட்டகச் சிவிங்கியின் இயல்புகளை வரைக.**

ஒட்டகச்சிவிங்கி அமைதியான குணம் படைத்தது. பிறருக்குத் தீங்கு செய்யாத இயல்பு உடையது. ஆயினும் அது தன்னைத் துன்புறுத்துபவரைத் தன் பின்னங்கால்களால் உதைத்து விரட்டி விட்டு விரைந்து ஓடிவிடும். அஃது ஓடத்தொடங்கினல் அதன் ஓட்டத்தைப் பந்தயக் குதிரையாலும் வெல்ல முடியாது. அது கோபங் கொண்டால் விலங்கு அரசாகிய சிங்கத்தையும் எதிர்த்துப் போராடும் ஆற்றல் வாய்ந்தது. அது கூடி வாழும் இயல்புடையது.

**5. ஒட்டகச் சிவிங்கியால் ஏற்படும் நன்மைகள் யாவை?**

1. அதன் இறைச்சி மிகவும் சுவை உள்ளது ஆதலின் மக்கள் அதனை வேட்டையாடிக் கொன்று தின்கின்றனர்.

2. அதன் தோல் சிறந்த விலை பெறக்கூடியது. செல்வர்களின் வீடுகளில் அத்தோல் அழகிய விரிப்பாகவும் குதிரை ஓட்டும் சவுக்குச் செய்யவும் பயன் படுத்தப் படுகிறது.

3. மக்கள் அவற்றைப் பிடித்துப் பழக்கிக் காட்சிச் சாலைகளில் காட்சிப் பொருளாக வைக்கின்றனர்.

6. பயிற்சி :

1. சொற்பொருள்: வியக்கத்தக்க—ஆச்சரியப்படும் படியான; விண்—ஆகாயம்; ஊர்தி—வாகனம்; சூருவளி—சூறைக்காற்று; அரிமா—சிங்கம்; நாசித் துவாரம்—துளை; இறைச்சி—மாமிசம்.

2. வாக்கியத்தில் அமைத்தல்: ஒவ்வொன்று, இவ்விரண்டு, ஊர்தி, அரிமா.

1. இம் மாம்பழங்களை தலைக்குத் ஒவ்வொன்ருகக் கொடு.

2. திருக்குறள் பாட்டுக்கள் ஒவ்வொன்றும் இவ் விரண்டு அடிகளாக அமைந்துள்ளன.

3. அயல் நாடுகளுக்கு நாம் வானவூர்தியில் ஏறிச் செல்லாம்.

4. வன விலங்குகளுக்கு அரசு அரிமா ஆகும்.

## 16. திருப்பூர்க் குமரன்

(இச் செய்யுட்களை இயற்றியவர் திரு பெரியசாமி தூரன் ஆவர். இவர் இனிய பாடல்களை எளிய முறையில் அமைத்துள் ளார். சிறந்த உரை நடை நூல்களும் எழுதி உள்ளார்.)

கருத்துரை:—

1. "அன்பின் வடிவாய் விளங்கும் என் தாயே! உன்னை நான் வணங்குகிறேன். நான் என் பணியை நாட்டிற்காகச் செய்ய நீ எனக்கு இன்பமுடன் விடை தருவாயாக"

2. என்று திருப்பூர்க் குமரன் கூறி வணங்கத் தாயும் புன்னகை புரிந்து, 'மகனே! வளம்பெறவிரும் பும் திருப்பூரின் செல்லமே! நீ நன்கு குறிப்பிட்டாய்.

3. தேடுதற்கு அரிய நம் காந்தி அண்ணலை இத் தேசத்தின் தலைவராக நாம் பெற்று உள்ளோம். பாடுதற்கு அரிய தமிழ் மகனின் புகழ் இவ்வுலகெங்கும் பரவிட நீ செல்லுவாய்"

4. [என்று கூறக் குமரன்] கொடியைக் கையில் வணங்கி வாங்கினுன். வானத்தில் மூன்று வண்ணங் களும் ஒளி வீசின. தாயும் அவன் வெற்றியை வேண்டி அவன் நெற்றியில் திலகம் இட்டாள்.

5. காளை போன்ற வீரனும் "ஜெய ஜெய பாரதம்" என்று கூறித் தலை நிமிர்ந்து சென்றுன். அவனைத் தொடர்ந்து பல்லாயிரக் கணக்கான மக்கள் ஜெய ஜெய என்று கூறிச் சென்றனர்.

6. அப்பேரொலி வானத்தைப் பிளந்தது. மக்கள் உள்ளத்தில் அடிமைத் தளையும் தளர்ச்சியுற்றது. வீரக் குமரன் ஆண் சிங்கம் போலத் தடை உத்தரவை மீறித் தெருவில் ஊர்வலம் வந்தான்.

7. அன்னியர் ஆட்சியின் சூழ்ச்சியின்காரணமாக மிக அஞ்சிப் பணிகின்ற சேவகன் ஒருவன் முன் வரிசையில் கொடியோடு வரும் மனவலிமை படைத்த வீரனுகிய குமரனை [அணுகினுன்.]

8. அருகில் வந்த அவ்வறிவற்றவன் குமரன் மண்டையில் ஓங்கி அடித்தான். அதைக் கண்டவர் உள்ளம் கோபத்தால் கொதித்தது. காளையாகிய குமரனே 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று கூவினுன்.

9. "அமைதியே உருவான அண்ணல் காந்தி மகான் பெயரைக் கேட்டதும் மக்கள் அனைவரும் தங்கள் கோபமாகிய நெருப்புச் சிறிது தணியப்பெற்ற னர். நாங்கள் "காந்தியின் கட்டளையை மீறமாட்டோம். பகைவனின் கைத்தடியைக் கண்டும் சீற மாட்டோம்."

10. என்று குமரன் கூறினுன். அவனுடைய இனிய மொழி பேசுகின்ற வாயின் மேல் அப்பாவிச் சேவகன் அடித்தனன். குன்று போல் நின்ற நம் வீரனும் தன் வெற்றி முழக்கத்தை மேலும் மேலும் முழக்கினுன்.

11. அப்பாவியாகிய சேவகனே குமரனின் மார்பிலும், கையிலும், காலிலும் மாறி மாறி வேகமாக அடித்தான். குமரன் அவ்வடியால் பார்வை கலங்கிய போதும் 'பாரதமே! நீ வாழ்க' என்று கூவினான்.

12. உடலை நொறுக்கி அடக்கினாலும் உள்ளத்தில் எழுகின்ற ஆசை அடங்கி விடுமோ? கடலின் கொந்தளிப்பைச் சிறு தடி கொண்டு அடக்கி விட முடியுமோ? முடியாது அன்றோ.

13. வானத்தில் மூவர்ணக் கொடியும் பறந்தது. ஆனால், குமரனே மயங்கி மண்ணில் விழுந்தான். அவன் உடலிலிருந்து வடியும் இரத்தம், அடிமை என்னும் குற்றத்தைப் போக்கி மண்ணில் படிந்தது.

14. "என்னை அடித்த அடிகளெல்லாம் பாரதத் தாயின் அடிமை விலங்கை உடைத்தன. அவள் தன் பழம் புகழை மீண்டும் அடைவாள். என் கடைசி மூச்சில் நான் இதைக் கூறுகின்றேன்.

15. "ஜெய ஜெய பாரதம்" என்று கூறிப் பாரதத் தாயின் மடியில் வீழ்ந்தான். அவளும் அவனை அன்புடன் தன் மடியில் ஏற்றனள். அனைவரும் "ஜெய ஜெய" என்று முழங்கினர். குமரனும் என்றும் அழியாத உண்மையைப் போல, அழியாப் புகழைப் பெற்று விளங்கினான்.

## வினா-விடை

**1. திருப்பூர் விளங்க வந்த செல்வன் யார்? அவன் கொடி பிடித்து வீதியில் சென்ற தன்மையை விவரி.**

திருப்பூர்க் குமரன் என்னும் வீரத் தொண்டனே திருப்பூர் பெற்ற செல்வமாகும். மூவர்ணக் கொடியைக் கையில் ஏந்தி அதன் வண்ணம் வானத்தில் ஒளியிட "ஜெய ஜெய பாரதம்" என வீரமொழி புகன்று வீதியிற் சென்றான்.

2. குமரனைத் தாய் எவ்வாறு போற்றி வழி அனுப்பினுள்?

குமரனின் தாய், "மகனே, அண்ணல் காந்தியை நாம் நமது அரிய தலைவராகப் பெற்றுள்ளோம். தமிழ் மகன் புகழ் பாரெங்கும் வீசும்படி நீ செல்லுவாயாக" என்று அவனுக்கு வாழ்த்துக் கூறி, நெற்றியில் பொட்டிட்டு வெளியே அனுப்பினுள்.

3. சேவகன் குமரனை அடித்தபோது அவன் கூறிய வீர உரை என்ன?

"நாங்கள் காந்தியின் ஆணையை மீறமாட்டோம். பகைவன் கைத்தடியின் மீதும் கோபம் கொள்ள மாட்டோம்" என்றும், அடிபட்டு ஆவி துறக்குங்கால் "சேவகன் என்னை அடித்த அடியெல்லாம் அன்னை பாரதத் தாயின் அடிமை விலங்கை உடைத்தன. அவள் தன் பழம் புகழைப் பெறுவாளாக. ஜெய ஜெய பாரதம்" என்றும் வீர முழக்கமிட்டான்.

4. திருப்பூர்க் குமரனைப்பற்றிய பாடல் பகுதியால் நீ அறியும் உண்மை யாது ?

கடலின் கொந்தளிப்பைச் சிறு தடியைக்கொண்டு அடக்கிவிட முடியாது. அதுபோல உடலை அடித்து நொறுக்கினுலும் உள்ளத்தில் இருக்கும் நாட்டுப்பற்றை அழித்துவிட முடியாது என அறிகின்றோம்.

## பயிற்சி

### சொற்களின் பொருள் வேறுபாடு

பணி–தொண்டு; பனி–குளிர்ச்சி; வளம்–செழிப்பு; வலம்–வலப் பக்கம்; அறிய–அறிந்து கொள்ள; அரிய–அருமையான; காளை–காளைமாடு; காலை–காலைப் பொழுது; மணம்–வாசனை; மனம்–நெஞ்சம்; மூளை–மண்டையினுள் ஓர் உள்ளுறுப்பு; மூலை–ஒருபக்கம்; விலங்கு–மிருகம்; விளங்கு–தோன்று; புகழ்–புகழ்ச்சி; புகல்–சொல்.

# 17. சர் ரானல்டு ராஸ்

## வினு-விடை

**1. மருத்துவத் துறை ஆராய்ச்சியாளர்களால் உண்டான நன்மைகளை விவரி.**

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பது பழமொழி'. இக் குறைவற்ற செல்வத்தை மக்களுள் பலர் பெருது வருந்துகின்றனர். உலகத்தில் பற்பல காரணங்களால் எண்ணற்ற மக்கள் நோய்வாய்ப்பட்டு உயிர் இழக்கின்றனர். பெரும்பாலான நோய்கள் நச்சுக் கிருமிகளால் உண்டாகின்றன என்பதை மருத்துவத் துறை ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்து அறிந்து வெளியிட்டுள்ளார்கள். அந் நோய்களை நீக்கும் மருந்துகளையும் கண்டு அறிந்து உலகிற்கு உதவினுர்கள். அதனுல் பெரும்பான்மையான நோய்கள் நீக்கப்பட்டு மக்கள் அளப்பரும் நலம் பல பெற்று வாழ்கின்றுர்கள்.

**2. மலேரியா—இதனைப் பற்றிய சிறு குறிப்பு வரைக.**

மலேரியா இச் சொல் இலத்தீன் மொழியில் உள்ளதாகும். இச் சொல்லுக்குத் தீய காற்று என்பது பொருள். மருத்துவர் பலரும் நச்சுக் காற்றே மலேரியாக் காய்ச்சலுக்குக் காரணம் என்று கருதினர். அதுவே மலேரியாக் காய்ச்சல் என்று பெயர் பெற்றது.

மலேரியாக் காய்ச்சலுக்கு அறிகுறிகள் தலைவலி, உடல் நடுக்கம், குளிர்க் காய்ச்சல் என்பவை ஆகும். இக் காய்ச்சலால் நமது நாட்டில் மட்டும் ஆண்டு தோறும் பல்லாயிரம் மக்கள் இறக்கின்றனர். இந் நோய்க்கு உரிய உண்மையான காரணத்தைக் கண்டறிய முயன்று அதில் வெற்றி பெற்றவர் சர். ரானல்டு ராஸ் என்ற மருத்துவரே ஆவர்.

**3. சர். ரானல்டு ராஸ் எப்பொழுது எங்குப் பிறந்தார்?**

சர். ரானல்டு ராஸ் இந்தியாவில் ஐக்கிய மாகாணம் என்று வழங்கப்பட்ட இன்றைய உத்தரப்பிரதேசத்தில் அல்மூரா என்னுமிடத்தில் 1857 ஆம் ஆண்டு மே திங்கள் 13 ஆம் நாள் பிறந்தார்.

**4. மலேரியாக் காய்ச்சலை உண்டாக்கும் நச்சுக் கிருமிகள் யாவை? அவை பரவும் விதத்தை எழுதுக.**

மலேரியாக் காய்ச்சலை உண்டாக்கும் நச்சுக்கிருமிகளை உண்டாக்கும் நுண்கிருமிகள் பிளாஸ்மோடியம் எனப் பெயர்பெறும். இந் நச்சுக்கிருமிகளைப் பரவச் செய்வன அனோபிலிஸ் என்ற ஒரு வகைக் கொசுக்களில் பெண் கொசுக்களே ஆகும். அக்கொசுக்கள் மக்களைக் கடித்து அக்கிருமிகளை உள்ளே செலுத்துகின்றன.

**5. சர். ரானல்டு ராஸ் செய்த அலுவல்கள் யாவை?**

சர். ரானல்டு ராஸ் தம் தந்தையார் விருப்பப்படி இலண்டனுக்குச் சென்று மருத்துவக் கல்வி பயின்றார். பின்னர் இந்தியாவிற்குத் திரும்பி வந்து 1892 ஆம் ஆண்டு இந்திய இராணுவத்தில் மருத்துவர் பதவியை ஏற்றார். இராணுவத்தில் ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் மலேரியாக் காய்ச்சலைப்பற்றி ஆராய்ந்து வந்தார். அந்நோய் பரவுதற்குக் கொசுக்களே காரணம் என்று கண்டறிந்தார். அந்நோய் பரவாதபடி பல உண்மைகளைக் கண்டறிந்து வெளியிட்டார்.

**6. மலேரியாவைத் தடுக்க எம்முறைகளைக் கையாள வேண்டும் ?**

நீர் தேங்கியிருக்கும் சகதிகளிலும், சேற்றிலுமே கொசுக்கள் முட்டையிடுகின்றன. எனவே முட்டைகளை அழிக்க நீர்நிலைகளிலும், சேற்று நிலத்திலும் மண்ணெண்ணெயை ஊற்ற வேண்டும். அப்படிச் செய்வதால் முட்டையிலிருந்து வெளிவரும் புழுக்கள் கொல்லப்படும். வீட்டுச் சாக்கடைகளையும், சுற்றுப்புறங்களையும் தண்ணீர் தேங்காவண்ணம் தூய்மையாக வைத்திருக்க வேண்டும். மக்கள் உறங்கும்பொழுது கொசுவலைக்குள் படுத்து உறங்கவேண்டும். கிருமிக்கொல்லிகளைப் பயன்படுத்திக் கொசு உண்டாவதைத் தடுக்க வேண்டும்.

**7. சர். ரானல்டு ராசுக்கு ஆராய்ச்சியில் ஊக்கம் தந்து உதவியவர்கள் யவர் ?**

சர். ரானல்டு ராசுக்கு ஆராய்ச்சித் துறையில் உதவியும், ஊக்குதலும் அளித்தவர்கள் சர். பாட்ரிக்கு மான்சன் என்பவரும், பிரான்ஸ் நாட்டு மருத்துவர் லாவெரான் என்பவருமாவர்.

**8. சர். ரானல்டு ராசுக்கு நோபெல் பரிசு கிட்டக் காரணம் என்ன ?**

சர். ரானல்டு ராஸ் மலேரியாக் காய்ச்சல் தடுப்பு முறையை ஆராய்ந்து அறிந்து வெளியிட்டார். அவர் மக்களுக்குச் செய்த இப்பெருநலத்தைப் பாராட்டி 1902ஆம் ஆண்டு அவருக்கு நோபெல் பரிசு கிடைத்தது.

---

மனப்பாடம் செய்ய வேண்டிய செய்யுட்கள்

# I. வாழ்த்துப் பகுதி

## (அ) தேவாரம்

வென்று னைப்புலன் ஐந்து மென் தீவினை
கொன்று னைக்குணத் தாலே வணங்கிட
நன்றும் நன்மனம் வைத்திடும் ஞானமாம்
ஒன்று னைக்கண்டு கொண்டதென் உள்ளமே.

## (ஆ) திருவாசகம்

காணுங் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக் — காணும்
பெரியானை நெஞ்சே! பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு.

## (இ) திவ்வியப்பிரபந்தம்

உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்
துயர்அறு சுடரடி தொழுதெழென் மனனே!

## (ஈ) இரட்சணிய யாத்திரிகம்

வானமும் பூமியும் மகிழ்கொண் டோங்கிட,
ஞானமும் நன்மையும் நனிசி றந்திட,
ஊனமும் பாவமும் ஒழியத் தோன்றிய
தீனரட் சகன்பதம் சிந்தித் தேத்துவாம்!

## (உ) சீருப்புராணம்

இருவிழி சிவந்து கனற்பொறி தெறிப்ப
எடுத்தகைக் கதையினுல் உருக்கி
வருமவர் எதிர்நின் றுருமொழி கேட்ப
மறுமொழி கொடுத்திட அறியேன்;
தருமமும் பொறையும் அறிவுமற் றறிந்துன்
றன்னையும் என்னையும் அறியப்
பெருவரம் தருவாய் ஆதிநா யகனே!
பேதியாச் சோதிமா முதலே!

# II. நீதிப் பகுதி

## (அ) திருக்குறள்

### அறன் வலியுறுத்தல்

1. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்.

2. மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன்
ஆகுல நீர பிற.

### இனியவை கூறல்

3. இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

### ஈகை

4. வறியார்க்கொன் றீவதே ஈகை; மற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

### வெகுளாமை

5. உள்ளிய எல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்.

### இன்னா செய்யாமை

6. பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.

### கல்வி

7. தொட்டனைத் தூறும் மணற்கேணி ; மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.

### கல்லாமை

8. நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

அறிவு உடைமை

9. அறிவுடையார் எல்லாம் உடையார் ; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.

குற்றம் கடிதல்

10. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

## (ஆ) நாலடியார்

கல்விச் சிறப்பு

1. வைப்புழிக் கோட்படா; வாய்த்தீயிற் கேடில்லை;
மிக்க சிறப்பின் அரசர் செறின், வவ்வார்;
எச்சம் எனஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சை; மற்றல்ல பிற.

மைந்தரது கடமை

2. சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் வீழ்ஊன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றின், தான்பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்.

## (இ) பழமொழி

கற்றார்க்கு யாதும் ஊரே

1. ஆற்றவும் கற்றார் அறிவுடையார்; அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை-- அந்நாடு
வேற்றுநா டாகா; தமவேயாம்; ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில்.

கேள்விச் சிறப்பு

2. 'உணற்கினிய இந்நீர் பிறிதுழியில்' என்னும்
கிணற்றகத்துத் தேரைபோல் ஆகார்--கணக்கினை
முற்றப் பகலும் முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று.

## (ஈ) திரிகடுகம்

### செல்வத்தை அழிக்கும் ஆயுதங்கள்

1. தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும், – முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை.

### நல்வழியை அடைக்காதவை

2. உப்பின் பெருங்குப்பை நீர்படியின் இல்லாகும்;
நட்பின் கொழுமுளை பொய்வழங்கின் இல்லாகும்;
செப்பம் உடையார் மழையனையார்; இம்மூன்றும்
செப்பநெறி தூரா வாறு.

## (உ) இன்னா நாற்பது

அடக்கம் உடையவன் மீளிமை இன்னா;
தொடக்கம் இலாதவன் தற்செருக் கின்னா;
அடைக்கலம் வவ்வுதல் இன்னா; ஆங் கின்னா
அடக்க அடங்காதார் சொல்.

## (ஊ) இனியவை நாற்பது

1. வருவாய் அறிந்து வழங்கல் இனிதே;
ஒருவர்பாங் காகாத ஊக்கம் இனிதே;
பெருவகைத் தாயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்தல் இனிது.

2. கயவரைக் கையிகந்து வாழ்தல் இனிதே;
உயர்வுள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே;
'எளியர் இவர்' என் றிகழ்ந்துரையா ராகி
ஒளிபட வாழ்தல் இனிது.

# III. கதைப் பகுதி

## (அ) நளவெண்பா

### (கலி நீங்கு காண்டம்)

#### நளன் தன் புதல்வனை வினவுதல்

1. 'உங்கள் அரசொருவன் ஆளநீர் ஓடிப்போந்
திங்கண் உறைதல் இழுக்கன்றோ? – செங்கை
வளவரசே!' என்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி எடுத்து.

#### புதல்வன் வெகுண்டுரைத்தல்

2. 'நெஞ்சாலிம் மாற்றம் நினைந்துரைக்க நீயல்லா –
தஞ்சாரோ மன்னர்! அடுமடையா! — எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலாய்! எங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி.'

#### நளன் கூறிய நயவுரை

3. 'மன்னர் பெருமை மடையர் அறிவரோ?
உன்னை அறியா துரைசெய்த — என்னை
முனிந்தருளல்!' என்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண்.

#### வீமன் நளனைக் கண்டு வேண்டுதல்

[நளன் கார்க்கோடகன் அளித்த துகில்களை அணிந்து தனது பழைய வடிவை அடைதல்.]

4. மிக்கோன் உலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோர் அருவினைபோற் போயிற்றே–அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு.

# (ஆ) அரிச்சந்திர புராணம்

## (மயான காண்டம்)

### கண்டோர் கூறுதல்

1. 'வேலைப்ப ழித்தவிழி யாளைச்சி னத்தரசன்
வெட்டென்று ரைத்தபொழுதே
சாலச்ச வங்கள்சுடு கோலிற்க டிந்துநனி
தள்ளிக்கொ ணர்ந்தபுலையன்
சீலத்தை யுங்கனக மார்பத்தை யுங்குலவு
திண்டோளை யுங்கண்டிடின்,
மாலொப்பன்; அன்றிமயி லோனொப்பன்;
அல்லதொரு
மதனொப்பன்' என்றுமருள்வார்.

### அரிச்சந்திரனும் சந்திரமதியும் மறுத்துக் கூறுதல்

2. 'செய்மை அண்மையில் உயிர்க்கொரு
துணையெனச் சிறந்த
வாய்மை யால்அகம் தூய்மையாம்;
மற்றிலை புறத்தைத்
தூய்மை செய்வது நீரலால்
சொல்லின்வே றுளதோ?
நோய்மை செய்யினும் வாய்மையே
நோன்பெமக் கறிதி'.

3. 'பதியி ழந்தனம்; பாலனை
இழந்தனம்; படைத்த
நிதியி ழந்தனம்; இனிநமக்
குளதென நினைக்கும்
கதியி ழக்கினும் கட்டுரை
இழக்கிலேம்!' என்றார்;
மதியி ழந்துதன் வாயிழந்
தருந்தவன் மறைந்தான்.

### அரிச்சந்திரன் கட்டளையும் சந்திரமதியின் அறவுரையும்

4. ‘பொருந்தும் நீத்தத்திற் புற்புத
வாழ்வைநீ மெய்யென்று
அருந்த வத்தையும் அறத்தையும்
மெய்யையும் விடுத்து
வருந்தல் மன்னவ! வழிவழி
சிறக்க’ என வாழ்த்தி
இருந்த பின்சுடர் வாட்படை
வலக்கையின் எடுத்தான்.

# IV. பல்சுவைப் பகுதி

### சீதக்காதியின் வள்ளண்மை

ஈயாத புல்லர் இருந்தென்ன, போயென்ன ?
எட்டிமரம்
காயா திருந்தென்ன, காய்த்துப் பயனென்ன ?
கைபரப்பிப்
போயா சகமென் றுரைப்போர்க்குச் செம்பொன்
பிடிபிடியாய்
ஓயாமல் ஈபவன் வேள்சீதக் காதி
ஒருவனுமே.

### மடக்கணி

சோனையுங் காத்துநல் லானையுங் காத்துத்
துரோபதைதன்
தானையுங் காத்தடைந் தானையும் காத்துத்
தடத்தகலி
மானையுங் காத்தனு மானையுங் காத்து
மடுவில் விழும்
ஆனையுங் காத்தவ னே!எனைக் காப்ப
தரிதல்லவே!

# இலக்கணம்

## I. எழுத்திலக்கணம்

### 1. மொழி முதல் எழுத்துக்கள்

#### வினா–விடை

1. மொழிக்கு முதலில்வரும் எழுத்துக்கள் யாவை? உதாரணம் தருக.

உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும் உயிர் மெய் எழுத்துக்களில் க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங என்ற பத்தும் மொழிக்கு முதலில் வரும்.

உதாரணம்: அன்பு, ஆண்மை, இனிமை, ஈகை, உயிர், ஊர், எண், ஏர், ஐந்து, ஒலி, ஓலை, ஔவை.

கண், சங்கு, தந்தை, நகரம், பல், மலை, வயல், யவனர், ஞமலி, (இங்)ஙனம்

குறிப்பு: 'ங' என்ற மெய், அகர உயிருடன் மட்டுமன்றி அ, இ, உ என்ற சுட்டுடனும், எ, யா என்ற வினவுடனும் கூடி மொழிக்கு முதலில் வரும்.

2. எல்லா உயிருடனும் கூடி மொழிக்கு முதலில் வரும் மெய்யெழுத்துக்கள் யாவை ?

க, ச, த, ந, ப, ம என்ற ஆறு எழுத்துக்களின் வருக்க எழுத்துக்கள் எல்லாம் மொழிக்கு முதலாகவரும்.

குறிப்பு : வருக்கம் என்பது தொகுதி; 'க'வ் வருக்கம் என்பது 'க' ம் முதல் 'கௌ' வரையில் உள்ள பன்னிரண்டு உயிர் மெய் யெழுத்துக்களும் ஆகும்.

3. வவ் வருக்கத்தில் மொழிக்கு முதலில் வாராத எழுத்துக்கள் யாவை?

வவ் வருக்கத்தில் வு, வூ, வொ, வோ என்ற நான்கும் மொழிக்கு முதலில் வாராத எழுத்துக்கள் ஆகும்.

4. யவ் வருக்கத்தில் மொழிக்கு முதலில் வாராத எழுத்துக்கள் யாவை?

யவ் வருக்கத்தில் யி, யீ, யெ, யே, யை, யொ என்ற ஆறு எழுத்துக்களும் மொழிக்கு முதலில் வாராத எழுத்துக்கள் ஆகும்.

5. ஞவ் வருக்கத்தில் மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள் யாவை?

ஞ, ஞா, ஞெ, ஞொ என்ற நான்கும் ஞவ்வருக்கத்தில் மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள் ஆகும்.

(ஞிமிர்தல்–எனும் சொல்லில் ஞி–வந்துளது.)

6. மொழிக்கு முதலில் வாராத எழுத்துக்கள் யாவை?

i. ட, ண, ர, ல, ழ, ள, ற, ன இவற்றின் வருக்க எழுத்துக்கள் மொழிக்கு முதலில் வாரா.

ii. தனிமெய் எழுத்துக்கள் [க் முதல் ன் வரை] மொழிக்கு முதலில் வாரா.

## 2. மொழி இறுதி எழுத்துக்கள்

1. மொழி இறுதியில் வாராத உயிர் எழுத்துக்கள் யாவை?

எ, ஒ என்ற இரண்டும் பெரும்பாலும் ஈற்றில் வருவதில்லை.

2. மொழி இறுதியில் நில்லாத மெய்யெழுத்துகள் எவை?

க், ச், ட், த், ப், ற் என்ற வல்லின மெய்கள் ஆறும் ங், ஞ் என்ற மெல்லின மெய்கள் இரண்டும் மொழி இறுதியில் நில்லாத மெய்யெழுத்துக்கள் ஆகும்.

3. உயிர் ஈறு என வழங்கப்படும் எழுத்துக்கள் யாவை?

உயிர் எழுத்துக்களுள் 'எ', 'ஒ' என்ற இரண்டும் நீங்கலாக ஏனைய பத்து உயிர் எழுத்துக்களும் மெய்யெழுத்தின் மேல் ஏறி மொழியிறுதி எழுத்துக் களாய் நிற்கும். அவை 'உயிர் ஈறு' என வழங்கப்படும்.

உ-ம். : சில (ல்+அ), பலா (ல்+ஆ), புலி (ல்+இ), தீ (த்+ஈ), வடு (ட்+உ) பூ, (ப்+ஊ), தே (த்+ஏ), கை(க்+ஐ), கோ(க்+ஓ), வௌ(வ்+ஔ).

4. மெய்யீறு என வழங்கப்படும் எழுத்துக்கள் யாவை ?

மெய்யெழுத்துக்களுள் ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் என்ற எழுத்துக்கள் மொழி இறுதி எழுத்துக் களாய் நிற்கும். அவை 'மெய்யீறு' என வழங்கப்படும்.

உ-ம்.: கண், வெரிந்(முதுகு), நிலம், பொன், மெய், வேர், பால், தெவ் (பகை), தமிழ், தோள்.

## II. சொல்லிலக்கணம்

## 2. பெயர்ச் சொல்

### வினா—விடை

1. இடுகுறிப் பெயராவது யாது ?

நம் முன்னோர்கள் காரணம் கருதாமல் பொருள் களை அறிதற்கு இட்டு வழங்கிய பெயர் இடுகுறிப் பெயர் ஆகும்.

உ-ம். : நிலம், நீர், தீ, காற்று, வான்.

2. காரணப் பெயராவது யாது ?

ஏதேனும் ஒரு காரணம் பற்றி வழங்கிய பெயர் காரணப்பெயர் ஆகும்.

உ-ம். : அணி [அழகு. அழகு படுத்துதலால் அணி]

வளை [சங்கு. சங்கை வட்டமாக அறுத்துச் செய்யப் பட்டதால் வளை]

சிலம்பு [சிலம்புதல்-ஒலித்தல்; பெண்கள் காலில் அணியப்பட்டு ஒலிப்பதால் சிலம்பு]

3. இடுகுறிப் பெயரும் காரணப் பெயரும் எவ்வெவ் வாறு வழங்கப்படும்? அவற்றை விளக்குக.

இடுகுறிப் பெயரும் காரணப் பெயரும் இடுகுறிப் பொதுப்பெயர், இடுகுறிச் சிறப்புப் பெயர் எனவும் காரணப் பொதுப் பெயர், காரணச் சிறப்புப் பெயர் எனவும் வழங்கப்படும்,

i. இடுகுறிப் பொதுப் பெயர்: பல பொருள் களுக்கும் பொதுவாக இட்டு வழங்கும் பெயர் இடுகுறிப் பொதுப் பெயர் ஆகும்.

உ-ம்.: மரம். பாம்பு. (இவை பல மரங்களுக்கும் பல பாம்புகளுக்கும் பொதுவாக வழங்கப்படுவன.)

ii. இடுகுறிச் சிறப்புப் பெயர்: பல பொருள்களுள் ளும் ஒரு பொருளைச் சிறப்பாகக் குறிப்பது இடுகுறிச் சிறப்புப் பெயர் ஆகும்.

உ-ம்.: தென்னை, சாரை. [இவை மரங்களுள் ஒரு வகையையும், பாம்புகளுள் ஒரு வகையையும் சிறப்பாகக் குறிப்பிடுவதால் இடுகுறிப் பொதுப் பெயர் ஆயின.]

iii. காரணப் பொதுப் பெயர்: பலவற்றுக்குப் பொதுவாய் வழங்கும் காரணப்பெயர் காரணப்பொதுப் பெயர் ஆகும்.

உ-ம்.: அணி. [இது அணியப்படும் அணிகளுக்கெல்லாம் பொதுவான பெயர்.]

iv. காரணச் சிறப்புப் பெயர்: ஒவ்வொருவகைக்கே சிறப்பாக வழங்கும் காரணப் பெயர் காரணச் சிறப்புப் பெயர் ஆகும்.

உ-ம்.: வளை, சிலம்பு [இவை காரணப் பெயர்களுள் ஒவ்வொரு வகையைச் சிறப்பாகக் குறிப்பதால் காரணச் சிறப்புப் பெயர் ஆகும்.]

4. சுட்டுப் பெயர், வினைப் பெயர்களை விளக்கி உதாரணம் தருக.

i. சுட்டுப்பெயர்: பொருள்களைச் சுட்டிக் காட்டும் சுட்டெழுத்துக்களை முதலில் உடைய பெயர்கள் சுட்டுப் பெயர்கள் ஆகும்.

உ-ம்.: அவன், அவள், அவர், அது. அவை.
இவன், இவள், இவர், இது, இவை.

ii. எ. யா என்னும் வினவெழுத்துக்களை முதலிற் பெற்று வினப் பொருளைத் தரும் பெயர்கள் வினப் பெயர்கள் ஆகும்.

உ-ம்.: எவன், எவள், எவர், எது, எவை.
யாவன், யாவள், யாவர், யாது, யாவை.

குறிப்பு: இச் சுட்டுப் பெயர்களும் வினப் பெயர்களும் ஐம்பாற் பொருள்களையும் சுட்டியும், வினவியும் வருதலை அறிக.

5. ஆகு பெயர் என்றால் என்ன ? விளக்கி உதாரணம் தருக.

ஒருபொருளுக்கு வழங்கும் இயற் பெயர் பழங் காலந்தொட்டு அப்பொருளோடு தொடர்புடைய வேறொரு பொருளுக்கு ஆகிவருபவை ஆகுபெயர் ஆகும். [ஆகுபெயர் பொருளாகுபெயர், இடவாகு பெயர், காலவாகுபெயர், சினையாகுபெயர், பண்பாகு பெயர், தொழிலாகுபெயர் எனப் பலவகைப்படும்.]

உ-ம். : (i) தாமரைக்கை; இதனுள் தாமரை என்னும் கொடியின் பெயர் அதன் மலருக்கு ஆகியது. ஆகை யால் இது பொருளாகுபெயர் ஆகும். இது முதலாகு பெயர் என்றும் பெயர் பெறும்.

(ii) ஊர் அடங்கிற்று; இதனுள் ஊர் என்னும் இடத்தின் பெயர் அதில் உள்ள மக்களுக்கு ஆகி வந்த தால் இஃது இடவாகுபெயர் ஆகும்.

(iii) கார் அரிசி: இதனுள் கார் என்னும் மழைக் காலத்தின் பெயர் அக்காலத்தில் விளைந்த நெல்லின் அரிசிக்கு ஆகி வந்ததால், இது காலவாகு பெயர் ஆகும்.

(iv) வெற்றிலை நட்டான்: இதனுள் வெற்றிலை என்னும் சினையின் [உறுப்பின்]பெயர் அதன் கொடிக்கு [முதற்பொருளுக்கு] ஆகி வந்ததால் இது சினையாகு பெயர் ஆகும்.

(v) வெள்ளை அடித்தான் : இதனுள் வெள்ளை என்ற நிறப் பண்பின் பெயர் அந்நிறத்தை யுடைய சுண்ணாம்புக்கு ஆகி வந்ததால் இது பண்பாகு பெயர் ஆகும்.

(vi) சுண்டல் தின்றான், இதனுள் சுண்டல் (சுண்டிப் போதல்) என்னும் தொழிலின் பெயர் அத் தொழிலையேற்ற பொருள்களுக்கு ஆகி வந்ததால் இது தொழிலாகு பெயர் ஆகும்.

6. வேற்றுமை என்பது யாது? அஃது எத்தனை வகைப்படும்?

தன்னை யேற்ற பெயரின் பொருளை வேறு படுத்துவது வேற்றுமை ஆகும்.

உ-ம்.: முருகன் கண்டான்.
வேலன் முருகனைக் கண்டான்.

இவற்றுள் முருகன் என்ற சொல் முதல் வாக்கியத்தில் எழுவாயாக இருக்கிறது. இரண்டாம் வாக்கியத்தில் அச்சொல் 'ஐ' என்ற வேற்றுமை உருபை ஏற்றதால் செயப்படுபொருள் ஆயிற்று. இவ்வாறு பொருளில் வேறுபடும். இங்ஙனம் பொருளை வேறுபடுத்தும் சொற்கள் [இடைச் சொற்கள்] வேற்றுமைஉருபு எனப்படும்.

வேற்றுமை, முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை, மூன்றும் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறும் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை, எட்டாம் வேற்றுமை என எட்டு வகைப்படும்.

7. வேற்றுமை உருபு என்றால் என்ன ?

வேற்றுமையைக் காட்டவரும் அடையாளச் சொல் வேற்றுமைஉருபு எனப்படும். அவ்வுருபுகள் தங்களை ஏற்ற பெயரின் பொருளை வேறுபடுத்தும் பொருட்டு அப்பெயரின் பின் வரும், ஐ, ஆல் முதலிய இடைச் சொற்கள் ஆகும்.

8. உருபு உடைய வேற்றுமைகள் எவை ?

முதல் வேற்றுமையும் எட்டாம் வேற்றுமையும் நீங்கலாக எஞ்சியுள்ள ஆறு வேற்றுமைகளும் உருபுடைய வேற்றுமைகள் ஆகும்.

9. வேற்றுமை உருபுகளை விவரி.

(i) இரண்டாம் வேற்றுமை உருபு : ஐ. [முருகனைக் கண்டான்]

(ii) மூன்றும் வேற்றுமை உருபு : ஆல், ஆன். ஒடு, ஓடு, [முருகனால் பெற்றான், முருகனொடு சென்றான் ]

(iii) நான்காம் வேற்றுமை உருபு: கு [முருகனுக்குக் கொடுத்தான்.]

(iv) ஐந்தாம் வேற்றுமை உருபு: இன், இல் [முருகனின் நல்லான் – முருகனை விட நல்லவன்; காக்கையிற் கரியது-காக்கையைப் போலக் கரியது]

(v) ஆறும் வேற்றுமை உருபு: அது, உடைய [முருகனது கை; முருகனுடைய வீடு.]

(vi) ஏழாம் வேற்றுமை உருபு : [கண், இல், மேல் கீழ் முதலியன. மனைக் கண் இருந்தான்; கடையில் வாங்கினான், மலைமேல் ஏறினான், மரத்தின் கீழ் நின்றான்]

10. எட்டாம் வேற்றுமை எவ்வாறு வரும் ? அதன் வேறு பெயர் என்ன ?

எட்டாம் வேற்றுமை விளி வேற்றுமை எனப்படும். எட்டாம் வேற்றுமையை ஏற்ற பெயர்கள் ஈறு திரிதலும், ஈறு குறைதலும், ஈற்றில் ஓர் எழுத்து மிகுதலும், ஈற்றெழுத்து இயல்பாதலும், ஈற்றெழுத்துக்கு முன் எழுத்துத் திரிதலும் பெறும்.

உ-ம். : (i) நல்லாய், கேள்! – இதனுள் நல்லாள் என்ற பெயரின் ஈறு திரிந்தது.

(ii) நண்ப, வருக ! - இதனுள் நண்பன் என்ற பெயரின் ஈறு குறைந்தது.

(iii) கண்ணனே, வா ! – இதனுள் கண்ணன் என்ற பெயரின் ஈற்றில் 'ஏ' என்ற ஓர் எழுத்து மிகுந்தது.

(iv) தம்பி, படி ! – இதனுள் தம்பி என்ற பெயர் இயல்பாக நின்றது.

(v) அன்னையீர், வருக! – இதனுள் அன்னையார் என்ற பெயரின் ஈற்றுக்கு முன் எழுத்துத் திரிந்தது.

11. எந்த எந்த வேற்றுமைகளுக்கு உருபு இல்லை ?

முதல் வேற்றுமை [எழுவாய் வேற்றுமை] க்கும், எட்டாம் வேற்றுமை [விளி வேற்றுமை] க்கும் உருபுகள் இல்லை.

12. பின் வருவனவற்றில் உருபேற்ற சொற்களை எடுத்தெழுதி, அவற்றின் பெயரையும் குறி:

(1) நான் எனது வேலையை முடித்து வீட்டிற்கு வந்தேன்.

(2) என்னின் நல்லவன் என் நண்பன்.

(3) அவனுக்கு என்னிடம் அன்பு உண்டு.

(4) அதனால் அவன் எனக்குக் கடிதம் எழுதினான்.

| | | |
|---|---|---|
| எனது | – அது – | ஆறாம் வேற்றுமை |
| வேலையை | – ஐ – | இரண்டாம் வேற்றுமை |
| வீட்டுக்கு | – கு – | நான்காம் வேற்றுமை |
| என்னின் | – இன் – | ஐந்தாம் வேற்றுமை |
| அவனுக்கு | – கு – | நான்காம் வேற்றுமை |
| என்னிடம் | – இடம் – | ஏழாம் வேற்றுமை |
| அதனால் | – ஆல் – | மூன்றாம் வேற்றுமை |
| எனக்கு | – கு – | நான்காம் வேற்றுமை |

## 2. வினைச் சொல்

### (i) உடன் பாட்டு வினையும் எதிர்மறை வினையும்.

உடன்பாட்டுவினை எதிர்மறைவினை இவற்றைவிவரி.

தொழிலின் நிகழ்ச்சியைக் குறிப்பது உடன் பாட்டு வினை ஆகும். தொழில் நிகழாமையைக் குறிப்பது எதிர் மறை வினை ஆகும். இவை தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூவிடங்களிலும் வரும்.

| உ-ம். : உடன்பாடு | எதிர்மறை |
|---|---|
| நான் வந்தேன் | நான் வந்திலன் |
| நீ வருகின்றாய் | நீ வருகின்றிலை |
| அவன் உண்பான் | அவன் உண்ணான் |

### (ii) தன்வினையும் பிறவினையும்

தன்வினை, பிறவினை இவற்றை விளக்கி வரைக.

எழுவாய் தானே செய்யும் தொழில் நிகழ்ச்சிகளைத் தெரிவிப்பது தன் வினை ஆகும்; தானே செய்யாமல் மற்றொரு கருத்தாவைக் கொண்டு செய்யச் செய்வது பிற வினை ஆகும்.

| உ-ம். : தன்வினை | பிறவினை |
|---|---|
| செய்தேன் | செய்வித்தேன் |
| உண்டோம் | உண்பித்தோம் |
| கண்டாய் | காண்பித்தாய் |
| படித்தீர் | படிப்பித்தீர் |
| வந்தான் | வருவித்தான் |
| எழுதினாள் | எழுதுவித்தாள் |
| நடந்தனர் | நடப்பித்தனர் |
| கண்டது | காண்பித்தது |
| ஓடின | ஓடுவித்தன |

நிகழ்காலம், எதிர்காலங்களுக்கும் இவ்வாறே கொள்க.

| | | |
|---|---|---|
| உ-ம். : | உண்கிறேன் | உண்பிக்கிறேன் |
| | செய்வேன் | செய்விப்பேன் |

## செய்வினையும் செயப்பாட்டு வினையும்

1. செய்வினை, செயப்பாட்டு வினை இவற்றை விளக்கி வரைக.

எழுவாயின் செயலை நேரே உணர்த்தும் வினை செய்வினை ஆகும்.

உ-ம். : பசு புல்லை மேய்ந்தது.

எழுவாயின் செயற் பயனைச் செயப்படு பொருள் அடைவதைக் குறிக்கும் வினை செயப்பாட்டு வினை ஆகும்.

உ-ம்: புல் பசுவால் மேயப்பட்டது.

குறிப்பு: செய்வினை செயப்பாட்டு வினையாகும் போது முதல் வேற்றுமையாய் இருந்த எழுவாய் மூன்றும் வேற்றுமையாகவும், இரண்டாம் வேற்றுமையாய் இருந்த செயப்படு பொருள் முதல் வேற்றுமையாகவும் மாறி வரும்.

2. பின்வரும் உடன்பாட்டு வினைகளை எதிர்மறை வினைகளாக மாற்றி எழுது:

கண்டான் — கண்டிலன்.
படித்தாள் — படித்திலள்.
தின்றது — தின்றிலது.

3. பின்வரும் செய்வினை வாக்கியங்களைச் செயப்பாட்டு வினை வாக்கியங்களாக மாற்றி எழுதுக.

கண்ணன் புத்தகத்தைக் கிழித்தான் - புத்தகம் கண்ணனால் கிழிக்கப்பட்டது.

வேடன் வலையை விரித்தான் - வலை வேடனால் விரிக்கப்பட்டது.

4. பின்வரும் செயப்பாட்டு வினை வாக்கியங்களைச் செய்வினை வாக்கியங்களாக மாற்றி எழுதுக.

வேடனால் பறவைகள் பிடிக்கப்பட்டன — வேடன் பறவைகளைப் பிடித்தான்.

கடவுளால் உலகம் படைக்கப்பட்டது — கடவுள் உலகத்தைப் படைத்தார்.

## 3. இடைச் சொல்

1. இடைச் சொல்லுக்குரிய இலக்கணம் யாது?

தாமே தனித்து வழங்காமல் பெயர்ச்சொற்களையும் வினைச்சொற்களையும் தமக்கு இடமாகக் கொண்டு வழங்கும் சொற்கள் இடைச்சொற்கள் ஆகும்.

2. இடைச் சொற்கள் எவை எவை யாகும்?

(i) வேற்றுமை உருபுகள் - ஐ, ஆல், கு, இன், அது கண் முதலியன.

(ii) விகுதிகள் - அன், ஆன், அள், ஆள் முதலியன.

(iii) காலங்காட்டும் இடை நிலைகள் - த், ட், ற், இன் கிறு, கின்று, ப், வ் என்பன.

(iv) சாரியைகள் - அத்து, அல், அ, கு, முதலியவை.

(v) உவம உருபுகள் - அன்ன, இன்ன முதலியவை

(vi) சுட்டு - அ, இ, உ என்பன.

(vii) வினா - ஆ, எ; ஏ, ஓ, யா என்பன.

(viii) அசை நிலைகள் - ஏ, அரோ என்பன,

(ix) பாட்டில் இசைநிறைக்க வரும் இசைநிறைகள் இவை யாவும் இடைச்சொற்கள் ஆகும்.

## 4- உரிச்சொல்

1. உரிச் சொல்லின் இலக்கணம் என்ன? அஃது என்னென்ன வகைப்படும்?

பெயருக்கும் வினைக்கும் உரிமைப்பட்டு அவற்றின் குணத்தை விளக்க வரும் சொற்கள் உரிச்சொல் ஆகும். உரிச்சொல் பெயருக்குமுன் வரின் பெயர் உரிச்சொல் என்றும், வினைக்குமுன் வரின் வினை உரிச்சொல் என்றும் பெயர் பெறும்.

'உரிச்சொல் பெரும்பாலும் செய்யுளிலேயே பயின்று வரும்.'

உரிச்சொற்கள் ஒரு குணந் தழுவிய உரிச்சொல் எனவும், பல குணந் தழுவிய உரிச்சொல் எனவும் இரு வகைப்படும்.

2. ஒரு குணந் தழுவிய உரிச்சொல் — இதனை விளக்கி உதாரணம் தருக.

சால, தவ, உறு, நனி, கூர், கழி என்பவை மிகுதி என்னும் ஒரு குணம் தழுவி வருதலின் இவை ஒரு குணந் தழுவிய உரிச்சொல் ஆகும்.

சாலப் பசித்தது - மிகப் பசித்தது
தவப் பெரியன் – மிகப் பெரியவன
உறு மீன் – பெரிய மீன்
நனி நன்று – மிகவும் நன்று
கூர் மதி – மிகுந்த அறிவு
கழி நலம் – பெரு நன்மை

3. பல குணந் தழுவிய உரிச்சொல்லை உதாரணங் காட்டி விளக்குக.

கடி என்னும் உரிச்சொல் காப்பு, கூர்மை, விரைவு, விளக்கம் முதலான பல பொருள்களைத் தருதலால் இது பல குணந் தழுவிய உரிச்சொல் ஆகும்.

உ-ம். : கடி நகர்—காவலையுடைய நகர்.
கடி வேல்—கூர்மையான வேல்.
கடி விடுதும்—விரைவாக விடுவோம்.
கடி மார்பன்—விளக்கமான மார்பையுடையவன்.

---

# மாதிரி வினாத்தாள்

VII வகுப்பு ] தமிழ் [ $2\frac{1}{2}$ மணி

I. 1. திருநாவுக்கரசர் இறைவனை எவ்வாறு வாழ்த்துகின்றார்?

2. சிறு குறிப்பு வரைக :
திருவாசகம், திவ்யப்பிரபந்தம்.

3. தீனரட்சகன் யார்? அவர் தோன்றக் காரணம் என்ன?

4, நமக்குத் துன்பம் செய்தவர்களை எங்ஙனம் நாம் தண்டிக்கவேண்டுமென வள்ளுவர் கூறுகிறார்?

5. கற்கக் கற்க அறிவு பெருகும்—எதைப்போல்?

6. காகங்களின் இயல்பு யாவை?

7. மைந்தரது கடமை யாது?

8. கீழ்க்காணும் பழமொழிகளை விளக்கி வரைக :
(அ) பாம்பறியும் பாம்பின்கால்
(ஆ) புலித்தலையை நாய் மோத்தல் இல்

9. ' இம்மூன்றும் செல்வம் உடைக்கும் படை ''
—எம்மூன்றும்? விளக்கம் தருக.

10. 'கானகத்துக் காதலியைக் காரிருளில் கைவிட்டுப் போனதும் வேந்தற்குப் போதுமோ?'
என்று வினவிய புரோகிதனுக்கு நளன் கூறிய மறுமொழி யாது?

11. பொய்யுரைக்கத் தூண்டிய விசுவாமித்திரனுக்கு அரிச்சந்திரன் அளித்த மறுமொழி யாது?

12. கல்வியின் சிறப்பையும், அதைக் கற்கும் முறையையும்பற்றி ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கூறும் கருத்துக்கள் யாவை?

13. திருமால் காத்து அருளிய செயல்கள் யாவை ?
14. அடிபிறழாமல் எழுது :
(அ) 'இருவிழி சிவந்து' எனத் தொடங்கும் சீறுப் புராணப் பாடலையும்,
(ஆ) 'வாய்மையே கண்டாய் வலி' என முடியும் நளவெண்பாப் பாடலையும்,
(இ) 'அறிவுடையார்' எனத் தொடங்கும் குறட் பாவையும் எழுதுக.

II. 1. பொருள் கூறுக :
மாசு; வையம்: ஒறுத்தல்; வாவி; புல்லர்; களபம்; ஏவலர்; அரிமா; தறுகண்; வேழம்.
2. இருபொருள் கூறுக :
பிண்ணாக்கு; மாதங்கம்; பகடு; களபம்.
3. பிரித்தெழுதுக :
ஒண்டொடி; காரிருள்; பைந்தலை: செங்கதிரோன்: நாற்றிசை.
4. சேர்த்து எழுதுக :
வேறு + நாடு = உடன் + எய்தும் =
பல + மீன் = பிரிது + உழி + இல் =
தன் + செருக்கு + இன்று =
5. எதிர்ச்சொல் கூறுக :
இனிய; சிறியார்; சிற்றூர்; புதுமை; நிறைவு.

III. உரைநடைப் பகுதி :
1. சுதந்திரம் பெற்ற இந்திய மக்கள் ஆற்றவேண்டிய கடமைகளை எவ்வாறு நேரு விளக்குகின்றார் ?
2. 'அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்' — இவ் வுவமை எதற்காக எடுத்தாளப்பட்டுள்ளது ?
3. இரானடேயின் குண நலன்களை விவரி.
4. பெரிய புராணத்தை இயற்றியவர் யார் ? அது இயற்றப்பட்ட விதத்தினை விவரி.
5. திருக்குற்றால மலையின் கண்ணுள்ள அருவிகள் யாவை ? வடஅருவியைப்பற்றி விவரித்து எழுதுக.

6. முயற்சியின் உயர்வைப்பற்றி வள்ளுவரும், கபிலரும் கூறியிருப்பின யாவை?
7. போர்டு மோட்டார் கம்பெனி நிறுவப்பட்ட விதத்தினைச் சுருக்கி எழுது.
8. ஒட்டகச் சிவிங்கியின் இயல்புகள் யாவை?
9. சர் ரானல்டு ராஸ் உலகினுக்கு ஆற்றிய சிறப்புத் தொண்டு யாது?
10. நிகழிடமும் பொருள் விளக்கமும் கூறுக:
    (அ) 'என்னைத் தங்கள் மைந்தனென்று எண்ணவும் யான் தகுதியற்றவன்'
    (ஆ) 'யான் அறநெறி வழுவாமல் ஈட்டிய பொருளுக்கு அழிவு வராது.'
    (இ) 'ஒருநகர்கொடுத் தோர்பெரு நாடெலாம் ஒருபெருந்துன் புருவகை காக்கலாம்'
    (ஈ) 'உங்கள் வருகை எங்கள் வயிற்றில் பாலை வார்த்தது.'

IV, இலக்கணம்:

1 இடுகுறிப்பெயர், காரணப்பெயர்—இவற்றை உதாரணத்துடன் விளக்குக.
2. பின்வரும் செய்வினை வாக்கியங்களைச் செயப்பாட்டு வினை வாக்கியங்களாக மாற்றி எழுதுக:
    (அ) சேக்கிழார் பெரிய புராணத்தை இயற்றினர்.
    (ஆ) எலியரசு கட்டுகளை சேதித்தது.
3, உரிச்சொல் எத்தனை வகைப்படும்? உதாரணம் காட்டி விளக்குக,

V. அடியிற்கண்டவைகளிற் ஏதேனும் ஒன்றுபற்றி ஒரு பக்க அளவுக்கு மிகாமல் ஒரு கட்டுரை வரைக:

1. நமது பள்ளி
2. நீங்கள் சென்றுவந்த ஓர் உல்லாசப் பயணம்
3. உன் தமையனின் திருமணத்திற்குச் செல்ல 3 நாட்கள் விடுமுறை கோரி உனது ஆசிரியருக்கு ஒரு விண்ணப்பக் கடிதம் எழுதுக.

---





ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்

## ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் மடம்



இதன் அடியில் கண்டுள்ள பாட்டுகளில் ஒன்றை தினம் காலையில் சொல்லி நெற்றியில் திருநீறு (வீபூதி), திருமண் இட்டுக்கொள்ள வேண்டும்.

### ஸ்ரீ வேங்கடேசாய நமஹ

என்னும் கடவுளின் பெயரை
12 முறை சொல்லவேண்டும்.



இரவில் படுக்கும் முன்னர்
படுக்கையில் உட்கார்ந்துகொண்டே

### ஸ்ரீ வேங்கடேசாய மங்களம்

என்னும் கடவுள் நாமத்தை
12 முறை சொல்லித்தூங்கவேண்டும்.

# பாடங்கள் கால அட்டவணை

பெயர்............................. வகுப்பு............... பிரிவு.......

| வார நாட்கள் | காலை 1 | 2 | 3 | 4 | 5 | 6 | மாலை 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|---|
| திங். | | | | | | | । | |
| செவ். | | | | | | | | |
| புத. | | | | | | | | |
| வியா. | | | | | | | | |
| வெள்; | | | | | | | | |
| சனி | | | | | | | | |

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்திரமாவது நீறு துதிக்கப் படுவதும் நீறு.

ஓம்: நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.